# தேவி சௌதுராணி







பங்கிம் சந்த்ர சட்டோபாத்யாய

# பங்கிம் சந்த்ரர் நாவல்கள்

ஏற்கெனவே வெளிவந்தவை

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | விஷ விருக்ஷம் | 1 | 8 | 0 |
| 2. | ஆனந்த மடம் | 1 | 4 | 0 |
| 3. | துர்க்கேச நந்தினி | 1 | 4 | 0 |
| 4. | மாதங்கினி | 1 | 0 | 0 |
| 5. | இந்திரா | 0 | 12 | 0 |
| 6. | ரஜனி | 0 | 12 | 0 |

இனிவரும் பங்கிம் நூல்கள்

8. ஹிரண்மயி (இரட்டை மோதிரம்)
9. ராதா ராணி
10. கிருஷ்ணகாந்தன் உயில் - 2 பாகங்களும்
11. கபாலகுண்டலா
12. மிருணாளினி
13. சந்திரசேகரன்

☞ இப்போதே ஷை நூல்களுக்குத் தங்கள் பெயரைப் பதிவு செய்து கொள்வோருக்கு மாத்திரம், புத்தகம் வெளிவந்தவுடன், புத்தக விலையில் 20% கமிஷன் தள்ளித் தரப்படும். தபால் செலவு, வி. பி. செலவு பிரத்தியேகம்.

---

அல்லயன்ஸ் கம்பெனி, மயிலாப்பூர், சென்னை.

**மங்கையர்க் கரசியின்**
**காதல் முதலிய கதைகள்**

மகரிஷி வ. வே .சு. ஐயர் இயற்றியவை. ஸ்ரீமான் சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார் (நமது அரசாங்க முதல் மந்திரி) சிறப்புரை கொண்டது. சாதா பைண்ட். விலை அணு 12·

No 22.

பங்கிம் சந்த்ரர் நூல்—7



# தேவி சௌதுராணி

(பங்கிம் சந்த்ர சட்டோபாத்யாயர் இயற்றியது)

கு. ப. ராஜகோபாலன், பி.ஏ.,
வங்காளி மூலத்திலிருந்து மொழிபெயர்த்தது



அல்லயன்ஸ் கம்பெனி,
மயிலாப்பூர் :: சென்னை

 [1 - 4 - 0

## ஆரியமத உபாக்யானம்

அல்லயன்ஸ் வெளியீடுகளில் தலைமைவகிப்பது. தெலுங்கு கன்னடப் பதிப்புகளும் உண்டு. 1,50,000 பிரதிகளுக் கதிகம் செலவாயிருப்பதே, இவைகளின் சிறப்புக்கும் உயர்வுக்கும் தகுந்த அத்தாட்சி அல்லவா? இவைகளில் அரிய நீதிக் கதைகளும், கண்ணைக்கவரும் போட்டோ படங்களும் நிறைந்துள்ளன. சிறுவர் சிறுமிகளும் களிப்புடன் வாசிக்கக்கூடிய எளிய நடையில் இவை எழுதப்பட்டவை.

காகிதம், அச்சு, பயிண்ட் மிக நேர்த்தி

(முதல் பாகம், 23-ம் பதிப்பு) (2-ம் பாகம் 17-ம் பதிப்பு.)

விலை அணு 8 : : விலை அணு 10

ஜூபிடர் அச்சுக்கூடம், சென்னை.—(1939819111.)

# விஞ்ஞாபனம்

---

தேவி சௌதுராணியில் சிறிதளவுதான் ‘வங்க தர்சன’த்தில் வெளியாயிற்று; இப்பொழுது முழுக் கதையும் புத்தகமாகக் கொடுக்கப்பட்டிருக்கிறது.

ஆனந்தமடம் வெளியானதும் சில அன்பர்கள் அதில் சரித்திர அம்சம் அதிகமாக இல்லை என்று குறை கூறினார்கள். சன்னியாசிக் கலகம் என்ற விஷயம் சரித்திர சம்பந்தமானதுதான்; ஆனால் அது சம்பந்தமாக வாசகர்களுக்கு அதிகமான விவரங்கள் கொடுப்பது எனது வேலைக்கு உபயோகமில்லை. ஆகையால்தான் நான் அதில் அதிகமாக சரித்திர விவரங்கள் கொடுக்கவில்லை. அதை சரித்திர சம்பந்தமான நவீனமாக்க அப்பொழுது எனக்கு உத்தேசமில்லை. இப்பொழுது பலர் அபிப்பிராயத்திற்கிணங்கி வரப்போகும் பதிப்பில் சன்னியாசிக் கூட்டத்தைப்பற்றி மற்றும் பல விஷயங்கள் கூறலாமென்று உத்தேசித்திருக்கிறேன்.

தேவி சௌதுராணிக்கும் சரித்திரமூலம் இருக்கிறது. இந்த விருத்தாந்தத்தை மேலும் அறிய

விரும்புகிறவர்கள் அரசாங்க உத்தரவின்படி ஹண்டர் கொடுத்துள்ள Statistical Account of Bengal மத்தியில் ரங்கபுரம் ஜில்லா சரித்திரத்தைப் படிக்க லாம். அதில் கண்ட தேவி சௌதுராணிக்கும், நவீ னத்தில் சித்திரிக்கப்படும் தேவி சௌதுராணிக் கும் சம்பந்தம் இருக்காது. தேவி சௌதுராணி, பவானி பாடக், லெப்டினன்ட் பிரனென் முதலிய பெயர்கள் சரித்திரப் பெயர்கள். தேவியின் ஓட வாசம், வரகந்தாஜ் சைனியம் இதெல்லாங்கூட சரித்திரந்தான்.

பங்கிம் சந்த்ரர்.

# பொருளடக்கம்

## முதல் பாகம்



## இரண்டாம் பாகம்

## மூன்றாம் பாகம்



## சித்திரப் படம்



பங்கிம் சந்த்ர சட்டோபாத்யாயர்

# தேவி
# சௌதுராணி

---

## முதல் அத்தியாயம்

## தாயும் மகளும்

"அடியே பிரபுல்லா, அடியே, துரதிருஷ்டக்காரி!"

"வருகிறேன், அம்மா!"

தாய் கூப்பிட்டாள். மகள் அவள் அருகில் வந்து, "ஏன் அம்மா?" என்றாள்.

"ஏனா? கோஷ் அகத்திற்குப் போய் ஏதாவது கொஞ்சம் கீரையோ கத்தரிக்காயோ வாங்கிக்கொண்டு வரப்படாதோ?"

"என்னால் முடியாதம்மா! எனக்கு வெட்கமாய் இருக்கிறது, வெறும்மனே போகிறதென்றால்" என்றாள் பிரபுல்லமுகி.

"பின் சாதத்திற்கு என்ன தொட்டுக்கொள்ளுகிறது? வீட்டில் ஒன்றும் இல்லையே."

"வெறும் சாதத்தைச் சாப்பிட்டு விடுவோம். தினந் தினமும் எதையாவது தேடிக்கொண்டு யார் போவார்கள்?"

"அப்படித் தலையில் எழுதியிருக்கிறபொழுது என்ன செய்கிறது? விதியற்றவர்களுக்கு வெட்கம் வேறாக்கும்" என்றாள் தாய்.

பிரபுல்லா ஒன்றும் பேசவில்லை.

"பின், நீ சாதம் சமை. நான் எங்கேயாவது போய்க் கொஞ்சம் கறிகாய் பார்த்துக்கொண்டு வருகிறேன்."

"நான் உன் காலிலே விழுகிறேன்: எங்கேயும் போகாதே! வீட்டில் அரிசி இருக்கிறது; உப்பு இருக்கிறது; செடியில் பச்சை மிளகாய் இருக்கிறது. பெண்ணாய்ப் பிறந்ததற்கு அதுபோதும்."

வேறு மேலே சொல்லமுடியாமல் பிரபுல்லாவின் தாய் வாயை மூடிக்கொண்டிருந்தாள். அடுப்பில் உலைநீர் வைத்து விட்டு, அவள் அரிசியை எடுத்துக்கொண்டு வரப் போனாள்.

அரிசி களையும் பாத்திரத்தை ஒரு கையில் வைத்துக் கொண்டு, அரிசிப் பானையில் கைவிட்டுப் பார்த்தாள்.

"அரிசி இல்லையே!" என்றாள்.

பிரபுல்லா போய்ப் பார்த்தபொழுது அரை வயிற்றுச் சாதத்திற்கு ஆகக்கூடிய அரிசிதான் இருந்தது. அதுவும் ஒருவருக்குத்தான். 'தொட்டுக்கொள், துடைத்துக்கொள்' என்றிருக்கும்.

தாய் அரிசிப் பாத்திரத்தைக் கையில் எடுத்துக் கொண்டு கிளம்பினாள். "எங்கே போகிறாய்?" என்று பிரபுல்லா கேட்டாள்.

"எங்கேயாவது போய்க் கொஞ்சம் அரிசி கடன் வாங்கிக்கொண்டு வருகிறேன்."

"நமக்கு யார் தினமும் கடன் கொடுப்பார்கள்? ஒரு கொடுக்கமாட்டார்கள். நீ கடன் கேட்கப் போக ம்."

"சரிதாண்டி, என்னத்தைச் சாப்பிடுகிறது? கையிலே தம்பிடிகூட இல்லே."

"பட்டினி கிடப்போம்!"

"பட்டினி கிடந்து எத்தனை நாள் போக்குகிறது?"

"சாகிறவரையில்தான்!"

"நான் செத்துப்போன பிறகு வேண்டுமானால் நீ அப்படிச் செய். நீ பட்டினி கிடக்கிறதை என் கண்ணாலே பார்த்துச் சகிக்க முடியாது. எங்கேயாவது பிச்சை வாங்கி யாவது உனக்கு சமைத்துப் போட்டுவிடுகிறேன்."

"பிச்சை எதுக்காக எடுக்கவேண்டும்? ஒரு நாள் பட்டினிகிடந்தால் செத்தா போய்விடுவோம்? இன்றைக்கு எப்படியோ போகட்டும். நாளை முதற்கொண்டு பார்த்துக் கொள்ளுவோம். இருவருமாக நூல் நூற்போமா?"

"நூல் நூற்பதா?"

"சர்க்கா இருக்கிறதே!"

"பஞ்சேது?"

பிரபுல்லா முகம் விழுந்துபோய்த் தலை குனிந்துகொண்டு அழ ஆரம்பித்தாள். தாய் மறுபடியும் பாத்திரத்தை எடுத்துக்கொண்டு அரிசி கடன்வாங்கப் புறப்பட்டாள். பிரபுல்லா உடனே தாயின் கையிலிருந்த பாத்திரத்தைப் பிடுங்கித் தூரவைத்துவிட்டு திடீரென்று, "நான் ஏன் அம்மா கடன் வாங்கிச் சாப்பிடவேண்டும்? எனக்குத்தான் எல்லாம் யதேஷ்டமாக இருக்கிறதே?" என்றாள்.

"எல்லாந்தான் இருக்கிறதடி அம்மா! அதிருஷ்டம் மட்டுமில்லே."

"ஏன்? நான் என்ன தப்பிதம் செய்தேன்? மாமனார் அன்னம் இருக்கும்பொழுது நான் ஏன் சாப்பிடக்கூடாது?"

"துரதிருஷ்டக்காரியான என் வயிற்றில் பிறந்தாயோ இல்லையோ, அதுதான் தப்பிதம். உன் தலைவிதியுந்தான்.

இல்லாவிட்டால் நீ என் உன் சாதத்தைச் சாப்பிட்டுக்கொண்டு நீ பாட்டிற்கு இருக்கக்கூடாது?"

"இதோ பார் அம்மா! நான் இன்று ஒரு தீர்மானம் செய்துவிட்டேன். என் மாமனுர் வீட்டுச் சாதத்தை சாப்பிட வேண்டுமென்று எனக்கு இருந்தால் சாப்பிடுகிறேன். இல்லாவிட்டால் இனிமேல் சாப்பிடவே போவதில்லை. நீ கடன் வாங்கியோ எப்படியோ சாப்பிட்டுக்கொள். சாப்பிட்டுவிட்டு என்னை மாமனுர் வீட்டில் கொண்டுபோய் விட்டுவிடு."

"விட்டுவிட்டால்? அங்கே உன்னுல் என்ன ஆகும்?"

"என்ன ஆகாது, அம்மா?"

"அவர்கள் கூப்பிடவராமல் அங்கே எப்படிப் போகிறது?"

"பிறர் வீட்டில் கடன் வாங்கிச் சாப்பிட்டுக்கொண்டிருக்கலாம், என் மாமனுர் வீட்டிற்குக் கூப்பிடாமல் போகக் கூடாதோ?"

"அவர்கள்தான் உன் பெயரைக்கூட ஸ்மரிக்கிறதில்லையே?"

"வேண்டாமே? அதனுல் எனக்கு வெட்கமில்லை. என்னை வைத்துக் காப்பாற்றிப் போஷிக்கவேண்டியவர்களிடம்போய் நான் பிச்சை கேட்டால் அது எனக்கு கௌரவக்குறைவில்லை. என்னுடைய சொத்தை நான் கேட்டு வாங்கிச் சாப்பிடுகிறேன்—அதில் எனக்கென்ன வெட்கம்?"

வாயை மூடிக்கொண்டு பேசாமல் தாய் அழ ஆரம்பித்தாள்.

"உன்னைத் தனியாக இங்கே விட்டுவிட்டுப் போக எனக்கு ஆசை இல்லை. ஆனுல் என் துக்கம் குறைந்தால் உன் துக்கமும் குறையும். இந்த எண்ணத்தால்தான் நான் போக விரும்புகிறேன்."

தாயும் பெண்ணும் வெகுநேரம் தர்க்கம் செய்தார்கள். பெண்செய்த யோசனை சரிதான் என்று தாய்க்குப் பட்டது. பிறகு இருந்த கொஞ்சம் அரிசியைத் தாய் சமைத்தாள். ஆனல் பிரபுல்லா கொஞ்சங்கூடச் சாப்பிடவில்லை. ஆகையால் அவளுடைய தாயும் சாப்பிடவில்லை.

"எம்மா, இன்னும் இங்கே பொழுது போக்குவதில் என்ன லாபம்? போகவேண்டிய இடமோ வெகு தூரம்" என்றாள் பிரபுல்லா.

"இங்கே வாம்மா! உட்கார். உன் தலையைப் பின்னி விடுகிறேன்."

"வேண்டாம், அது அப்படியே இருக்கட்டும்."

"இருக்கட்டுமா? தலை வாரிப் பின்னுவதில் என்ன?"

"வேண்டாம், வேண்டாம்!"

பிறகு இருவரும் கந்தைகளை உடுத்திக்கொண்டிருந்தவாறே வீட்டை விட்டுப் புறப்பட்டார்கள்.



## இரண்டாம் அத்தியாயம்

## புக்ககம் போதல்

வரேந்திர பூமி என்ற பிரதேசத்தில் பூதநாதம் என்று ஒரு கிராமம். அங்கேதான் பிரபுல்லமுகியின் புக்ககம். அவளுடைய மாமனார் ஹரவல்லப பாபு மிகவும் பெரிய தனவந்தர். அவருக்குப் பல கிராமங்கள் சொந்தமாய் இருந்தன. இரண்டடுக்கு மாளிகை, கோவில், குளம், ஆபீஸ், மாளிகை ஜன்னலிலிருந்து தெரியும் தோட்டம், எல்லாம் இருந்தன. அங்கிருந்து பிரபுல்லாவின் பிறந்தகம் சுமார் பன்னிரண்டு மைல் தூரம். அவ்வளவு தூரமும் நடந்து, தாயும் பெண்ணும் வெறும் பட்டினியாகப் பிற்பகலில் அந்த வீட்டில் நுழைந்தார்கள்.

பிரபுல்லாவின் தாயாருக்கு உள்ளே கால் எடுத்து வைக்க எழவில்லை. பிரபுல்லா ஏழை வீட்டுப் பெண் என்பதற்காக ஹரவல்லப பாபு அவளை அலட்சியம் செய்யவில்லை. கலியாணமான பிறகுதான் ரகளை ஏற்பட்டது. அவர்கள் ஏழைக் குடும்பம் என்று தெரிந்துதான் கலியாணம் நடத்தினார் ஹரவல்லபர். பெண் மிகவும் அழகானவள். அம்மாதிரிப் பெண் வேறு எங்கேயும் கிடைக்கமாட்டாளென்றே அந்த இடத்தில் கலியாணம் செய்தார். பிரபுல்லாவின் தாயும், பெண் நல்ல இடத்தில் வாழ்க்கைப்படுகிறாள் என்ற மகிழ்ச்சியில் தன்னிடம் இருந்ததையெல்லாம் செலவழித்துச் சீர் செய்து கலியாணம் செய்தாள். அந்தக் கலியாணத்தால் அவ

ளிடமிருந்த சொத்துப் பூராவும் கரைந்துபோய்விட்டது. அது முதல் அவளுக்கு வயிற்றுச் சோற்றுக்குத் தாளந்தான். ஆனால் விதி வசத்தால் அந்தக் கலியாணம் விபரீதமாக முடிந்தது. தன்னுடைய சொத்துப் பூராவையும் செலவழித்தும்—கொஞ்சம் ரூபாய்தான் பாவம்— அந்தக் கைம்பெண்ணால், ஊர்ப்பெண்மணிகளைத் திருப்தி செய்ய முடியவில்லை. மாப்பிள்ளைத் தோழர் கோஷ்டிக்குத் தேச கால பாத்திரத்திற்கேற்றவாறு பக்ஷண வகைகளும் பழ வகைகளும் வழங்கி உபசாரம் செய்வித்தாள். கலியாணப் பெண்ணின் தோழி கோஷ்டிக்கு அந்த மாதிரி உபசாரம் நடக்கவில்லை. இது வேண்டுமென்று அவள் அவமானம் செய்தது என்று உடனே ஊரார் கருதிவிட்டார்கள். அவர்கள் எல்லோரும் கட்டுப்பாடாகச் சாப்பிடாமல் எழுந்துபோய்விட்டார்கள். இதிலிருந்து ஊராருக்கும் பிரபுல்லாவின் தாய்க்கும் சச்சரவு வலுத்தது. அவள் அவர்களை நன்றாக வைது தீர்த்தாள். அதற்காக ஊராரும் அவள் மேல் சரியான வழியில் பழி தீர்த்துக்கொண்டார்கள்.

கிருகப்பிரவேசத்தன்று ஹரவல்லபர் விடுதியில் விருந்து ஏற்பாடு செய்து ஊராரை எல்லாம் அழைத்தார். அதற்குக் கட்டுப்பாடாக ஒருவரும் போகவில்லை. ஓர் ஆளை மட்டும் அனுப்பித் தகவலைச் சொல்லி அனுப்பினார்கள்: "உங்கள் சம்பந்தி நல்ல நடத்தையுடையவள் அல்ல. அவளை ஜாதிப் பிரஷ்டம் செய்து வைத்திருக்கிறோம். அவளுடைய பெண்ணை ஹரவல்லபர் வேண்டுமானால் தம் பிள்ளைக்கு வாங்கிக்கொள்ளலாம் — பெரிய மனுஷ்யர்களுக்கு எல்லாம் சரியாகப் போய்விடும்; ஆனால் நாங்கள் எல்லாம் ஏழை. எங்களுக்கு ஜாதிதான் முக்கியம்; ஜாதிப்பிரஷ்டம் செய்யப்பட்ட பெண் பரிமாறும் பந்தியில் நாங்கள் ஜலபானம் கூட செய்ய மாட்டோம்" என்று கூடியிருந்த கும்பலின் நடுவே வந்து, அந்த ஆள் இந்த மாதிரிப் பிரசங்கம் செய்தான்.

பிரபுல்லாவின் தாய் மகளுடன் தனியாக வசித்துவந்த கைம்பெண். அவளுக்கு வயதும் அவ்வளவாக ஆகவில்லை. ஆகையால் தகவல் பொய்யாக இருக்கக்கூடுமென்று யாரும் நினைக்கவில்லை. கலியாணத்தன்று இரவு, ஊரார் ஒருவரும் பெண் வீட்டில் சாப்பிடாது போனது இதனுல்தான் போலும் என்று ஹரவல்லபர் தீர்மானித்தார். ஊரார் எதற்காகப் பொய் சொல்லப் போகிறுர்கள்? ஹரவல்லபர் அந்தப் புரளியை நம்பி விட்டார். அழைக்கப்பட்டிருந்தவர்கள் எல்லோரும் சாப்பிட்டார்கள்; ஆனுல் கலியாணப் பெண் தொட்ட சமையலை யாரும் உபயோகப்படுத்தவில்லை.

மறுநாள் ஹரவல்லபர் பெண்ணைத் தாய் வீட்டிற்கு அனுப்பிவிட்டார். அதுமுதல் பிரபுல்லாவையும் அவள் தாயையும் அவர் திரும்பிப் பார்க்கவில்லை. அது முதல் அவர்களிடையே கடிதப் போக்கு வரத்தோ பேச்சு வார்த்தையோ கிடையாது. அவர் தம் மகனை மாமியார் வீட்டுக்கு அனுப்புவதும் இல்லை. பிள்ளைக்கு வேறு கலியாணமும் செய்துவைத்துவிட்டார். பிரபுல்லாவின் தாய் ஓரிரண்டு சந்தர்ப்பங்களில் ஏதோ சாமான்கள் கொடுத்தனுப்பினுள்; ஹரவல்லபர் அவற்றை உடனே திருப்பி அனுப்பி விட்டார். ஆகையால்தான் பாவம் அவளுக்கு அந்த வீட்டு வாசலில் காலெடுத்து வைப்பதற்கு மனது கூசிற்று.

ஆனுல் எப்பொழுது அவ்வளவு தூரம் வந்தாய்விட்டதோ, பிறகு திரும்புவது உண்டா? தாயும் பெண்ணும் ஒருவிதமாக மனதைத் திடப்படுத்திக்கொண்டு வீட்டிற்குள் நுழைந்தார்கள். அப்பொழுது வீட்டு யஜமானர் பிற்பகல் நித்திரைச் சுகத்தில் ஆழ்ந்திருந்தார். வீட்டு யஜமானி — அதாவது பிரபுல்லாவின் மாமியார் — காலை நீட்டிக்கொண்டு உட்கார்ந்து நரைத்துப்போயிருந்த தலைமயிரை ஆற்றிக் கொண்டிருந்தாள். பிரபுல்லா தன் முகத்தைப் பாதி முக்கா

டிட்டு மூடிக்கொண்டிருந்தாள். அவளுக்கு அப்பொழுது வயது பதினெட்டு.

வீட்டுக்காரி அவர்களைப் பார்த்ததும், "நீங்கள் யாரம்மா?" என்று கேட்டாள்.

"என்னத்தைச் சொல்லி நான் யார் என்று உங்களுக்குச் சொல்லுவது?" என்று தாய் பெருமூச்சு விட்டுக்கொண்டு சொன்னாள்.

"ஏன்? நீங்கள் யார் என்று சொல்லுவதில் என்ன தப்பு?"

"உங்கள் சொந்தந்தான்!"

"சொந்தமா? சொந்தமென்றால் யாரம்மா?"

அப்பொழுது தாரா என்ற வேலைக்காரி ஒருத்தி அங்கே வேலை செய்துகொண்டிருந்தாள். அவள் ஓரிரண்டு தடவை — கலியாண மானபிறகு — பிரபுல்லாவின் பிறந்தகத்திற்கு வந்திருக்கிறாள். அவள் தலையெடுத்துப் பார்த்து, "ஓகோ! இவர்களா! உங்கள் சம்பந்தி!" என்று கத்தினாள்.

"சம்பந்தியா? எந்தச் சம்பந்தி?" என்று வீட்டுக்காரியம்மாள் ஆச்சரியத்துடன் கேட்டாள்.

"துர்க்காபுரத்துச் சம்பந்திதான் அம்மா! உங்கள் பிள்ளையின் முதல்தாரத்தின் தாயார்!"

கிருகிணிக்கு அர்த்தமாகிவிட்டது. உடனே அவளுடைய முகம் சிறுத்துப்போயிற்று.

"உட்காருங்கள்!" என்று சொன்னாள்.

சம்பந்தி உட்கார்ந்தாள். பிரபுல்லா நின்றுகொண்டிருந்தாள்.

"இந்தப் பெண் யாரம்மா?" என்று வீட்டுக்காரியம்மாள் கேட்டாள்.

"உங்கள் நாட்டுப்பெண்!" என்று பிரபுல்லாவின் தாய் பதில் சொன்னாள்.

இதைக் கேட்டதும் அந்தம்மாள் கொஞ்சநேரம் யோசனையி லாழ்ந்தவளாய் மௌனமாக இருந்தாள். பிறகு, "நீங்கள் எங்கே வந்திருக்கிறீர்கள்?" என்று கேட்டாள்.

"உங்கள் வீட்டுக்குத்தான்!" என்றாள் பிரபுல்லாவின் தாய் பதிலுக்கு.

"எதற்காக?"

"எதற்காகவா? என் பெண் தன் புக்ககத்திற்கு வரக்கூடாதா?"

"வரக்கூடாமலென்ன, வரலாம். ஆனால் புக்ககத்துக்காரர்கள் எப்பொழுது சொல்லியனுப்புகிறார்களோ, அப்பொழுது வரலாம். ஒழுங்கான வீட்டுப் பெண்கள் — தாமாக —வந்துவிடமாட்டார்கள்."

"புக்ககத்துக்காரர்கள் எழு ஜன்மமானாலும் பேச்சுக்கூட எடுக்காமல் இருந்தால்?"

"எப்பொழுது பேச்சே எடுக்கவில்லையோ, இங்கே எதற்காக வருகிறது?"

"சாப்பிடுவது எப்படி? நான் திக்கில்லாத விதவை; உங்கள் பிள்ளையின் பெண்டாட்டிக்கு நான் எவ்வளவு நாள் சோறுபோட்டு வைத்துக்கொண்டிருக்க முடியும்?"

"சோறுபோட முடியாவிட்டால் எதற்காகப் பெற்றீர்கள்?"

"நீ சோறுபோடும் சக்தியைக் கணக்குப்பார்த்துத்தான் குழந்தைகளைப் பெற்றிருக்கிறாயோ? உன் நாட்டுப் பெண்ணுக்கு அந்தச் சோற்றில் பாத்தியம் இருக்கிறதா இல்லையா?"

"ஐயையோ! இதேதடியம்மா! நீ என்னுடன் சண்டை போட வந்திருக்கிறாய் போலிருக்கிறதே?"

"இல்லையம்மா, இல்லை. சண்டை போட வரவில்லை, உங்கள் நாட்டுப் பெண் துணையில்லாமல் தனியாக வர

முடியாது. ஆகையால் நான் கூட்டிக்கொண்டு வந்தேன். எப்பொழுது உங்கள் பெண்ணை உங்களிடம் ஒப்புவித்தாய் விட்டதோ, இனிமேல் நான் போகிறேன்."

இவ்விதம் சொல்லிவிட்டுப் பிரபுல்லாவின் தாய் வீட்டை விட்டு வெளியே போய்விட்டாள். துரதிருஷ்டம் பிடித்தவளுக்கு அங்கே சோறுகூடக் கிடைக்கவில்லை.

தாய் போய்விட்டாள், ஆனால் பிரபுல்லா போகவில்லை. முக்காடிட்ட முகத்துடனேயே அங்கே நின்றாள்.

"உன் தாய் போய்விட்டாளே, நீயும் போயேன்!" என்றாள் மாமியார்.

பிரபுல்லா அசையவில்லை இடத்தை விட்டு.

"என்ன அசையவில்லை?"

பிரபுல்லா அப்பொழுதும் அசையவில்லை.

"ஏண்டி அம்மா! உன்னைத் திரும்பக் கொண்டுபோய் விட ஓர் ஆளை அனுப்பவேண்டுமா என்ன?"

பிரபுல்லாவின் முகத்திலிருந்த முக்காடு அகன்றது. சந்திரபிம்பம் போன்ற முகம் தென்பட்டது. கண்களில் நீர் தாரை தாரையாக வந்துகொண்டிருந்தது.

மாமியார் பார்த்துத் திகைத்துப்போனாள். 'இப்பேர்ப் பட்ட கட்டழகு பொருந்திய பெண்ணை வீட்டில் வைத்துக் கொள்ளக் கொடுத்துவைக்காமற் போய்விட்டதே!' என்று மனதிற்குள் ஏங்கினாள்.

பிரபுல்லமுகி மிகவும் தாழ்ந்த குரலில், "நான் திரும்பிப் போவதாக இங்கே வரவில்லை, அம்மா" என்றாள்.

"அதற்கென்னடியம்மா செய்கிறது? நான் ஒன்றும் செய்வதற்கில்லை. உன்னை வீட்டில் வைத்துக்கொள்ள முடியுமா? ஊரில் நாலும் சொல்லுவார்கள். குடித்தனம் தனிப் படப்படாது என்றுதான் உன்னைத் தள்ளிவைக்க வேண்டியதாயிற்று."

"குடித்தனம் பிளவுபடக்கூடாது என்று யாராவது குழந்தைகளைத் தள்ளி வைப்பதுண்டா? நான் உங்கள் குழந்தை அல்லவா, அம்மா?"

மாமியாரின் மனம் இன்னும் அதிகமாக இளகிவிட்டது.

"என்னடியம்மா பண்ணுகிறது? ஜாதிபயந்தான்."

"நான் ஜாதிப் பிரஷ்டையாய்த்தான் இருக்கிறேன் என்று வைத்துக்கொள்ளுவோம். எவ்வளவு கீழ்வகுப்பினர் உங்கள் வீட்டில் வேலை செய்துகொண்டிருக்கிறார்கள்? நானும் உங்கள் வீட்டில் வேலைக்காரியாக இருக்கிறேனே! அது கூடவா கெடுதல்?" என்று மிகவும் தாழ்ந்த குரலில் கூறினாள் பிரபுல்லா.

மாமியார் அதற்குமேல் ஒன்றும் சொல்ல முடியவில்லை.

"லக்ஷ்மி போலத்தான் இருக்கிறாய். ரூபமும் அப்படியே, பேச்சும் அப்படியே. நான் போய் உன் மாமனாரிடம் சொல்லுகிறேன், அம்மா! அவர் என்ன சொல்லுகிறாரோ? நீ இங்கேயே உட்கார்ந்து கொண்டிரம்மா!" என்று சொல்லிவிட்டு அந்த அம்மாள் உள்ளே போனாள்.

பிரபுல்லா அங்கேயே உட்கார்ந்தாள். அப்பொழுது ஒரு கதவின் பின்புறமிருந்து பதினான்கு வயது மங்கை ஒருத்தி — அழகியவள், இவள்மாதிரியே முக்காடு போட்டிருந்தவள் — பிரபுல்லாவைக் கைதட்டிக் கூப்பிட்டாள். "இதென்ன மறுபடியும்?" என்று எண்ணிக்கொண்டு பிரபுல்லா எழுந்து அவளிடம் சென்றாள்.

---

## மூன்றும் அத்தியாயம்

## சக்களத்திகள்

**வீ**ட்டு யஜமானி அம்மாள் ஆடி அசைந்துகொண்டு யஜமானரிடம் போனாள். அவர் அப்பொழுதுதான் தூங்கி எழுந்திருந்தார். எழுந்திருந்து முகம் கழுவிக்கொண்டிருந்தார்.

"யார் உங்கள் தூக்கத்தைக் கலைத்தது? இங்கே யாரும் வரவேண்டாம் என்று உத்திரவு செய்திருந்தேனே!" என்று அம்மாள் அவரைத் 'தாஜா' பண்ணும் தொனியில் பேசினாள்.

"தூக்கம் கெடுவதற்கு உண்மையான காரணம் நீதான். அதை இப்பொழுது தெரிந்துகொண்டு என்ன லாபம்?" என்று மனதில் எண்ணிக்கொண்டு, "ஒருவரும் எழுப்பவில்லை. நானேதான் எழுந்தேன் — என்ன விசேஷம்?" என்றார்.

அம்மா முகமெல்லாம் புன்முறுவல் பூக்க, "இன்றைக்கு இங்கே ஒரு பெரிய விசேஷம் — அதைச் சொல்லத்தான் வந்திருக்கிறேன்" என்றாள்.

இந்தமாதிரி பீடிகை போட்டுவிட்டு அம்மாள் நத்தையும் வளையையும் நெருடிக்கொண்டு நின்றாள். ஏன் கூடாது? அம்மாளுக்கு வயது அப்பொழுது நாற்பத்தைந்துதானே? கடைசியாகப் பிரபுல்லாவும் அவளுடைய தாயும் வந்ததும் பேசியதுமான தகவலையெல்லாம் ஆதியோடந்தமாகச் சொன்னாள். பெண்ணின் உடலழகையும் பேச்சழகையும் மறக்க முடி

யாதவளாய் அவளுக்காக மிகவும் பரிந்து பேசினாள். ஆனால் அவளுடைய மந்திர தந்திரம் ஒன்றும் சாயவில்லை. யஜமானர் முகம் வைகாசி மாதத்து மேகம்போலக் கறுத்தது.

“என்ன! அவ்வளவு தைரியமா வந்துவிட்டது அவளுக்கு? என் வீட்டில் தங்கவா? விளக்குமாற்றால் அடித்து விரட்டு உடனே வீட்டைவிட்டு?” என்று கத்தினார் ஹரவல்லபபாபு.

“சீ, சீ, அப்படியெல்லாம் சொல்லாதேயுங்கள்? ஆயிரம் ஆனாலும் நமது பையனுடைய மனைவி அவள். அவன் கைபிடித்தவள் அல்லவோ? உலகம் எவ்வளவோ சொல்லும், அதற்கென்ன வாயா வலிக்கிறது?”

ஹரவல்லபர் கழுத்திலிருந்த மாலையைக் கையால் ஏதோ செய்துகொண்டு உட்கார்ந்திருந்தார். “அந்தப் பீடையை விளக்குமாற்றால் அடித்து வீட்டை விட்டு வெளியே துரத்து?” என்றதைத் தவிர வேறொன்றும் அவர் வாயிலிருந்து வெளிவரவில்லை.

யஜமானி அம்மாளுக்குக் கோபம் வந்துவிட்டது. “விளக்குமாற்றாலா அடிக்கவேண்டும்? அந்தக் காரியத்தை நீங்களே செய்யுங்கள்! நான் இனிமேல் உங்கள் குடும்ப விஷயங்களில் தலையிடுவதே இல்லை” என்று சொல்லிவிட்டு விர்ரென்று அவள் வெளியே வந்துவிட்டாள். பிரபுல்லாவை விட்டுவிட்டுப் போனவிடத்தில் வந்து பார்த்தாள். அவள் அங்கே இல்லை.

பிரபுல்லா எங்கே போனாள் என்பது வாசகருக்கு ஞாபகம் இருக்கலாம். ஒரு கதவின் பின்புறத்திலிருந்து முக்காடிட்ட மங்கையொருத்தி, பதினைந்து வயதானவள், பிரபுல்லாவைக் கைதட்டிக் கூப்பிட்டாளல்லவா? பிரபுல்லா அங்கே போயிருந்தாள். பிரபுல்லா உள்ளே நுழைந்ததும் பெண் கதவைச் சார்த்தித் தாழ்ப்பாள் இட்டுவிட்டாள்.

"எதற்காகத் தாழ்ப்பாள் போட்டுவிட்டாய்?" என்று பிரபுல்லா கேட்டாள்.

"யாரும் இங்கே வராமல் இருப்பதற்காக—உன்னிடம் இரண்டு வார்த்தை பேசவேண்டும்—அதற்காகத்தான்" என்றாள் அந்தப் பெண்.

"உன் பெயர் என்னம்மா?" என்று பிரபுல்லா கேட்டாள்.

"என் பெயர் ஸாகரா, அக்கா!"

"நீ யார் அம்மா?"

"நான் உன் தங்கை, உன் சக்களத்தி!"

"நீ என்னை எப்படித் தெரிந்துகொண்டாய்?" என்று பிரபுல்லா ஆச்சரியத்துடன் கேட்டாள்.

"கதவிற்குப் பின்னால் இருந்துகொண்டு நீங்கள் பேசிக் கொண்டதை யெல்லாம் கேட்டுக்கொண்டிருந்தேன்."

"அப்படியானால் நீதானே வீட்டு யஜமானி?"

"அதெல்லாம் ஒன்றும் இல்லை. அவ்வளவுக்கு எங்கே அதிருஷ்டம்? அப்படி எனக்கு 'மம்மட்டிப்பல்' இருக்கா அல்லது அட்டக் கருப்பாகத்தான் இருக்கேனா?"

"அதென்ன? யாருக்கு 'மண்வெட்டிப் பல்?"

"அவளுக்குத்தான்—இந்த வீட்டு யஜமானிக்கு."

"அவள் யார்?"

"உனக்குத் தெரியாதா? — ஆமாம், உனக்கெப்படித் தெரியும்? எப்பொழுதாவது இங்கே வந்திருந்தால்தானே? நமக்கு இன்னுமொரு சக்களத்தி இருக்கிறாள், தெரியுமா?"

"என்னைத் தவிர மற்றோர் நாட்டுப்பெண் இருக்கிறாள் என்பது மட்டும் எனக்குத் தெரியும். அவள் நீதான் என்று நினைத்தேன்."

"இல்லை, அது அவள்தான். நான் வந்து மூன்று வருஷங்கள்தான் ஆகின்றன."

"அவள் என்ன அப்படி ரொம்ப விகாரமோ?"

"அவளைப் பார்த்தாலே எனக்கு அழுகை வருகிறது."

"அதற்காகத்தான் உன்னைச் செய்தார்களோ?"

"இல்லை, அதனால் இல்லை. உன்னிடம் சொல்லுகிறேன். யார் எதிரிலும் சொல்லிவிடாதே!" என்று வெகு ரகசியமாக வாயை மூடிக்காட்டி, "எங்கள் அப்பா நல்ல பணக்காரர், நான் ஒரே குழந்தை; ஆகையால் அந்தப் பணத்திற்காக—" என்றாள் ஸாகரா.

"தெரிந்துகொண்டேன். மேலே ஒன்றும் சொல்லத் தேவையில்லை. நீ ரொம்ப அழகாய் இருக்கிறாயே! அவள், அந்தக் குரூபி, எப்படி வீட்டுக்காரி (கிருகிணி) ஆனாள்?"

"நான் என் அப்பாவிற்கே ஒரே குழந்தையா? அவர் என்னை இங்கே அனுப்புகிறதே கிடையாது. மேலும் என் தகப்பனாருக்கும் மாமனாருக்கும் மனஸ்தாபம் வந்துவிட்டது. அதிலிருந்து நான் இங்கே இருக்கிறதே இல்லை. கல்கிழமைகளில் இங்கே கூட்டிக்கொண்டு வருவார்கள். நாலைந்து நாட்கள் இருப்பேன், உடனே போய்விடுவேன்."

ஸாகரா திவ்வியமான குணம் பொருந்திய பெண் என்று பிரபுல்லா கண்டாள். சக்களத்தி என்று அறிந்தும் அவள் அவளிடத்தில் அருவை கொள்ளவில்லை.

"ஆமாம், என்னை எதற்காகக் கூப்பிட்டுக்கொண்டு வந்தாய் இங்கே?"

"நீ ஏதாவது கொஞ்சம் ஆகாரம் செய்துகொள்ள வேண்டாமா?"

பிரபுல்லா சிரித்துக்கொண்டு, "எப்படியம்மா ஆகாரம் செய்வேன் இந்த நிலைமையில்?" என்றாள்.

"உன் முகம் உலர்ந்துபோய் இருக்கிறது. ரொம்ப தூரம் வந்திருக்கிறாய்—தாகம்கூட அதிகமாக இருக்கும். உன்னை

ஒருவரும் சாப்பிடக் கூப்பிடவே இல்லை. ஆகையால்தான் நான் இங்கே கூப்பிட்டுக்கொண்டு வந்தேன்."

பிரபுல்லா அதுவரையில் ஒன்றுமே ஆகாரம் செய்ய வில்லை. பசியில் பிராணன் உதட்டிற்கு வந்துவிட்டது. ஆனாலும், "மாமனர் மனதை அறிந்துவர மாமியார் போயிருக்கிறார்கள். என் அதிர்ஷ்டம் எப்படி இருக்கிறது என்பதைத் தெரிந்து கொள்ளாமல் நான் ஒன்றும் சாப்பிடமாட்டேன்" என்றாள்.

"இந்த வீட்டு சாமான் ஒன்றையும் சாப்பிடவேண்டாம். என் பிறந்தகத்து பக்ஷணம் இருக்கிறது. அதைச் சாப்பிடு" என்று சொல்லிக்கொண்டு கொஞ்சம் திரட்டுப்பால் முதலிய பக்ஷணங்களைக் கொண்டுவந்து, கொஞ்சமாக எடுத்து பிரபுல்லாவை வற்புறுத்தி சாதம் ஊட்டுவதுபோலக் கொடுத்தாள். வேறு வழியின்றி பிரபுல்லா கொஞ்சம் தின்றாள். ஸாகரா குளிர்ந்த ஜலம் கொடுத்தாள். பிரபுல்லாவிற்குக் கொஞ்சம் தெம்பு வந்தது.

"நான் சாப்பிட்டுவிட்டுக் களைப்பாறி விட்டேன். என் தாயார் பாவம் பசியால் சாகப்போகிறாள்" என்றாள் பிரபுல்லா.

"உன் தாயார் எங்கே போனாள்?"

"யார் கண்டார்கள்? ஒருவேளை வாசலில் நின்று கொண்டிருக்கிறாளோ என்னவோ!"

"ஒரு காரியம் செய்வோம்!"

"என்ன?"

"அத்தையம்மாளை அவளிடம் அனுப்புவோம்."

"அவள் யார்?"

"மாமனாருடைய அத்தை. இந்த வீட்டிலேயே இருக்கிறாள்."

"அவள் என்ன செய்கிறது?"

"உன் தாயாரைச் சாப்பிடக் கூப்பிட்டுக்கொண்டு வருவாள்."

"அம்மா இந்த வீட்டில் ஒன்றும் சாப்பிடமாட்டாள்."

"நீ சொல்லுகிறதென்ன வேடிக்கையாய் இருக்கிறதே? வேறு வீட்டிலிருந்து எடுத்துக்கொண்டு வந்தால் கூடவா?"

"ஏதோ செய்யம்மா! அம்மா படுகிற கஷ்டம் பார்க்கச் சகியாது!"

உடனே ஸாகரா ஓடிப்போய் அத்தையம்மாளிடம் விஷயம் பூராவையும் விவரமாகச் சொன்னாள்.

"அடி அம்மா, குடித்தனக்கார வீட்டிலே பட்டினி இருக்கலாமோ எங்கேயாவது? ஆகாதே. இதோ போகிறேன்" என்று சொல்லிவிட்டு அந்த அம்மாள் உடனே பிரபுல்லாவின் தாயாரைத் தேடிக்கொண்டு கிளம்பிவிட்டாள். ஸாகரா திரும்பிவந்து சமாசாரத்தைப் பிரபுல்லாவிடம் சொன்னாள்.

"சரி, அப்புறம் கதையை மேலே சொல்லு!"

"வேறென்ன கதை? நான் இங்கே இருப்பதில்லை. இருக்க முடிவதும் இல்லை. சில சாமான்கள் விசேஷதினங்களில் தான் உபயோகம்—தினசரி தேவதார்ச்சனைக்கு உபயோகப் படுவதில்லை—அதுபோலத்தான் நானும். நீயும் வந்திருக்கிறாய். எனக்கு ஒரு வழியும் தெரியவில்லை."

"நான் இங்கே இருந்து விடுவதென்றேதான் வந்து விட்டேன்; ஆனால் அவர்கள் இருக்கச் சொல்லவேண்டும்."

"இதோ பார், மாமனார் இஷ்டப்படா விட்டாலும் நீ போகாதே!"

"போகாமல் என்ன செய்கிறதடி? எதற்காக இங்கே இருக்கிறது? அப்படியாவது, இருந்தால் ஒரு வேளை—"

"என்ன ஒரு வேளை?"

"நீ என் ஜன்மத்தைக் கடைத்தேறச் செய்யக் கூடுமானால்!"

"அது எப்படி அக்கா?"

பிரபுல்லா கொஞ்சமாகச் சிரித்தாள். உடனே திடீரென்று சிரிப்பு மறைந்து அவள் கண்களில் நீர் நிறைந்தது.

"தெரியவில்லையாடி?" என்றாள் கடைசியாக.

ஸாகரா புரிந்துகொண்டாள். கொஞ்சநேரம் யோசித்துவிட்டுப் பிறகு நீண்ட பெருமூச்சு விட்டுக்கொண்டு, "நீ இருட்டின பிறகும் இங்கேயே இரு. பகலில் பார்ப்பதென்பது முடியாது!" என்றாள்.

வாசகர்கள் ஒரு விஷயத்தை ஞாபகம் வைத்துக்கொள்ள வேண்டும். நாம் நவீனப் பெண்களைப்பற்றி இங்கே எழுதவில்லை. நமது கதையின் நிகழ்ச்சி காலம் நூறு வருஷங்களுக்கு முன்பு. நாற்பது வருஷங்களுக்குமுன் கூட, யுவதிகள் எவரும் பகல்வேளையில் புருஷர்களைச் சந்தித்துப் பேச முடியாது.

"தலையில் என்ன எழுதியிருக்கிறதோ, தெரிந்து போகிறது. இப்பொழுது உன்னைக் கண்டேன். அதிருஷ்டமிருந்தால் அவரை ஒரு தடவையாவது பார்க்கலாம். அவர் வாயால் என்ன வருகிறது, என்று கேட்டுவிட்டும் போய்விடலாம்" என்று பிரபுல்லா உருகிச் சொன்னாள்.

இப்படிச் சொல்லிவிட்டு பிரபுல்லா அந்த அறையை விட்டு வெளியே வந்தாள். மாமியார் தன்னைத் தேடிக் கொண்டிருந்ததைக் கண்டாள். பிரபுல்லாவைப் பார்த்ததும் அந்த அம்மாள், "எங்கே போயிருந்தாய் பிரபுல்லா?" என்று கேட்டாள்.

"வீட்டைச் சுற்றிப் பார்த்துக்கொண்டிருந்தேன்."

"அப்படியா? இந்த வீடு உன்னுடையதுதானம்மா! என்ன செய்கிறது? உன் மாமனார் கொஞ்சங்கூட சம்மதிக்க மாட்டேன் என்கிறாரே?"

இதைக்கேட்டதும் பிரபுல்லாவுக்குத் தலையில் இடி விழுந்ததுபோலிருந்தது; தலையில் கையை வைத்துக்கொண்டு அப்படியே உட்கார்ந்து போனாள். அவளுக்கு அழுகைகூட வரவில்லை: பேச்சற்றுப் போனாள். மாமியாருக்கு அவளிடம் இரக்கம் இன்னும் அதிகமாயிற்று.

"இன்னொருதரம் அவரிடம் மன்றாடிப்பார்க்கிறேன்" என்று தனக்குள் சொல்லிக்கொண்டாள். ஆனால் அப்படி வெளியில் சொல்லவில்லை.

"இன்று இனிமேல் நீ எங்கே போகிறது? இன்று இங்கேயே இரு. விடிந்ததும் போகலாம்" என்று வெளிக்குச் சொன்னாள்.

பிரபுல்லா தலைவணங்கி, "அப்படியே ஆகட்டும். அம்மா! ஒரு விஷயம் மாமனார் அவர்களுக்குத் தெரிவிக்க வேணும். என் தாயார் சர்க்கா சுற்றிப் பிழைக்கிறாள். அந்தக் கூலி, ஒரு ஆள் ஒரு வேளை சாப்பிடுவதற்குக்கூட சரியாகப் போதாது. கேளுங்கள்—நான் என்ன செய்கிறது சாப்பிட? நான் இந்த வீட்டில் வாழ்க்கைப்பட்டவள், திக்கற்றவள்; அவருடைய பிள்ளையின் பெண்சாதி என்ன செய்து காலம் கழிப்பாள்?" என்று சொன்னாள்.

"கட்டாயம் சொல்லுகிறேன், அம்மா!" என்றாள் மாமியார்.

அதன் பிறகு பிரபுல்லா எழுந்து உள்ளே சென்றாள்.

---

## நான்காம் அத்தியாயம்

### நயனதாரா

சாயங்காலம் ஆனதும் பிரபுல்லாவும் ஸாகராவும் அறைக் கதவைத் தாளிட்டுக்கொண்டு ரகசியமாகப் பேசிக் கொண்டிருந்தார்கள். அப்பொழுது யாரோ வந்து கதவைத் தட்டினார்கள். ஸாகரா, "யாரது?" என்று கேட்டாள்.

"நான்தானடி!" என்று ஒரு பெண் குரல் கேட்டது.

ஸாகரா பிரபுல்லாவை நிமிண்டி ரகசியமாக, "அந்தப் பிராரப்தம் தான் வந்திருக்கிறாள்" என்றாள்.

"யார், சக்களத்தியா?" என்று சற்று சத்தம்போட்டுக் கேட்டுவிட்டாள் பிரபுல்லா.

"ஆமாம்! கத்தாதே!"

வந்தவள், "உள்ளே யாரடி? பேசுகிறது யார்? ஸாகராவின் குரல் கேட்கிறதே!" என்றாள்.

"நீ யார்? பரியாரி வீட்டுப்பெண் குரல் போலிருக்கிறதே!"

"நாசமாய்ப்போக! நானா அம்பட்டன் வீட்டுப்பெண்?"

"பின் யார்?"

"அடியே, அடியே, நான்தானடி, நயனதாரா!"

உடனே ஸாகரா விசனமடைந்தவள்போல் பாசாங்கு செய்து, "நீயா, அக்கா, பின் ஏன் எனக்கு அம்பட்டப் பெண் மாதிரி இருந்தது? அவளைக்காட்டிலும் நீ சிகப்பாயிற்றே!"

"நாசமாய்ப்போக! நான் என்ன அவ்வளவு கருப்பா? நீ சக்களத்தி என்று காட்டிக்கொண்டு விட்டாயே!"

"நான் உன்னைக்காட்டிலும் சின்னவள், அழகானவளும் கூடத்தான்."

"அதான் பிறந்தகத்திலேயே உட்கார்ந்திருக்கிறயாக்கும்! நான் உன்னோடே சொல்லுகிறதற்கு வந்தேனே, என்னை யல்லவா சொல்லவேண்டும்" என்றாள் நயனதாரா.

"என்ன சொல்லவேண்டும் என்று வந்தாய் சொல்லேன்?"

நயனதாரா பதில் சொல்லவில்லை.

"என்ன சொல்ல வந்தேடி?" என்று கேட்டாள் ஸாகரா மறுபடியும்.

"நீ கதவைத் திறக்கமாட்டேன் என்றால் நான் எப்படிச் சொல்லுகிறது? எப்பொழுது பார்த்தாலும் எதுக்குக் கதவைச் சாத்திவைக்கிறது? உள்ளே என்ன செய்கிறய்?" என்று நயனதாரா கேட்டாள்.

"கதவைச் சாத்திக்கொண்டு கொஞ்சம் திரட்டுப்பால் சாப்பிடுகிறேன். நீ கொஞ்சம் சாப்பிடுகிறயா?"

"நீ சாப்பிடு, எனக்குவேண்டாம்" என்றாள் நயனா. ஆனால் அவளுக்குத் திரட்டுப்பால் என்றால் ரொம்பப் பிடிக்கும்.

"இன்னும் யாரோ உள்ளே இருக்கிறர்களோ இல்லையோ?" என்று நயனா கேட்டாள்.

"இன்னும் யார்? அவரா?"

"நாசமாய்ப்போக! அப்படியா சொன்னேன்?"

"இருந்தால் என்ன? இரண்டு பாகமாகச் செய்து அவளுக்கும் கொடுக்கிறேன். உனக்கும் கூடத்தான்."

"அதெப்படித் தெரியும் உனக்கு?"

"எது?"

"நான் என்ன சொல்ல வேண்டுமென்று வந்தேனோ அதைச் சொல்லிவிட்டாயே!"

"எதை என்று சொன்னாலல்லவா நான் பதில் சொல்ல முடியும்!"

"ஆத்துக்கு இன்னுமொரு நாட்டுப்பெண் வந்திருக்கிறாள் என்பதுதான்."

"யார் அந்த நாட்டுப்பெண்?"

"அவள்தான்—மூத்தவள்!"

"யார்?"

"முன்னால் ஒருத்தியைக் கலியாணம் செய்தார்களே, கேள்விப்பட்டதில்லையா?"

"ஆமாம்!"

"அவள்தான்."

"இதைத்தான் சொல்ல இங்கே வந்தாயாக்கும், மூஞ்சியைப்பார் பிரம்மஹத்தி?" என்றாள் ஸாகரா.

"நாசமாய்ப் போக! இரு, நான் மாமியாரிடம் போய் சொல்லுகிறேன். நீ பெரிய மனிதர்கள் வீட்டுப்பெண் என்றால் என்ன வேண்டுமானாலும் சொல்லலாம் என்று நினைக்கிறாயா?"

இப்படிச் சொல்லிவிட்டு வேகமாகத் திரும்பிப்போக ஆரம்பித்தாள் நயனதாரா.

ஸாகரா பார்த்தாள். இனிமேல் 'கோட்டா' செய்தால் பிரமாதமாகப் போய்விடும் என்று தீர்மானித்து, "அடியே, இதோ பார், இங்கே வாடி, கதவைத் திறக்கிறேன்" என்று கத்தினாள்.

நயனாவுக்குக் கோபம். திரும்பிவருவதற்கு இஷ்டமில்லை. ஆனால் கதவைத் திறந்தபின் உள்ளேபோய் ஸாகரா எவ்வளவு திரட்டுப்பாலை வைத்துக்கொண்டு தின்கிறாள் என்று பார்க்கவேண்டுமென்று ஆசை. ஆகையால் திரும்பி

வந்தாள். உள்ளே நுழைந்து பார்த்தாள். திரட்டுப்பாலைக் காணோம். யாரோ ஆசாமி இருந்தது தெரிந்தது.

"இது யார்?" என்று ஸாகராவைக் கேட்டாள்.

"இவள்தான பிரபுல்லா!"

"அது யார்?"

"மூத்த நாட்டுப்பெண்!"

"ரொம்ப அழகாய் இருக்கிறாளே?"

"என் உன்னைப்போல் இல்லையா?"

"ஏண்டி, என்னைக்கண்டால் இப்படி உனக்கு? உன் மாதிரி இருக்கிறாள் என்றுதான் வைத்துக்கொள்ளேன்."

---

## ஐந்தாம் அத்தியாயம்

# மூன்று பெண்டாட்டிக்காரன்

விளக்கு வைத்த சிறிது நேரத்திற்கெல்லாம் வீட்டு யஜமானர் சாப்பிடவந்தார். அவருடைய மனைவி விசிறியும் கையுமாக அவர் பக்கத்தில் நின்றுகொண்டிருந்தாள்—ஸ்திரீ தர்மத்தைக் காப்பாற்றும் தோரணையில். ஆமாம்; எவ்வளவு துர்ப்பாக்கியவான்களுக்கு இப்பேர்ப்பட்ட ரமணீயமான தர்மத்தின் சுகம் கிடைப்பதில்லை! வீட்டுக்காரி அம்மாளுக்கு ஐந்து வேலைக்காரர்கள் இருந்தார்கள். ஆனாலும் தானே பர்த்தாவுக்கு சுச்ருஷை செய்ய வந்திருந்தாள்.

வீட்டுக்காரர் சாப்பிட்டுக்கொண்டே, "என்ன அந்தப் பெண் போய்விட்டாளா?" என்று கேட்டார். அம்மாள் நத்தை நெருடிக்கொண்டே, "ராத்திரிவேளையில் எங்கே போவாள்? ராத்திரி யாராவது விருந்தாளி வந்தால் நீங்கள் என்ன செய்வீர்கள்? அந்தமாதிரி ராத்திரி அந்தப் பெண் இங்கே இருக்கவேண்டியதுதான்" என்றாள்.

"அதிதியென்றால் சத்திரத்திற்குப் போகட்டுமே. இங்கு எதற்காக இருப்பது?"

"என்னால் போகச் சொல்ல முடியாது என்றுதான் சொல்லிவிட்டேனே! விரட்டவேண்டுமானால் நீங்களே வெளியில் விரட்டுங்கள்—ஆனால் பெண் ரொம்ப அழகாய் இருக்கிறாள்—"

"பெண்கள் என்றால் எவ்வளவோ பேர் அழகாய்த்தா னிருப்பார்கள். நான் விரட்டுகிறேன். விரஜனைக் கூப்பிடு."

அவருடைய மகன் பெயர் விரஜன். ஒரு வேலைக்காரி விரஜேசுவரனைக் கூட்டிக்கொண்டு வந்தாள். அவனுக்கு வயது இருபத்தொன்று. நல்ல வாலிப தசையின் அழகுடன் கூடியிருந்தான். மரியாதையாக தகப்பனர் எதிரே வந்து நின்றான். அவனைப் பேசுவதற்குக்கூடப் பயப்பட்டான்.

"என்டாப்பா, உனக்கு மூன்று மனைவிகள் என்று தெரியுமா?" என்று தகப்பனர் பிள்ளையைப் பார்த்துக் கேட்டார்.

விரஜன் பதில் சொல்லாமல் மௌனமாக இருந்தான்.

"முதல் கலியாணம் ஞாபகமிருக்கிறதா—அந்த விபசாரி மகள்?"

விரஜன் 'கப்சிப்' என்று நின்றான். அந்தக் காலத்தில் 21 வயது பிள்ளையானாலும்கூட தகப்பனர் எதிரில் வாயைத் திறந்து பதில் சொல்லமாட்டான். இந்தக் காலமா?

"அந்தப் பெண் இப்பொழுது இங்கே வந்திருக்கிறாள். இங்கே ஜோராக இருக்கலாமென்று எண்ணி! அவளை உடனே விளக்குமாறால் அடித்து வெளியே துரத்து என்று உன் தாயாரிடம் சொன்னேன். ஆனால் பெண் பெண்ணை எப்படிக் கைபோட்டு அடிப்பாள்? அது உன் வேலை. உனக்குத்தான் அதிகாரமும் இருக்கிறது—வேறு யார் அவளைத் தொடுகிறது? நீ இன்று ராத்திரியே அவளைத் துரத்திவிட வேண்டும். அதற்குப் பிறகுதான் எனக்குத் தூக்கம் வரும், என்ன?"

"இந்தாடாப்பா, பொம்மனாட்டியை அடிக்கவாவதடா? ஆனால் உங்களப்பா பேச்சை நீ கேட்காமல் என்ன செய்கிறது? நான் சொல்லுகிறேன். நல்ல வார்த்தையாய்ச் சொல்லி போகச்சொல்" என்றாள் தாயார்.

தகப்பனார் சொன்னதற்கு, "ஆகா, உத்தரவு!" என்றான் பையன். தாயார் சொன்னதற்கும் "நல்லது!" என்றான்.

சொல்லிவிட்டு விரஜேசுவரன் கொஞ்ச நேரம் என்ன செய்வதென்று தெரியாமல் நின்றான். அதற்குள் அந்த அம்மாள், "தூரத்திவிட்டால் அவள் சாப்பாட்டிற்கு என்ன செய்வாள்?" என்றாள்.

"சாப்பாட்டிற்கா? திருடட்டுமே! வழிப்பறி செய்யட்டுமே, கொள்ளையடிக்கட்டுமே, பிச்சை எடுக்கட்டுமே!" என்று ஹரவல்லபர் வெகு ஆக்கிரகத்துடன் கர்ஜித்தார்.

"போப்பா! ஏன் நிற்கிறாய்? அவளை வெளியே தூரத்தும்பொழுது மாமனார் இப்படிச் சொன்னார் என்று அவளிடம் சொல்" என்று விட்டுக்காரி அம்மாள் மிகவும் வருத்தத்துடன் கூறினாள்.

விரஜன் அங்கிருந்து வெளியேறி அத்தையம்மாள் இருக்கும் இடத்திற்குப் போய்ச் சேர்ந்தான். அவள் ஜபம் செய்துகொண்டு உட்கார்ந்திருந்தாள்.

"அத்தை!" என்று கூப்பிட்டான்.

"ஏண்டாப்பா?"

"இன்னிக்கி ஒரு விசேஷம்!"

"என்ன விசேஷம்? ஸாகரா சர்க்காவை முறித்து விட்டானோ, அதுதானே! அவனுக்கென்ன மகராஜி—ஒன்றை உடைத்தால் மற்றொன்று அப்பா வாங்கித் தருகிறார்."

"அதில்லை—இன்று என்னவென்றால்—"

"அவளை ஒன்றும் சொல்லாதே!—"

"நான் சொல்லுகிறதைத்தான் கொஞ்சம் கேளேன்!"

"பெரியவர்கள்—"

"நான் சொல்லுகிறதைக் கேட்கிறாயா அல்லது இருக்கிற சர்க்காவையும் நான் உடைத்துவிடட்டுமா?"

“என்ன சொல்லப்போகிறாய்? சர்க்கா சமாசாரம் இல்லையா?”

“அதில்லை. எனக்குப் பெண்சாதிகள் எவ்வளவு பேர் தெரியுமா உனக்கு?”

“பெண்சாதிகளா? அடேடே! நயனதாரா, ஸாகரா—கதை ஒன்று சொல்லுகிறேன் கேள்.”

“கதை இருக்கட்டும்—”

“இரண்டு பட்சிகள் கதை—சொல்லுகிறேன், கேள். ஒரே ஒரு மரத்தில் இரண்டு பட்சிகள் இருந்தன. ஒன்று ஆண், மற்றொன்று பெண்—”

“ஐயையோ! கதை சொல்ல இதுவா சமயம்? என் கதையைக் கேள்.”

“நீ என்ன கதை சொல்லப் போகிறாய்?”

“என் மூத்த தாரம் இன்று இங்கே வந்திருக்கிறாள்.”

“இங்கே வந்திருக்கிறாளே அந்தக் கிழவியின் பெண்ணா?”

“கிழவியும் வந்திருக்கிறாளா?”

“ஆமாம்!”

“எங்கே? நான் பார்க்கவில்லையே!”

“பார்க்க வைத்திருந்தால் உன் தாயார் தகப்பனார் கண்களில் நெருப்புப் பறக்காதா?”

“அவர்கள்தான் என்னைக் கூப்பிட்டு அவளை—பெண்ணை—விரட்டச்சொன்னார்கள். எப்படித் துரத்துவது? அத்தை, உன்னிடம் யோசனை கேட்கத்தான் வந்தேன்.”

“அப்பா, நான் கிழவி. கிருஷ்ண நாமத்தை ஜபித்துக் கொண்டிருக்கிறேன். கதை வேண்டுமானால் என்னால் சொல்ல முடியும். ஆனால் ஸாகராவைப் போய்ப்பார்.”

“சக்களத்தியைப் பற்றி அவள் என்ன சொல்லுவாள்?”

"நீ போகாவிட்டாலும் அவள் உனக்குச் சொல்லி யனுப்புவாள்."

"போனால் அவளைப் பார்க்கமுடியுமா?"

"போய்ப் பார்."

விரஜேசுவரன் ஸாகராவின் அறைப்பக்கம் போனான்.

---

## ஆறும் அத்தியாயம்

## காதலர் இரவு

**ஸா**கராவிற்கு மாமியார் வீட்டில் இரண்டு அறைகள். மாடியில் ஒன்று, கீழே ஒன்று. கீழ் அறையில்தான் சாப்பாடு, சம்பாஷணை எல்லாம்; மேல் அறையில் இரவில் தூங்குவாள். பகலிலும் தூக்கம் வந்தாலும் அதில் போய் படுத்துக் கொண்டு கதவைத் தாழ்ப்பாளிட்டுக்கொண்டு விடுவாள். விரஜேசுவரன் அத்தையிடமிருந்து கிளம்பி மாடியறைக்கு வந்துசேர்ந்தான்.

அங்கே ஸாகரா இல்லை. வேறு ஒருத்தி இருந்தாள். அவள் தன்னுடைய மூத்த மனைவி என்று விரஜன் உடனே தெரிந்துகொண்டான்.

பெரிய சங்கடமாகப் போய்விட்டது இருவருக்கும். இரு வருக்கும் உள்ள சம்பந்தமோ மிகவும் நெருங்கியது. புருஷ னும் மனைவியும், பரஸ்பரம் பாதி உடல் பெற்றவர்கள். உலகத் தில் வேறு எந்த இருவருக்கும் அவ்வளவு நெருங்கின சம்பந் தம் கிடையாது. ஆனால் ஒருவரையொருவர் பார்த்ததில்லை; எப்பொழுதும் பேசினதில்லை. என்னத்தைச் சொல்லி பேச ஆரம்பிப்பது? யார் முதலில் பேசுவது? ஒருவர் நின்று கொண்டும், மற்றொருவர் உட்கார்ந்துகொண்டு மிருந்தார்கள். பேச்சு எந்த மாதிரி ஆரம்பிக்கிறது என்பதைப்பற்றி என் வாசகர்களிடையே பழைய காலத்து மனுஷாளாய் இருக்கிற வர்களைக் கேட்கிறேன்.

பேசக்கூடிய விஷயங்கள் எவ்வளவோ இருந்தும் அந்த சமயம் பேச உசிதமாக ஒன்றும் படவில்லை. இருவரும் வெகு நேரம் பேசாமல் இருந்தார்கள். கடைசியாகப் பிரபுல்லா, புன்னகை செய்துகொண்டு, முக்காட்டைச் சரியாய்ப் போட்டுக்கொண்டு விரஜேசுவரன் அருகில் வந்து நமஸ்காரம் செய்தாள்.

விரஜேசுவரன் தகப்பனுரைப் போன்றவன் அல்ல. நமஸ்காரம் செய்யும் மனைவியைக் கண்டதும் அவன் கலங்கிப் போனுன். பிரபுல்லாவைத் தரையிலிருந்து தூக்கிக் கட்டிலில் உட்காரவைத்தான். தானும் அவள் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டான்.

அவள் முகத்தை மூடிக்கொண்டிருந்தாள். இந்தக் காலத்துப் பெண்களைப் போலவா பழைய காலத்துப் பெண்கள்? விரஜேசுவரன் அவளைத் தூக்கி உட்காரவைக்கும் பொழுது அந்த முக்காடு அகன்றுவிட்டது. பிரபுல்லா அழுதுகொண்டிருந்ததைக் கண்டான் விரஜேசுவரன். அவனுக்குப் பதட்டம் எடுத்துவிட்டது; ஒன்றும் ஓடவில்லை அவனுக்கு. கொஞ்சநேரம் கண் கலங்கினவனுய்த் தலை குனிந்துகொண்டு இருந்தான். பிறகு — ஐயைய! என்ன சொல்லட்டும்?— திடீரென்று பிரபுல்லாவை முத்தமிட்டுக்கொண்டான்! நான் பழைய காலத்துப் பேர்வழி—அதைத் தெரிவிப்பதில் என்ன வெட்கம்?—ஒருவேளை ருசி தேர்ந்த நவீன வாசகர் புத்தகத்தை மூடிவைத்து விடுவாரோ?

விரஜேசுவரன் இந்தமாதிரி கோரமான காரியம் செய்துவிட்டது ரொம்பக் கண்டிக்கத்தக்கது என்று நான் கருதி என்ன செய்வது? சுத்த அசடான பிரபுல்லா வேறுவிதமாக நினைத்தாள்! முத்தமிடுவதைப் போன்ற பவித்திரமான காரியம் இந்தப் பூலோகத்தில் வேறொன்றுமில்லை யென்று அவளுக்குத் தோன்றிற்று! அந்த சமயத்தில் வாசற்படியில்

மற்ருெரு முகம் எட்டிப்பார்த்தது. கொஞ்சமாகப் புன்னகை பூத்திருந்தது அதில். அந்த முகம் யாருக்குச் சொந்தமோ அந்தப் பேர்வழியின் கைக்காப்புகளிலிருந்து ஓர் ஒலி கிளம்பிற்று. அது விரஜேசுவரனுக்குக் கேட்டது. அவன் அந்தப் பக்கம் திரும்பிப்பார்த்தான்.

முகத்தில் அழகு சொட்டிக்கொண்டிருந்தது. கருகரு வென்றிருந்த கூந்தல் சுருள் சுருளாக ஜம்பசாரத்தில் விளை யாடிக்கொண்டிருந்தது — அப்பொழுது பெண்கள் அதை அணியவேண்டும். அதற்குமேல் மூக்காடு. அதற்குக் கீழே பத்மபலாசம் போன்ற இரண்டு கண்கள்; மிருதுவான சிகப்பு இதழ்கள் இரண்டு புன்சிரிப்பில் சிறிது பிரிந்து நின்றன. ஸாகராதான்!

ஸாகரா ஒரு பூட்டையும் சாவியையும் புருஷனுக்குக் காண்பித்தாள். ஸாகரா ரொம்ப விளையாட்டு சுபாவம்; புருஷனிடம் ஒன்றும் வாய் திறந்து சொல்லவில்லை. அவனுக்கு முதலில் ஒன்றும் அர்த்தமாகவில்லை. ஆனல் பிறகு ஊகித்துக்கொண்டான். ஸாகரா வெளியில் கதவைச் சாத்திப் பூட்டி விட்டு ஓடிப்போய்விட்டாள்.

பூட்டுப் பூட்டின சத்தம் கேட்டதும் விரஜேசுவரன், "ஐயையோ, ஸாகரா, என்ன இப்படிச்செய்கிருய்?" என்று கத்தினன்.

ஆனல் அவள் அதைக் காதில் போட்டுக்கொள்ளவே இல்லை. ஒரே ஓட்டமாக ஓடிப்போய் அத்தை யம்மாள் படுக்கையில் படுத்துக்கொண்டாள்.

"என்னடி, ஸாகரா? என்ன சமாசாரம்? ஏன் இங்கே வந்து படுத்துக்கொண்டாய்?" என்று அந்தம்மாள் கேட்டாள்.

ஸாகரா வார்த்தை பேசவில்லை.

"உன்னை விரஜன் அடித்துக்கிடித்துச் செய்ய வில்லையே?"

"இல்லாவிட்டால் உங்களிடம் எதற்காக வருகிறேன்? இன்று இங்கேதான் தூங்கவேண்டும்" என்று ஸாகரா மனஸ்தாபப்பட்டவள் போலச் சொன்னாள்.

"தூங்கு, தூங்கு. தானே வந்து கூப்பிடுவான். உங்கள் மாமா அப்படித்தான் எப்பொழுதாவது ஒருதரம் என்னை அடிப்பார். திரும்பவும் தானாகக் கூப்பிட வருவார். நானாகப் போகவே மாட்டேன் — பெண்களுக்கு அதுதான் வழி — அவர்களுக்கு இருப்புக்கொள்ளாது — ஒரு நாள் ஆனதும் —"

"அத்தை, ஒரு கதை சொல்லமாட்டீர்களா?" என்று ஸாகரா குறுக்கிட்டாள்.

"எந்தக் கதை சொல்லட்டும்? அந்த ஆண் பறவை, பெண் பறவை கதை சொல்லட்டுமா? நீ தனியாகக் கேட்பதைக்காட்டிலும் புதிதாகவந்த அந்தப் பெண்—அவள் எங்கே?—அவளைக் கூப்பிடேன், இரண்டுபேருமாகக் கேட்கலாம்."

"அவள் எங்கேயோ, அவளை நான் இப்பொழுது எங்கே போய்த் தேடுகிறது? நான் மட்டும் கேட்கிறேன், சொல்லுங்கள்."

அத்தையம்மாள் பறவைக் கதையைச் சொல்ல ஆரம்பித்தாள் — அவ்வளவுதான். ஸாகரா தூங்கிப்போய் விட்டாள். அந்த சமாசாரம் தெரியாமல் அம்மாள் கொஞ்ச தூரம் கதையைச் சொல்லிக்கொண்டே போனாள். அதற்குப் பிறகு தெரிந்தது, கதை கேட்கிறவள் தூங்கிப்போய் விட்டாளென்று. என்ன செய்வாள் பாவம்? மனதில்லாமல் கதையைப் பாதியில் நிறுத்திவிட்டாள்.

மறுநாள் விடிந்ததும் ஸாகரா போய் பூட்டைத் திறந்து விட்டுப் போய்விட்டாள். பிறகு யாரிடமும் ஒன்றும் பேசாமல் அத்தையம்மாளின் உடைந்த சர்க்காவை எடுத்துவைத்துக்

கொண்டு கிழவியின் தலைமாட்டில் லொடுக் லொடுக் கென்று சுற்ற ஆரம்பித்தாள்.

படக்கென்று பூட்டுத் திறந்த சப்தத்தை விரஜனும் பிரபுல்லாவும் கேட்டார்கள். படுத்துக்கொண்டிருந்தவள் எழுந்து நின்றுகொண்டு, "ஸாகரா கதவைத் திறந்து விட்டாள்; நான் போய்வருகிறேன். மனைவியென்று என்னை அங்கீகரிக்காவிட்டாலும், தாசியென்றாவது என் நினைவு இருக்குமா?" என்றாள் பிரபுல்லா.

"பிரபுல்லா, இப்பொழுது போகவேண்டாம். இன்னொரு தடவை அப்பாவைக் கேட்டுப்பார்க்கிறேன்."

"கேட்டால் அவர் மனது மாறுமா?"

"மாறாவிட்டால் நான் செய்வதைச் செய்யவேண்டியது தான். ஒரு காரணமும் இல்லாமல் உன்னைத் திரஸ்காரம் பண்ணிவிட்டு நான் பாவம் கட்டிக்கொள்ள மாட்டேன்."

"நீங்கள் என்னைக் கைவிடவில்லை. என்னை ஏற்றுவிட்டீர்கள். எனக்கு ஒரு தினமாவது உங்களுடன் சய்யாசுகம் அளித்துவிட்டீர்கள். அது எனக்கு யதேஷ்டம். நான் இப்பொழுது உங்களிடம் மன்றாடிக் கேட்டுக்கொள்வது இதுதான்—மகா பாபியான எனக்காக நீங்கள் உங்கள் தகப்பனாருடன் சண்டை போட்டுக்கொள்ள வேண்டாம். அதனால் எனக்கு ஒருவிதமான சுகமும் ஏற்படாது."

"கடைசிப் பட்சமாகவாவது உனக்கு ஏதாவது சாப்பாட்டிற்காவது நான் ஏற்பாடு செய்யச்சொல்லவேண்டாமா?"

"அவர் என்னை நிராகரித்துவிட்டார். அவரிடமிருந்து நான் ஜீவனாம்சம் பெற்றுக்கொள்ளமாட்டேன். உங்களுக்குச் சொந்தமானதாக ஏதாவது இருந்தால் கொடுங்கள், பெற்றுக்கொள்ளுகிறேன்."

"என்னுடையதென்று ஒன்றும் இல்லை. என்னிடம் இந்த மோதிரம் இருக்கிறது. இந்தா, இதை வைத்துக்கொள்.

இதன்மூலம் உன் சிரமத்தைக் கொஞ்சம் குறைத்துக்கொள். அதற்குள் நான் ஏதாவது சம்பாதித்து உனக்கு அனுப்பு கிறேன். நான் உன்னை சம்ரக்ஷிக்கிறேன், பிரபுல்லா. அது என்னால் கூடும்" என்று சொல்லிக்கொண்டு விரஜன் தன் கையிலிருந்த விலையுயர்ந்த வைர மோதிரத்தைக் கழற்றி எடுத்து பிரபுல்லாவிடம் கொடுத்தான். அவள் அதைத் தன் விரலில் போட்டுக்கொண்டே, "நீங்கள் என்னை மறந்துவிடு வீர்களா?" என்று கேட்டாள்.

"எல்லாவற்றையும் மறந்துவிடலாம் — உன்னை மறக்க மாட்டேன்."

"இனிமேல் பார்க்க முடியாமற்போனால்? பிறகு அடையாளம் தெரியாமற்போனால்?"

"உன் முகத்தை ஒருநாளும் மறக்கமாட்டேன்."

"நான் இந்த மோதிரத்தை விற்கமாட்டேன். நான் உணவின்றி உயிர்விட நேர்ந்தாலும் இதை விற்கமாட்டேன். உங்களுக்கு என்னை அடையாளம் தெரியாத காலத்தில் இதை உங்களுக்குக் காட்டுவேன். இதில் இருக்கும் எழுத்து என்ன?"

"என் பெயர் முத்திரை."

இருவரும் கண்ணீருடன் விடைபெற்றுக்கொண்டு பிரிந்து சென்றார்கள்.

பிரபுல்லா கீழே வந்ததும் ஸாகராவையும் நயனதாரா வையும் சந்தித்தாள். நயனா, "அக்கா நேற்றிரவு எங்கே படுத்துக்கொண்டீர்கள்?" என்று கேட்டாள்.

"யார் புண்ணியம் கட்டிக்கொண்டார்களோ அவர்கள் பெயரை நான் இப்பொழுது சொல்லமாட்டேன்."

"அது யார்?" என்று நயனா ஸாகராவைக் கேட்டாள்.

"தெரியாதா? அவள் நேற்றிரவு என்னை விரட்டிவிட்டு என் கட்டிலில் விஷ்ணுவுடன் லக்ஷ்மியாக இருந்தாள்.

அன்பின் அடையாளமாக மோதிரத்தையும் பெற்றான்" என்று சொல்லிக்கொண்டு ஸாகரா பிரபுல்லாவின் கைவிரலி லிருந்த மோதிரத்தை நயனுவுக்குக் காண்பித்தாள். பார்த்ததும் நயனுவுக்கு எரிச்சல் உண்டாயிற்று.

"அக்கா, உங்கள் விஷயமாக மாமனார் என்ன முடிவு சொன்னார், தெரியுமோ?" என்று கேட்டாள்.

பிரபுல்லாவுக்கு அந்தக் கவலை யொன்றும் இப்பொழுது இல்லை; கணவனின் ஆதரவைப் பெற்றுவிட்டதால் அக மகிழ்ந்தாள்.

"எதற்கு முடிவு?" என்று நயனுவைக் கேட்டாள்.

"சாப்பாட்டிற்கு என்ன வழி என்று நீங்கள் கேட்டீர் களல்லவா?" என்றாள் நயனு.

"அதற்கு அவர் பதில் என்ன?" என்று பிரபுல்லா கேட்டாள்.

"கொள்ளையடித்துச் சாப்பிடட்டுமே என்றார்."

"பார். இதோ போகிறேன்!" என்று சொல்லிவிட்டு பிரபுல்லா தனியாக வெளியே கிளம்பினாள்.

பிரபுல்லா பிறகு யாருடனும் பேசாமல் நேராக வாசலுக்கு வந்தாள். ஸாகரா பின்னாலேயே வந்தாள்.

"ஸாகரா, நான் போகிறேன். இனிமேல் நான் இந்த வீட்டுப் பக்கம் வரமாட்டேன். நீ உன் பிறந்தகத்திற்கு வந்தால், அங்கே உன்னை நான் சந்திக்கலாம்" என்றாள் பிரபுல்லா.

"உனக்கு எங்கள் அப்பா வீடு எப்படித் தெரியும்?" என்று கேட்டாள் ஸாகரா.

"தெரியாவிட்டால் விசாரித்துக்கொண்டு வருகிறேன்."

"நீ எங்களகத்திற்கு வருவாயோ?" என்று ஸாகரா அன்புடன் கேட்டாள்.

"அதில் எனக்கென்ன வெட்கம்?"

"உன் தாயார் உன்னைப் பார்க்கவேண்டுமென்று காத்துக்கொண்டிருக்கிருள்" என்று ஸாகரா முகத்தைத் தொங்கவிட்டுக்கொண்டு சொன்னுள்.

அவள் சொன்னபடியே பிரபுல்லாவின் தாயார் வெளியே காத்துக்கொண்டிருப்பதைக் கண்டாள். தாயாருடன் பிரபுல்லா புறப்பட்டுப் போவதை ஸாகரா வெகுநேரம் நின்று பார்த்துக்கொண்டிருந்தாள்.

---

ஏழாம் அத்தியாயம்

# அநாதை

பிரபுல்லாவும் அவள் தாயாரும் வீட்டிற்குத் திரும்பி வந்து சேர்ந்தார்கள். யாதா யாதமாக வறுமையாலும் மனக் கவலையாலும் பட்ட பாட்டில் தாயார் உடம்பு சீர் குலைந்து போய்விட்டது. வீடு திரும்பினதும் காய்ச்சலில் விழுந்தாள். முதலில் ஜுரம் சாதாரணமாகத்தான் இருந்தது. ஆனால் வங்காளத்தில் விதவைகள் வாழ்க்கை என்ன தெரியுமா? — ஜ்வரத்தை ஜ்வரமென்றே கருதமாட்டார்கள். தினம் இரண்டு தரம் மூன்றுதரம் ஸ்நானம் செய்ததால் அவள் உடம்பு கோளாராகிவிட்டது. அக்கம் பக்கத்திலிருந்தவர்கள் மனதிரங்கிக் கொடுத்த சாமான்களை வைத்துக்கொண்டு வயிற்றுப்பாடு ஆயிற்று. படுத்த படுக்கை யானாள். அந்தக் காலத்தில் கிராமங்களில் வைத்திய வசதிகள்தான் உண்டா? அதுவும் விதவைகள்தான் சட்டென்று மருந்து சாப்பிட்டு விடுவார்களே! எல்லாமாகச் சேர்ந்து ஜ்வரம் கடுமையாகி பிரபுல்லாவின் தாயார் கடைசியில் சகல துக்கத்திலிருந்தும் ஒருவழியாக விடுதலையடைந்தாள்.

ஆதியில் இவ்வளவு சங்கடத்திற்கும் காரண பூதமாயிருந்த கிராமத்தார்களே இப்பொழுது முன்வந்து பிரபுல்லாவினுடைய தாயாருக்கு வேண்டிய உபகாரம் செய்தார்கள். சமயத்தில் வங்காளிகள் விட்டுக்கொடுக்கமாட்டார்கள். அது அவர்கள் ஜாதி குணம்.

பிரபுல்லா ஒண்டியாள். கிராமத்தார்கள் அவளிடம் வந்து, "நாலாம் நாள் கிரியை நீ செய்தாகவேண்டும்" என்ருர்கள்.

"பிண்ட தானம் செய்யவேண்டுமென்றுதான் இச்சைப் படுகிறேன். ஆனுல் எங்கிருந்து செய்வது?" என்ருள் பிரபுல்லா.

"நீ ஒன்றும் கவலைப்படவேண்டாம், நாங்கள் எல்லாம் செய்துவிடுகிருேம்" என்ருர்கள் அவர்கள்.

சிலர் ரொக்கமாகவும், சிலர் பண்டமாகவும் சேகரம் செய்து சிராத்தத்திற்கும் பிராமண போஜனத்திற்கும் ஏற்பாடு செய்தார்கள்.

ஒருவன், "எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது. அன்று உன் மாமனுரை நிமந்திரணத்திற்கு ஏற்பாடு செய்தால் ரொம்ப சிலாக்கியம்" என்ருன்.

"யார் போய் ஏற்பாடு செய்கிறது?"

கிராமத்தாரில் இரண்டு பேர் முன் வந்தார்கள். எல்லாக் காரியங்களுக்கும் அவர்கள் நாங்கள் இருக்கிருேம் என்று முந்திரிக்கொட்டை மாதிரி வருவார்கள். அவர்களுக்கு அதே தான் தொழில்.

"நீங்கள்தானே கலகத்தை யெல்லாம் கற்பித்து இவ்வளவு தொந்தரவு கொடுத்தீர்கள்?" என்று பிரபுல்லா எரிச்சலுடன் கேட்டாள்.

"அந்தப் பேச்சு எதற்கு இப்பொழுது? நாங்கள் அதை எல்லாம் தூர வைத்துவிட்டோம். நீ இப்பொழுது அநாதை யாகிவிட்டாய். உன்னுடன் எங்களுக்கு ஒன்றும் விவகாரம் கிடையாது" என்றனர் அவர்கள்.

பிரபுல்லா சம்மதித்தாள். இரண்டுபேர் ஹரவல்லபரை நிமந்திரணத்திற்கு ஏற்பாடு செய்யப் புறப்பட்டுப் போனுர்கள்.

"என்ன ஸ்வாமி! நீங்கள்தானே கலியாணத்தின் போது அந்த அம்மாள் பிரஷ்டை என்று அவளை ஒதுக்கி வைத்தீர்கள். இப்பொழுது நீங்களே வந்திருக்கிறீர்களே, என்ன இது?" என்றார் அவர்.

"அது தெரியாதா உங்களுக்கு? எங்கள் ஊர்க் கட்சி பேதங்கள் எல்லாம் ஒருவாறு சமாதானம் ஆகிவிட்டது. அதுமுதல் என்ன காரியந்தான் நடைபெறுது?" என்றனர் வந்தவர்கள்.

ஹரவல்லபர் விஷயமறிந்தவர். "இந்தப் பசங்கள் அடித்துப் பிடுங்குகிறவர்கள். அந்தப் பெண்ணிடம் ஏதோ பணம் வாங்கிக் கொண்டிருப்பார்கள். ஆமாம், அவளுக்குப் பணம் ஏது?" என்று யோசித்தார். ஆகையால் ஹரவல்லபர் அவர்கள் சொன்ன பேச்சைக் காதில் கூட போட்டுக்கொள்ள வில்லை. அவர் பிரபுல்லா பேரில் இன்னும் அதிகமாகக் கோபமும் நிஷ்டூரமும் கொண்டார்.

இதை யெல்லாம் கேள்விப்பட்டதும் விரஜேசுவரன் "ஒரு நாள் இரவு ஒருவருக்கும் தெரியாமல் போய் பிரபுல்லாவைப் பார்த்துவிட்டு அதே ராத்திரி திரும்பிவிடவேண்டும்" என்று எண்ணினன்.

காரியம் பலிக்காமல் கிராமத்தார்கள் ஊருக்குத் திரும்பினார்கள்; பிரபுல்லா சாஸ்திரப்படி தாயாருக்குக் கர்மம் செய்துமுடித்தாள் கிராமத்தார்கள் ஒத்தாசையைக் கொண்டு. விரஜேசுவரன் எப்பொழுது வருவானே என்று அவனை எதிர்பார்க்கலானாள்.

---

## எட்டாம் அத்தியாயம்

## பூலமணியின் வலை

**நா**விதப் பெண் பூலமணியின் வீடு, பிரபுல்லாவின் வீட்டிற்கருகில் இருந்தது. தாய் தவறிப்போனது முதல் வீட்டில் பிரபுல்லா தனியாகத்தான் இருந்தாள். பிரபுல்லா அழகும் யௌவனமும் வாய்ந்தவளாதலால் இரவில் தனியாக இருப்பது அவளுக்குப் பயமாகவும் கவலையாகவும் இருந்தது. பிறர் ஏதாவது ஒரு வார்த்தை சொல்லிவிடுவார்களோ என்ற பயமும் கூட இருந்தது. இரவில் தனக்குத் துணையாக இருப்பதற்கு ஒரு பெண் இருந்தால் தேவலை என்று அவளுக்குத் தோன்றிற்று. பூலமணியும் அவ்வாறுதான் யோசனை சொன்னாள்; தானே அந்த மாதிரி வந்து படுத்துக்கொள்ளுவதாகவும் ஒப்புக்கொண்டாள். ஆகையால் பிரபுல்லாவின் தாயார் இறந்த தினம் முதல், பூலமணி பிரதி தினமும் இரவை அவள் வீட்டில் கழித்தாள்.

பூலமணி எப்பேர்ப்பட்ட நடத்தை கொண்டவள் என்பது குழந்தை போன்ற பிரபுல்லாவிற்குத் தெரியாது. அவள் பிரபுல்லாவைக் காட்டிலும் பத்து வயது மூத்தவள். பார்ப்பதற்கும் பேசும்பொழுதும் மிகவும் நயமாகவும் நல்லவளாகவும் இருந்தாள். அவள் நடை உடை பாவனையில் விசேஷமான நாஸூக்கும் அழுத்தலும் இருந்தன. கீழ் ஜாதிப் பெண்; தனியாக இருந்தாள்; அதிலும் அவள் பாலிய விதவை; நடத்தை கலப்புற்ற தங்கமாக இருக்கமுடியுமா எங்காவது?

கிராம ஜமீன்தார் பராண சௌதுரியின் குமாஸ்தா ஒருவர் துர்லப சக்கரவர்த்தி யென்று. அவர் அங்கே கச்சேரிபோட அடிக்கடி வருவார். அவருக்கும் பூலமணிக்கும் ஏதோ உண்டு என்று ஊரில் வதந்தி. இந்த விஷயமெல்லாம் ஒன்றும் பிரபுல்லாவிற்குத் தெரியவே தெரியாது. அவள் வாசற்படி நுழைந்து அதைப்பற்றி அவளிடம் சொல்லவும் யாரும் முன்வரவில்லை. பராபரியாய் ஓரிரண்டு வார்த்தை காதில் விழுந்தன. "அவள் எப்படி இருந்தால் என்ன? நான் ஜாக்கிரதையாய் இருந்துவிட்டால் போகிறது. என்னை அவள் கெடுத்துவிட முடியாதே!" என்று தனக்குள் சமாதானம் செய்துகொண்டாள் பிரபுல்லா.

ஆகவே பூலமணி நாலைந்து நாள் படுத்துக்கொண்டு வந்தாள். சிராத்தத்திற்கு மறுநாள் இரவு அவள் கொஞ்சம் தாமதமாக வந்தாள். வருகிற வழியில் ஒரு மாமரம். அதன் பக்கத்தில் ஒரு சின்னத் தோப்பு. அதில் அவள் நுழைந்தாள். அங்கே ஒரு ஆள் நின்றுகொண்டிருந்தான். அவன் தான் துர்லப சந்திரன்.

அந்த மகானை அங்கே திருட்டுத்தனமாகச் சந்திக்க வந்தவள், வெற்றிலைக்காவி ஏறிய உதடுகளுடனும், சிவந்த உடலில் புதுப்புடவையுடனும் புன்சிரிப்புடன் அவன்முன் நின்றாள்.

"இன்று என்ன சமாசாரம்?" என்று கேட்டான் அவன்.

"இன்றுதான் சரியான சமயம். நீங்கள் இன்று ராத்திரி பல்லக்குக் கொண்டுவாருங்கள். கதவை மெள்ளத் தட்டுங்கள். நான் கதவைத் திறக்கிறேன். ஆனால், இதோ பாருங்கள், கூக்குரல், ரகளை, ஒன்றும் ஏற்படக்கூடாது, தெரியுமா?"

"அந்த பயம் ஒன்றும் வேண்டியதில்லை. ஆனால் அவள் ஒரு வேளை கத்திவிட்டால்?"

"அதற்கு ஒரு வழி இருக்கிறது. நான் மெதுவாகக் கதவைத் திறக்கிறேன். நீங்கள் மெள்ள இருட்டில் மறைந்து சென்று அவள் வாயில் துணியை அடைத்து விடுங்கள். நன்றாய் இறுகக் கட்டிவிட்டால் பிறகு அவள் தாத்தாதான் வரட்டுமே!"

"இப்படிக் கட்டித் தூக்கிக்கொண்டுபோய் எவ்வளவு நாள் பந்தோபஸ்தில் வைத்திருக்கிறது?" என்றான் துர்லப சந்திரன்.

"கொஞ்சநாள் அப்படித்தான் இருக்கும். நாதியற்று சோற்றுக்கு வழியில்லாமல் திண்டாடுகிறவளுக்கு தின்னச் சோறும் துணியும் கொடுத்து சுகமாக உட்காரவைத்தால் வலிக்குமோ? அப்புறம் இருக்காமல் என்ன கேடு அவளுக்கு? அது என் பொறுப்பு. நான் பார்த்துக்கொள்ளுகிறேன்" என்றாள் பூலமணி.

இந்த மாதிரி பேச்சு முடிந்ததும் துர்லபசந்திரன் தன் இருப்பிடம் போய்ச்சேர்ந்தான். பூலமணி பிரபுல்லாவிடம் வந்தாள். அவளுக்கெப்படித் தெரியும் பாவம் இந்த மாதிரி ஒரு சதியாலோசனை நடந்திருக்கிறதென்று? அவள் அம்மாவைப்பற்றி எண்ணிக்கொண்டே படுத்துக்கொண்டாள். தாயைப்பற்றி தினமும் எப்படி அழுவாளோ அப்படி அழுதாள்; அழுதுவிட்டு தினமும் தூங்குவது போலத் தூங்கிவிட்டாள்.

இரண்டாவது ஜாமத்தில் துர்லபன் வந்து கதவைத் தட்டினான். பூலமணி கதவைத் திறந்தாள். துர்லபன் பிரபுல்லாவின் வாயில் துணி அடைத்துக் கட்டித் தூக்கிக் கொண்டுபோய்ப் பல்லக்கில் ஏற்றினான். போகிகள் சத்தம் செய்யாமல் பல்லக்கை ஜமீன்தார் பராண பாபுவின் உல்லாச கிருஹத்திற்கு எடுத்துக்கொண்டு போனார்கள். பூலமணியும் கூடவே சென்றாள் என்று சொல்லவேண்டியதில்லை.

சிறிது நேரம் கழித்து விரஜேசுவரன் பிரபுல்லாவைத் தேடிக்கொண்டு அந்த வெறும் வீட்டிற்கு வந்தான். இர வோடு இரவாக ஒருவரு மறியாமல் ஓடிவந்தான் மனைவியைப் பார்க்க! அங்கே அவள் இல்லை!

பிரபுல்லாவைத் தூக்கிக்கொண்டு, போகிகள் சந்தடி யில்லாமல் சென்றார்கள் என்று சொன்னோம். போயிகளுக்குச் சத்தம் செய்துகொண்டு போவது வழக்கம்; இப்பொழுதோ சத்தம் செய்தால் ரகளை ஏற்படுமாதலால் மௌனமாகப் போக வேண்டுமென்று அவர்களுக்கு உத்தரவு. இன்னு மொரு விசேஷம். அங்கே கொள்ளைக்காரர்கள் பயம் அதிகம் என்று வதந்தி. உண்மையில் அப்பேர்ப்பட்ட திருடர் பயம் வேறெங்காவது எப்பொழுதாவது இருந்திருக்குமா என்பது சந்தேகம்.

அப்பொழுது தேசத்தில் ஒரே அராஜகத்வம். முஸல் மான்களின் ராஜ்யாதிகாரம் சீர்குலைந்து போய்விட்டது. ஆங்கில அரசாட்சியும் சீர்படாத காலம். 1776-ஆம் வருஷத் தில் தேசத்தை பஞ்சம் ஒன்று படையெடுத்துச் சுடுகாடாக்கி விட்டது. அதன் பிறகு தேவீசிங்கின் ஒப்பந்தம். மேற் கத்திய பூமியில் வெஸ்ட்மின்ஸ்டர் ஹாலில் நின்றுகொண்டு எட்மண்ட் பர்க், தேவீசிங்கின் பெயரை நித்தியமாக்கிவிட் டார். எரிமலையிலிருந்து கிளம்பும் அக்கினியைப்போன்ற சொற்பெருக்கில் பர்க், தேவீசிங் செய்த சகிக்கமுடியாத அட்டுழியங்களைக் காலாந்தரத்திற்கும் விவரித்திருக்கிறார். அவர் வாயிலாக அந்தச் சோக விஸ்தாரத்தைக் கேட்டு அநேக பெண்மணிகள் மூர்ச்சை அடைந்தார்கள். இன்றுகூட-நூறு வருஷங்களுக்குப் பிறகு, அந்த வாக்கைப் படித்தால் மயிர்க் கூச்செரிகிறது; உணர்ச்சி புரண்டெழுகிறது. அப்பேர்ப் பட்ட அக்கிரமத்தில் நாடு மூழ்கித் தவித்தது. பலர், வயிற் றுக்கு ஒன்றுமில்லாமல்-திண்டாடினார்கள்; வீட்டில் தங்கமுடி

யாமல் தவித்தார்கள். சோற்றுக்கு இல்லாதவர்கள் பிறரைக் கொள்ளையடிக்க ஆரம்பித்தார்கள். இந்த மாதிரியாக ஒவ்வொரு கிராமத்திலும் திருடர்கள் கூட்டம் அதிகரித்தது. அவர்களை யாரால் அடக்கமுடியும்? ரங்கபுரத்தில் குடல் யார்ட் என்று ஒரு கலெக்டர் இருந்தார். அவர் சிப்பாய்களை தளம் தளமாக அனுப்பினார் பிரதேசம் பூராவும். ஆனால் அவர்களால் ஒன்றும் செய்யமுடியவில்லை.

அதனால்தான் துர்லபனுக்குக் கவலை. தானே கொள்ளை புரிந்து பிரபுல்லாவைக் கொண்டுபோகும் வழியில், தன்னை வேறு கொள்ளைக்காரர்கள் தாக்கினால் என்ன செய்வது என்று கலங்கினான். பல்லக்குகளைக் கண்டால் கொள்ளைக் காரர்கள் அவற்றைச் சூழ்ந்துகொள்ளுவது சகஜம். அதற்காகத்தான் போகிகளை நிச்சப்தமாக போகச் சொன்னது. சண்டை சச்சரவு ஏற்படுவதற்கும் அவர்களிடையே வேறு யாரும் கிடையாது. துர்லபனும் பூலமணியுந்தான். இப்படியாகப் பயந்துகொண்டே சுமார் எட்டு மைல் சென்றார்கள்.

அதற்குமேல் அடர்ந்த காடு வந்தது. எதிரே இருவர் வருவதைக்கண்டு போயிகள் திடுக்கிட்டார்கள். இரவு, வெறும் நட்சத்திர வெளிச்சத்தைக்கொண்டு வழியைப்பற்றிக் கொண்டு போனார்கள். முக அடையாளம் கொஞ்சங்கூடத் தெரியவில்லை. காலாந்தகர் போன்ற வடிவம் கொண்ட இருவர் எதிரே வந்தார்கள்.

"இவர்கள் மனிதர்களா என்பதே சந்தேகமாக இருக்கிறதே!" என்றான் ஒரு போயி மற்றொருவனைப் பார்த்து.

"இரவில் இங்கே வருகிறவர்கள் எங்காவது மனிதர்களா யிருக்கமுடியுமா?" என்றான் மற்றொருவன்.

"ஆள்கள் நல்ல கிண்டர்கள்!" என்று மூன்றும் போயி சொன்னான்.

"கையில் தடிகள் வைத்திருக்கிறார்கள், பார்த்தாயா?" என்றான் முதல்வன்.

"சக்கரவர்த்தி ஐயா என்ன சொல்லுகிறீர்? நாம் மேலே போகமுடியாது. கொள்ளைக்காரர்கள் கையால் அடிபட்டுப் பிராணனை விடுவதா?"

"போச்சு, நான் நினைத்தேன்! அந்த மாதிரியே ஏற்பட்டுவிட்டது. பெரிய ஆபத்து வந்துவிட்டது" என்று துர்லப் சக்கரவர்த்தி புலம்பினான்.

அதற்குள் அவ்விருவரும் நெருங்கிவிட்டார்கள். வழியில் ஆட்கள் இருப்பதைக் கண்டு அவர்கள், "யாரடா நீங்கள்?" என்று அதட்டிக் கேட்டார்கள்.

போயிகள் பல்லக்கைக் கீழே போட்டுவிட்டு, "அப்பாடியோ!" என்று கத்திக்கொண்டு காட்டிற்குள் ஓட்டம் பிடித்தார்கள். பார்த்தான் துர்லபன்; அவர்களை உடனே பின்பற்றலானான். "நான் எங்கே போகட்டும்?" என்று கத்திக்கொண்டு பூலமணியும் பின்னாலேயே ஓடினாள்.

வந்த இருவரும் — அவர்களைக்கண்டு பத்துப் பேர் பயந்தோடினார்கள்! — வெறும் வழிப் போக்கர்கள்தான். அவர்கள் திணாஜபுர ராஜ சமஸ்தான சம்பந்தமான காரியமாகப் போய்க்கொண்டிருந்தார்கள். விடியும் நேரம் நெருங்கிவிட்டதால் மெள்ள மெள்ள நடக்கலாம் என்று பிரயாணமானார்கள். போகிகள் ஓட்டமெடுத்ததைக் கண்டு அவர்கள் நன்றாகச் சிரித்துவிட்டு மேலே நடந்தார்கள். ஆனால் போயிகளும், பூலமணியும், சக்கரவர்த்தியும் திரும்பிக்கூடப் பார்க்காமல் ஓடினார்கள்.

பிரபுல்லா பல்லக்கிலிருந்து எழுந்து வாயில் அடைத்திருந்த துணியைப் பிடுங்கி எடுத்தாள். அந்த இரவில் கூக்குரலிட்டு என்னப் பிரயோஜனம் என்று அவள் வாய் திறக்கவில்லை. அப்படித்தான் யார் காதிலாவது பட்டாலும்

திருடர்களிடம் யார் வருவார்கள்? பயத்தால் சிறிது நேரம் அவள் செயலற்றுப் போய்விட்டாள். ஆனால் அந்த சமயம் பிரயத்தினம் செய்யாவிட்டால் விடுதலை அடைவதற்கு வேறு வழியில்லை என்று கண்டாள். போயிகள் பல்லக்கை விட்டெறிந்துவிட்டுப் போனதால் ஏதோ ஒரு புதிய ஆபத்து வந்துவிட்டதென்று எண்ணினாள். மெதுவாகப் பல்லக்குக் கதவைத் திறந்து பார்த்தாள். தூரத்தில் இருவர் போய்க் கொண்டிருந்தது தெரிந்தது. பிறகு பிரபுல்லா பல்லக்கை விட்டு வெளியே வந்து பார்த்தாள். எங்கும் யாரையும் காணோம்!

தன்னைத் திருடிக்கொண்டு வந்தவர்கள் நிச்சயம் திரும்பி வருவார்கள்; எனவே வந்த பாதையில் திரும்பிப் போனால் மீண்டும் அவர்கள் கையில் அகப்பட்டுக்கொண்டுவிட வேண்டும்; ஆகையால் காட்டுக்குள் எங்கேயாவது ஒளிந்துகொண்டிருந்துவிட்டு, விடிந்ததும் வெளியே வரவேண்டும் என்று தீர்மானித்தாள் பிரபுல்லா.

காட்டிற்குள்ளே பிரவேசித்தாள். நல்ல வேளையாக போயிகள் முதலியவர்கள் போன பக்கம் அவள் போகவில்லை. யாரும் அவ்வழியில் அவளுக்கு எதிர்ப்படவில்லை. உள்ளே போய் பிரபுல்லா ஓரிடத்தில் கொஞ்ச நேரம் நின்றுகொண்டிருந்தாள். சிறிது கழித்து விடிய ஆரம்பித்தது.

பொழுது விடிந்ததும் பிரபுல்லா காட்டில் இங்குமங்குமாக அலைய ஆரம்பித்தாள். பாதையை விட்டு மட்டும் விலக பயப்பட்டாள். பாதையில் ஓரிடத்தில் ஒரு சிறு சுவடு காட்டிற்குள் சென்றது தெரிந்தது. எப்பொழுது அந்தப் பக்கம் சுவடு இருந்ததோ கட்டாயம் அங்கே மனிதர்கள் இருக்கவேண்டும் என்று தீர்மானித்து, பிரபுல்லா அந்தச் சுவடை பின்பற்றிச் சென்றாள். வீட்டுக்குத் திரும்பிப் போக பயம்; மறுபடியும் திருடர்கள் பிடித்துக்கொண்டு வந்து விடுவார்கள். புலி கரடி தின்றுவிட்டாலும் மேல்;

இனிமேல் அவர்கள் கையில் அகப்படக்கூடாது என்று தீர்மானித்தாள்.

பாதையைப் பிடித்துக்கொண்டு பிரபுல்லா வெகுதூரம் சென்றாள். மணிபத்து ஆகியும் யாதொரு கிராமமும் கண்ணில் படவில்லை. சுவடு மறைந்துவிட்டது. மேலே ஒளியும் தெரியவில்லை. ஆனால் கீழே ஓரிரண்டு பழைய செங்கல்கள் கிடந்தன. கொஞ்சம் தைரியம் வந்தது அவளுக்கு. எப்பொழுது செங்கல் இருந்ததோ அப்பொழுது கட்டாயம் கிட்டே எங்காவது வீடுகள் இருக்கவேண்டும் என்று ஊகித்தாள்.

போகப் போக செங்கல்கள் ஜாஸ்தியாகக் காணப்பட்டன. காடும் நெருக்கமடைந்தது. கடைசியாகக் காட்டின் அடர்ந்தவொரு பாகத்தில் ஒரு இடிந்த மாளிகை இருப்பதைக் கண்டாள். அருகேயிருந்த ஒரு செங்கல் மேடைமேல் ஏறி சுற்றுமுற்றும் பார்த்தாள். உள்ளே சில பாகங்கள் இடிந்து விழாமல் இருந்தன. ஒரு வேளை அங்கே யாராவது இருந்தாலும் இருக்கலாம் என்று எண்ணினாள். அவற்றை எல்லாம் நுழைந்து பார்க்க ஆரம்பித்தாள். எல்லாம் திறந்து கிடந்தன. உள்ளே யாரும் இல்லை. ஆனால் மனிதர்கள் இருந்ததற்குச் சிறிது சிறிது அடையாளங்களும் தென்பட்டன. கண நேரத்திற்கெல்லாம் யாரோ ஒரு கிழவர் முனகுவது போன்ற சத்தம் கேட்டது. சத்தம் வந்த திக்கை நோக்கிப் போய் பார்த்தபொழுது, அங்கே ஒரு கிழவர் படுத்து முக்கி முனகிக் கொண்டிருப்பதைக் கண்டாள். சரீரம் ஒட்டிப் போயிருந்தது; உதடுகள் உலர்ந்து போயிருந்தன. கண்கள் பஞ்சடைந்து போயிருந்தன. மூச்சுத் திணறிக்கொண்டிருந்தது. அவர் சாகுந்தறுவாயில் இருந்தார் என்பது தெரிந்தது. பிரபுல்லா அவருடைய படுக்கை யருகில் போய் நின்றாள்.

கிழவர் ஈனஸ்வரமாக, "அம்மா, நீ யார்? நீ யாராவது தேவதையா? அந்தியகாலத்தில் என்னை உத்தாரணம் செய்வதற்கு வந்திருக்கிருயா?" என்று கேட்டார்.

"நான் ஓர் அநாதை. வழி தப்பி இங்கே வந்திருக்கிறேன். நீங்களும் அநாதை என்று தெரிகிறது. நான் உங்களுக்கு ஏதாவது செய்யமுடியுமா?" என்று பிரபுல்லா கேட்டாள்.

"ரொம்ப உபகாரம் செய்யலாம். பரமாத்மாவின் கிருபை! இந்த சமயத்தில் மனித முகத்தைக் காணக்கிடைத்ததே! தாகம் பிராணன் போகிறது; கொஞ்சம் ஜலம் கொண்டுவா முதலில்!"

அங்கே தண்ணீர்க் குடம், பாத்திரம் எல்லாம் இருந்தன; ஜலமும் இருந்தது. பிரபுல்லா கொஞ்சம் தண்ணீர் கொண்டு வந்து கிழவருக்குக் குடிக்கக் கொடுத்தாள்.

கிழவர் தண்ணீரைக் குடித்ததும் கொஞ்சம் தெம்படைந்தார். அந்தக் காட்டில் தனியாக சாகக் கிடந்த அந்தக் கிழவரைப்பற்றி விரைவில் அறியவேண்டுமென்று பிரபுல்லாவிற்கும் ஆவல் உண்டாயிற்று. ஆனுல் அப்பொழுது கிழவருக்கு அதிகமாகப் பேசச் சக்தி இல்லை. பிரபுல்லா அதிகமாக அவரைப்பற்றி ஒன்றும் அறிய முடியவில்லை. அவர் சொன்ன ஓரிரு வார்த்தைகளிலிருந்து பின்வரும் தகவல் வெளியாயிற்று.

கிழவர் வைஷ்ணவர். அவருக்கு யாரும் கிடையாது. கூட ஒரு வைஷ்ணவி இருந்தாள். கிழவர் சாகக் கிடப்பதை அறிந்ததும் அவள் அவருடைய பணம் பூராவையும் எடுத்துக் கொண்டு கம்பி நீட்டிவிட்டாள். அவர் வைஷ்ணவ ராகையால் தகனம் கூடாது—புதைக்க வேண்டும். வைஷ்ணவி போகு முன், வீட்டின் பின்புறத்தில் ஒரு குழி தோண்டி வைத்து விட்டுப் போயிருந்தாள். கடப்பாரை முதலியவைகூட அங்கேயே கிடந்தன. "நான் இறந்ததும் என்னைத் தூக்கி

அந்தக் குழியிலிட்டு மண்ணைப்போட்டு மூடிவிடு—இதுதான் நீ செய்யவேண்டிய உதவி" என்றார் கிழவர்.

பிரபுல்லா ஆகட்டுமென்று ஒப்புக்கொண்டாள். பிறகு கிழவர் மறுபடியும் பேசலானார்:

"எனக்கு இன்னும் கொஞ்சம் பணம் இருக்கிறது. வைஷ்ணவிக்கு அது இருக்கும் இடம் தெரியாது. ஆகையால் அதை அவள் எடுத்துக்கொண்டுபோக முடியவில்லை. அதை யாருக்காவது கொடுக்காவிட்டால் என் பிராணன் போகாது. அப்படிக் கொடுக்காமலேயே செத்துப்போய் விட்டேனானால் பூதமாக மாறி நான் அதைச் சுற்றிக்கொண்டே இருக்கவேண்டும். எனக்கு நல்ல கதி கிடைக்காது. வைஷ்ணவிக்குத்தான் அதைக் கொடுக்க வேண்டுமென்று எண்ணிக்கொண்டிருந்தேன். ஆனால் அவள் ஓடிப்போய்விட்டாள். பிறகு யார் என் கண்ணில் படப்போகிறார்கள் என்று தவித்துக்கொண்டிருந்தேன். உனக்கு அதைப் பூராவும் கொடுத்துவிட்டுப் போகிறேன். என் படுக்கையின்கீழ் ஒரு சவுக்கமான பலகை பதிந்து இருக்கிறது. அதை எடுத்தால் ஒரு சுரங்கம் தென்படும். அதில் ஒரு படிக்கட்டு வழி இருக்கிறது. அதில் இறங்கிப்போ—பயப்படாதே—கீழே தரைக்குள் இந்தமாதிரி ஒரு அறை தென்படும். அதன் வடமேற்கு மூலையில்தான் பணம் இருக்கிறது."

பிரபுல்லா கிழவருக்கு சுச்ருஷை செய்துகொண்டிருந்தாள். கொஞ்சநேரம் கழித்துக் கிழவர், "இந்தவீட்டு மாட்டுக்கொட்டிலில் பசுமாடு இருக்கிறது. உன்னால் அங்கிருந்து பால் கறந்துகொண்டு வரமுடியுமானால் எனக்குக் கொஞ்சம் கொண்டுவா, நீயும் கொஞ்சம் சாப்பிடு" என்றார்.

பிரபுல்லா அப்படியே செய்தாள். பால்கொண்டு வருகிற வழியில், குழியையும் மண்வெட்டி முதலிய சாமான்களையும் பார்த்தாள்.

பிற்பகலில் கிழவர் உயிர்நீத்தார். கிழவர் இளைத்துப் போயிருந்தபடியால் உடம்பு கனமாக இருக்கவில்லை. பிரபுல்லா சவத்தை எடுத்துக் குழியில் அடக்கம் செய்தாள். பிறகு அருகேயிருந்த கிணற்றில் ஸ்நானம் செய்தாள். துணியைப் பிழிந்து காயப்போட்டுக்கொண்டாள். பிறகு திரவியத்தைத் தேடுவதற்கு ஆரம்பித்தாள். கிழவர் அவளுக்கு ஆஸ்தி அளித்தார். ஆனால் அதைக் கண்டுபிடிப்பது லேசாக இருக்கவில்லை. பிரபுல்லாவும் தயங்கவில்லை.

---

## ஒன்பதாம் அத்தியாயம்

# திரவியச் சுரங்கம்

கிழவரைச் சமாதியில் அடக்கம் செய்வதற்கு முன்பே ப்ரபுல்லா அவருடைய படுக்கையைத் தூக்கிப்பார்த்தாள். அவர் சொன்னபடியே அங்கே ஒரு சதுரமான பலகை இருந்தது; மூன்று சதுர அடி இருக்கலாம். பூமி மட்டத்துக்குச் சரியாக பதிக்கப்பட்டிருந்தது. கடப்பாரை கொண்டு வந்து அதைப் புரட்டி எடுத்துப் பார்த்ததில் உள்ளே ஒரே இருட்டாக இருந்தது. கொஞ்சநேரம் ஆனதும் அங்கே இறங்குவதற்கு ஒரு படிக்கட்டு வரிசையாக இருந்தது தெரிந்தது.

காட்டில் விறகு யதேஷ்டமாக இருந்தது. கொஞ்சம் ஒடித்து எடுத்துக்கொண்டு வந்து இருட்டறையின் நடுவே போட்டாள். பிறகு சிக்கிமுக்கி எங்காவது இருக்கிறதா என்று தேட ஆரம்பித்தாள். கிழவர் கட்டாயம் புகையிலைப் புகை பிடித்துத்தான் இருக்கவேண்டும். ஸர் வால்டர் ராலேக்குப் பிறகு எந்தக் கிழவன் இந்தப் பாழும் ஜீவனத்தைப் புகையிலையின் உதவியின்றிக் கழிக்க முடியும்? உயிருடன் இருக்கும் கிழவர்கள் யாராவது புகையிலையைத் தொட்டதில்லையென்றால் இன்னும் சிறிதுகாலம் உயிருடன் இருந்து வாழ்க்கையின் தொந்தரவுகளின் நடுவே இருக்கும் இந்த ஒரு சுகபோகத்தை அனுபவித்துவிட்டுத்தான் போகவேண்டும் என்று நாம் அவர்களைக் கேட்டுக்கொள்ளுகிறோம். தேடித்

தேடி சிக்கிமுக்கி முதலிய சாமான்களைக் கண்டுபிடித்து எடுத்தாள். மாட்டுக் கொட்டிலிலிருந்து வைக்கோல் கொண்டு வந்து திரி செய்து ஏற்றிக்கொண்டு கீழே இறங்கலானாள். கீழே ஒரு திவ்வியமான அறை. முதலில் வடமேற்கு மூலை எது என்று நிர்ணயம் செய்து கொண்டாள். பிறகு குவித்த விறகு பூராவிலும் நெருப்பு மூட்டிப் பற்றவைத்தாள். உள்ளே நன்றாக வெளிச்சம் ஏற்பட்டது. பிறகு பிரபுல்லா தோண்ட ஆரம்பித்தாள்.

தோண்டிக்கொண்டே போன பொழுது கடப்பாரை 'டங்' என்று எதிலோ அடிபட்ட சத்தம் கேட்டது. பிரபுல்லாவிற்கு மயிர்க்கூச் செறிந்தது. பாரையின் முனை பணக்குடத்தின்மேல் அடிபட்டதைக் கண்டாள். எங்கிருந்து இந்தக் கிழவருக்கு இவ்வளவு பணம் கிடைத்தது? அதைக் கவனிப்போமா?

கிழவரின் பெயர் கிருஷ்ண கோவிந்த தாஸ். அவர் காயஸ்த ஜாதியைச் சேர்ந்தவர். அவர் காலத்தை கல்மஷமின்றித்தான் கழித்துவந்தார். ஆனால் வயதான காலத்தில் ஓர் அழகிய வைஷ்ணவியின் வலையில் சிக்கிக்கொண்டார். ஜால்ரா கஞ்ஜிராக்களை விட்டு விட்டு காஷாயம் தரித்துக் கொண்டு, வைஷ்ணவியுடன் பிரயாகைக்குப் போய்ச்சேர்ந்தார். அங்கே போனது முதல் வைஷ்ணவி அங்கேயிருந்த பக்த கோடிகளின் மதுரமான கீதகோவிந்த கானத்தையும் ஸ்ரீமத் பாகவத கதாப்பிரசங்கத்தையும் கேட்டு மிகவும் ஈடுபட்டு அவர்களுக்குப் பாதசேவை செய்ய ஆரம்பித்துவிட்டாள். இதைக் கண்டு கிருஷ்ணகோவிந்தர் பிருந்தாவனத்தைவிட்டுக் கிளம்பி வைஷ்ணவியுடன் திரும்ப வங்காளம் வந்துசேர்ந்தார். அவர் அப்பொழுது ரொம்ப ஏழை. உதர நிமித்தமாக ஒரு வேலையைத் தேடி மூர்ஷிதாபாத் போய்ச்சேர்ந்தார்; அங்கே அவருக்கு ஒரு உத்தியோகம் கூடக் கிடைத்தது. ஆனால் அவ

ருடைய வைஷ்ணவியின் அழகைப்பற்றிய பிரஸ்தாபம் நவாபின் மகனுக்குக் கூட எட்டிவிட்டது. ஒரு கோஜாக் காரன் அவளைக் கலியாணம் செய்துகொண்டு விடவேண்டு மென்ற நோக்கத்துடன் அவர்கள் இருந்த இடத்திற்கு வந்து சேர்ந்தான். வைஷ்ணவிகூட பணத்தாசையால் இணங்கிவிட் டாள். நெருக்கடியான நிலைமையை அறிந்து கோவிந்தர் அவளைக் கூட்டிக்கொண்டு அங்கேயிருந்து வெளியேறிவிட் டார். ஆனல் எங்கே போவதென்று புரியவில்லை. அப்பேர்ப் பட்ட மதிப்பற்ற ஆபரணத்துடன் பட்டணவாசம் செய்வது தகுதியல்லவென்று அவருக்குத் தோன்றிற்று. எங்கெங்கோ சில நாட்கள் கழித்துவிட்டுக் கடைசியாக கங்கைக்கரைக்கு வந்து சேர்ந்தார். அங்கே ஒரு தனிமையான பிரதேசத் தைத் தேட ஆரம்பித்தார். தேடித் தேடித் திரிந்து கடைசி யில் அந்த இடிந்த மாளிகையைக் கண்டுபிடித்தார். தன் விலையுயர்ந்த ரத்தினத்தை உலகத்தின் கண்ணில் காட்டாமல் வைத்துக்கொண்டிருப்பதற்கு அதுதான் சரியான இடம் என்று தீர்மானித்தார். அங்கே யமனைத்தவிர வேறு யாரை யும் சந்தித்து விடுவோம் என்ற பயம் கிடையாது. ஆகை யால் அவர் அதை இருப்பிடமாக்கிக் கொண்டார். கோவிந் தர் மட்டும் வாரத்திற் கொருதடவை அருகிலிருந்த சிற்றூ ருக்குச்சென்று சந்தையில் சாமான்கள் வாங்கிவருவார். வைஷ்ணவி எங்கும் வெளியில் போவதில்லை—அவர் போக விடுவதில்லை.

ஒரு நாள் கோவிந்தர் ஒரு கீழ் அறையில் பள்ளம் தோண்டிக் கொண்டிருக்கையில் ஓரிடத்தில் ஒரு மோஹரா கிடைத்தது. கோவிந்தர் அந்த இடத்தில் இன்னும் தோண்டிப் பார்த்தார். ஒரு பானை நிறைய நாணயங்கள் இருந்தன. இந்தப் பணம் கிடைத்திருக்காவிட்டால் அவர் கள் காலக்ஷேபம் நடத்துவதே சிரமமாகப் போயிருக்கும்.

அதுமுதல் அவர்களுக்கு சௌக்கியமாகக் காலம் கழிந்துவந் தது. பணம் கிடைத்ததிலிருந்து அவருக்கு அங்கே இன்னும் பணம் இருக்குமென்று தோன்றிற்று. அந்த மாதிரி இடங்களில் ஏராளமான திரவியம் பூமியில் புதைத்துவைத் திருப்பதுண்டு என்று அவருக்குத் தெரியும். அது முதல் அவர் வெறிபிடித்தவர்போலத் தேட ஆரம்பித்தார். எல்லா இடங்களிலும் தோண்டித் தோண்டிப்பார்த்து பல அந்தரங்க அறைகளையும் சுரங்கங்களையும் கண்டுபிடித்தார். ஆனால் எங்கும் ஒன்றும் கிடைக்கவில்லை. இந்தமாதிரி ஒருவருஷம் தேடித்தேடி கோவிந்தர் அலுத்தும் போனார். ஆனால் அப்பொழுது சிற்சில சமயங்களில் கீழே இருட்டு அறைகளுக்குள் போய் மறுபடியும் தேடுவார். ஒருநாள் ஒரு இருட்டு அறையின் ஒரு மூலையில் ஏதோவொன்று பள பள வென்று தெரிந்தது. ஓடிப்போய் கையில் எடுத்துப் பார்த்தார். மோஹரா! மண்ணைப் புரட்டினார்; மண்ணுடன் இன்னும் மோஹராக்கள் வந்தன.

கிருஷ்ண கோவிந்தர் அப்பொழுது ஒன்றும் செய்ய வில்லை. சந்தை நாளை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார். அன்று வைஷ்ணவியிடம், "இன்று எனக்கு உடம்பு சரியா யில்லை. நீ சந்தைக்குப் போய்விட்டுவா" என்றார். அவள் உடனே கிளம்பிவிட்டாள். எந்நாளும் போகாதவள் ஒரு நாள் போனால் சட்டென்று வரமாட்டாள் என்று எண்ணி, கோவிந்தர் அந்தப் புதையல் இருந்த இடத்திற்குப்போய்த் தோண்டலானார். அங்கே புதைந்துகிடந்த தனம் பூராவை யும் வெளியே எடுத்தார்.

முற்காலத்தில் வடக்கு வங்காளத்தில் நீலத்துவஜ வம்சத்து அரசர்கள் அரசாட்சி புரிந்துவந்தார்கள். அந்தவம்சத் தின் கடைசி அரசன் நீலாம்பரதேவன். அவனுக்கு அநேக ராஜதானிகள் இருந்தன. அநேக நகரங்களில் அநேக அரண்

மனைகளும் இருந்தன. அவற்றில் ஒன்று இந்த (இடிந்த) மாளிகை. வருஷத்தில் ஓரிரண்டு வாரங்கள் அவன் இங்கே தங்குவது வழக்கம். வடநாட்டுப் பாதுஷா வட வங்காளத்தைக் கைப்பற்ற வேண்டுமென்று இச்சைகொண்டு நீலாம்பரன்மேல் படையெடுத்து வந்தான். பட்டாணியர்கள் ஒரு வேளை ராஜதானியைக் கைப்பற்றி அதிகாரத்திற்கு வந்துவிட்டால் தன் பெரியோர்கள் சேகரம் செய்த தனது பெருத்த பொக்கிஷம் பூராவும் அவர்கள் கைக்குப் போய் விடுமே என்று யோசித்து நீலாம்பரன் முன்னாலேயே ஜாக்கிரதையாக இருக்கவேண்டுமென்று தீர்மானித்தான். யுத்தம் ஆரம்பிப்பதற்கு முன்பே பொக்கிஷம் பூராவையும் இந்த மாளிகைக்குக் கொண்டுவந்துவிட்டான். தன் கைப்பட அதை பூமியில் புதைத்தான். பணம் அங்கே இருந்தது வேறு யாருக்குமே தெரியாது. போரில் நீலாம்பரன் கைதியானான். பட்டாணிய சேனாதிபதி அவனை தன் தேசத்திற்குக் கொண்டு போய்விட்டான். அதற்குப் பிறகு அவனை வேறு யாரும் காணவில்லை. அவன் திரும்பிவரவில்லை. அதுமுதல் அவன் பொக்கிஷம் அங்கேயே புதைந்துகிடந்தது. அதுதான் கிருஷ்ண கோவிந்தருக்குக் கிடைத்தது. தங்கம், வைரம், முத்து, பவழம் எல்லாம் கணக்கற்றிருந்தன; அவை இவ்வளவென்று சொல்லமுடியாது. அதை அவர் தோண்டி எடுத்தார்.

புதையலை ஜாக்கிரதையாக மறைத்து வைத்தார். வைஷ்ணவியிடம் சொல்லவே இல்லை. அதிலிருந்து ஒரு மோஹரா கூட அவர் எடுத்துச் செலவழிப்பதில்லை. அந்தப் பணக்குவியலுக்கு மேலேயே கடைசியாகப் பிராணனையும் விட்டார்.

அதை மறைத்து வைத்துவிட்டு வந்து பிரபுல்லா படுத்துக்கொண்டாள். அன்றைய அலைச்சல்களின் சிரமத்தால் உடனே அயர்ந்து தூங்கிப்போய்விட்டாள்.

---

## பத்தாம் அத்தியாயம்

# பூலமணியின் புளுகு

இப்பொழுது பூலமணியைப்பற்றிக் கொஞ்சம் கவனிப்போம். நாவிதப்பெண் பூலமணி உயிரைக் கையில் பிடித்துக்கொண்டு மான்போல திகில்கொண்டு ஓடினாள். கொள்ளைக்காரர்கள் பயம் மேலிட்டு தூர்லபசந்திரன், முன்னால் வெகுவேகமாக ஓடினான்; பின்னால் பூலமணி ஓடினாள். ஆனால், அவன் ஓட்டத்தை அவளால் பிடிக்கமுடியவில்லை.

"ஓய், நில்லும் சற்று. இல்லாவிட்டால் என்னால் கூட வரமுடியாது" என்று கத்தினாள்.

"ஸ்வாமி, பகவானே! கிருஷ்ணா!" என்று கத்திக்கொண்டு ஓடினான் தூர்லபன்.

கல்லிலும் முள்ளிலும் விழுந்தடித்துக்கொண்டு, பள்ளங்களைத் தாண்டியும், சேற்றை வாரியடித்துக்கொண்டும், மேல் மூச்சு வாங்கப் பறந்தான் தூர்லபன். ஆமாம்! கச்சம் அவிழ்ந்து போய்விட்டது: ஒரு கால் செருப்பு கழன்று எங்கோ விழுந்துவிட்டது; மேல்வேஷ்டி ஒரு முட்புதரில் அகப்பட்டுக்கொண்டு காற்றில் அவனுடைய வீரக்கொடிபோல் பறந்துகொண்டிருந்தது.

"அடே, கேடுகெட்டப் பதரே! பெண் பிள்ளையை இப்படி விட்டுவிட்டு நீ ஓடுகிறாயே—கொள்ளைக்காரர்கள் கையில் அகப்பட்டுக்கொள்ளும்படி?" என்று பூலமணி வீரிட்டாள்.

இதைக்கேட்டு துர்லபன், பூலமணி திருடர்கள்கையில் அகப்பட்டுக்கொண்டு விட்டாள் என்றே தீர்மானித்தான். அவன் பதில் பேச்சில்லாமல் இன்னும் வேகமாக ஓட ஆரம்பித்தான்.

"அடே, நீ நாசமாய்ப்போக! கொலைபாதகா!" என்று அவள் வைது கொண்டிருக்கும்போதே துர்லபன் அவள் கண்ணுக்குத் தெரியாமல் மறைந்துபோனான். பூலமணி அழ ஆரம்பித்தாள். அழும்போதே துர்லபனுடைய தாய் தகப்பன்மீது ஏதேதோ பழிகளெல்லாம் சுமத்தினாள்.

திருடர்களைக் காணோம். பூலமணி சிறிது நேரம் ஓரிடத்தில் நின்று யோசித்தாள். அழுகையை நிறுத்திவிட்டு நாலாபக்கங்களிலும் பார்த்தாள் — திருடர்களையும் காணோம்; துர்லபனையும் காணோம். அதன் பிறகு காட்டை விட்டு வெளியே கொண்டுபோய் விடும் பாதையைத் தேடலானாள். அவளைப் போன்ற கெட்டிக்காரிக்கு அது ஒரு சிரமமான காரியமா? சுலபமாக வழியைக் கண்டுபிடித்துக்கொண்டு ராஜபாட்டைக்கு வந்துசேர்ந்தாள். எங்கும் யாரும் தென்படாததுகண்டு வீட்டை நோக்கிப் புறப்பட்டாள். துர்லபன் பேரில் அவளுக்கு அப்பொழுதிருந்த கோபத்தைப்பற்றிச் சொல்லவேண்டுமோ?

வெகு நேரம் கழித்து பூலமணி வீட்டிற்குப் போய்ச் சேர்ந்தாள். அவளுடைய தங்கை அளகமணி வீட்டிலில்லை; குளிக்கப் போயிருந்தாள். பூலமணி யாரிடமும் ஒன்றும் பேசாமல் கதவைத் திறந்து போட்டுவிட்டுப் படுத்துக் கொண்டாள். இரவு பூராவும் தூக்கம் கிடையாதல்லவா? படுத்ததுதான் தாமதம் — பூலமணி நன்றாகத் தூங்கிப்போய் விட்டாள்.

அவள் தங்கை வந்து அவளை எழுப்பினாள்.

"என்னடி, நீ எப்பொழுது வந்தாய்?" என்று கேட்டாள்.

" என்ன ? நான் எங்கே போயிருந்தேன் ?"

" எங்கே போவாய் ? அந்தப் பெண் வீட்டிற்குப் படுத்துக்கொள்ளப்போவாயே — இத்தனை நாழிகை வரவில்லையே — எப்பொழுது வந்தாய் என்று கேட்டேன்."

" உனக்கு கண் மண்டைக்குள் போய்விட்டது — அதற்கென்ன செய்கிறது ? விடியற் காலையில்தானே வந்து படுத்துக்கொண்டேன். பார்க்கவில்லையா ?"

" அது எப்படி இருக்க முடியும் ? நான் விடிந்ததுமுதல் அவள் வீட்டிற்குப் போய் உன்னைத் தேடுகிறேனே! இதோடு மூன்று தடவையாயிற்றே. அங்கே உன்னைக் காணேமே ! அங்கே ஒருவரையும் காணேமே ! ஆமாம், பிரபுல்லா இன்றைக்கு எங்கே போயிருக்கிருள் ?"

பூலமணி நடுங்கிக்கொண்டு, " பேசாதேயடி, பேசாதே ! அந்த சமாசாரத்தை வாயாலே சொல்லக்கூடாது " என்ருள்.

" ஏண்டி, என்ன சமாசாரம் ?" என்று அளகமணி பயந்துகொண்டு கேட்டாள்.

" அந்த சமாசாரத்தைச் சொல்லுவதற்கில்லை."

" ஏண்டி ?"

" நமக்கென்ன புழுக்கைகள். தேவதைகள் விஷயம் நமக்கென்ன தெரியும் ?"

" அதென்னடி ? பிரபுல்லா என்ன செய்தாள் ?"

" பிரபுல்லா இன்னும் எங்கே இருக்கிருள் ?"

" அதென்ன ? என்னடி சொல்லுகிருய் ?" என்று அளகா திகிலுடன் கேட்டாள்.

" யாரிடமும் சொல்லாதே ! ராத்திரி அவள் தாயார் வந்து அவளைக் கூட்டிக்கொண்டு போய்விட்டாள் " என்று பூலமணி ரகசியமாகச் சொன்னுள்.

அளக மணியின் உடல் நடுங்கிற்று. பூலமணி ஒரு நல்ல கயிறு திரிக்க ஆரம்பித்தாள். இரவில் மூன்றும் ஜாமத்தில்

பிரபுல்லாவின் படுக்கையில் அவள் தாயாரும் இருந்தாள்; அப்புறம் கொல்லைப்புறத்தில் ஏதோ வொரு சத்தம் கேட்டது. பிறகு ஒருவரையும் காணோம். பூலமணி மூர்ச்சை யடைந்துபோய் விட்டாள் — இந்த மாதிரி.

கதையைப் பூராவும் சொல்லி முடித்துவிட்டுக் கடைசியில், "இதோ பார் அளகமணி! இதை யாரிடத்திலும் சொல்லிவிடாதே! சொன்னுயோ என் தலை போய்விடும்" என்றாள்.

"இல்லேடி அம்மா! சொல்லுவேனு?" என்று சொல்லிவிட்டு அந்த அம்மை உடனே குடத்தை யெடுத்துக்கொண்டு வெளியே கிளம்பினுள். ஒவ்வொரு வீடாகப்போய் நின்றுகொண்டு கதையை மேன்மேலும் அதிகமாக ஜோடித்துச் சொல்லிக்கொண்டே போனுள். கடைசியில், "பாருங்கள், இதை யாரிடமும் சொல்லிவிட வேண்டாம்" என்றும் சொன்னுள். அதன் பலனுக, கதை வேறு தினுசாகவே மாறி, பிரபுல்லாவின் மாமனுர் ஊருக்கு எட்டிற்று. என்ன தினுசென்று சொல்லவேண்டுமா? பிறகு சொல்லுவோம்.

---

## பதினோராம் அத்தியாயம்

# பவானி பாடக்

**கா**லையில் எழுந்ததும் பிரபுல்லா மேலே என்ன செய்வது என்று யோசிக்கலானாள். அந்த அடர்ந்த காட்டில் சாப்பாடு எப்படி? அதற்கு அங்கே இடம் எங்கே?

"எங்கேதான் போகிறது? வீட்டிற்குத் திரும்பிப் போகலாமென்றால் மறுபடியும் திருடர்கள் கையில்தான் அகப்பட்டுக் கொள்ளவேண்டும். இல்லை, வேறெங்காவது போகலாமென்றால் அவ்வளவு பணத்தையும் எடுத்துக்கொண்டு எப்படிப் போவது? ஆட்களை விட்டு எடுத்துக்கொண்டு போவதென்றால், அது தெரிந்து கொள்ளைக்காரர்கள் வந்து மறித்து அடித்துக்கொண்டு போய்விட்டால் என்ன செய்வது? அப்படித்தான் ஆகட்டும், ஆள் எங்கே கிடைக்கும்? கிடைத்தாலும் அவர்களை எப்படி நம்புவது? என்னைக் கொன்றுவிட்டுப் பணத்தை எடுத்துக்கொண்டு போய்விடுவதற்கு எத்தனை நேரம் ஆகும்? இந்தப் பணத்தாசையும் விடமாட்டேன் என்கிறது."

இந்தமாதிரி பிரபுல்லா வெகு நேரம் யோசனை செய்து செய்து பார்த்தாள். கடைசியில் ஒருவிதமான தீர்மானத்திற்கு வந்தாள். "அதிருஷ்டம் விட்டவழி விடட்டும். இனிமேல் வறுமையின் கொடுமையைச் சகிக்க முடியாது. இங்கேயே இருந்துவிட வேண்டியதுதான். என் சம்பந்தப்

பட்டமட்டில் துர்க்காபுரத்திற்கும் இந்தக் காட்டிற்கும் என்ன வித்தியாசம்? அங்கேயுந்தான் திருடர்கள் என்னைக் கட்டித் தூக்கிக்கொண்டு போனார்கள். இங்கே இருப்பதில் என்ன கெட்டுப்போகிறது?"

இப்படியாக மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு பிரபுல்லா வீட்டுக் காரியங்களைச் செய்ய ஆரம்பித்தாள். வாசற்படியை நன்றாக சுத்தம் செய்தாள். பசுக்களுக்குத் தீனி போட்டாள். சமையல் வேலைதான் பாக்கி. எதைச் சமைக்கிறது? பானை, விறகு, அரிசி—ஒன்றும் இல்லை. பிரபுல்லா ஒரு மோஹராவை எடுத்துக்கொண்டு கடையைத் தேடிக் கொண்டு புறப்பட்டாள். பிரபுல்லாவிற்கு அவ்வளவு தைரியம் வந்தது ஆச்சரியந்தான்.

அந்தக் காட்டில் கடை எங்கே என்று கண்டுபிடிப்பது? தேடிப் பார்ப்போமென்று, பிரபுல்லா நாம் முன்பே குறித்த காட்டுப் பாதையை பிடித்துக்கொண்டே போனாள்.

வெகு தூரம் சென்றபிறகு காட்டிற்குள் ஒரு பிராமணன் எதிர்ப்பட்டான். அவன் நாமாவளியை சதா சொல்லிக் கொண்டிருந்தான். நெற்றியில் கோபிச்சந்தனம் இட்டுக் கொண்டிருந்தான். தலை மொட்டை; கண்ணுக்குச் சுமாராக சிவந்த மேனி; வயசு அதிகம் ஆயிருக்காது. அவன் பிரபுல்லாவைக் கண்டதும் கொஞ்சம் திடுக்கிட்டுப்போனான்.

"எங்கே போகவேண்டும், அம்மா?" என்று கேட்டான்.

"சந்தைக் கடைக்குப் போகவேண்டும்."

"இந்தப் பக்கம் கடைக்குப் பாதை எங்கே இருக்கிறது?"

"பின் எந்தப் பக்கம்?"

"நீ எங்கிருந்து வருகிறாய்?"

"இந்தக் காட்டிலிருந்துதான்!"

"இதிலேயேதான் உனக்கு இருப்பிடமா?"

" ஆமாம்!"

"பின் உனக்கேன் சந்தைக்கடைக்குப் போகும் வழி தெரியவில்லை?"

"நான் புதிதாக இப்பொழுதுதான் வந்திருக்கிறேன்."

"இந்தக் காட்டில் யாரும் இஷ்டப்படி திரியக்கூடாதே, நீ ஏன் வெளியே வந்தாய்?"

"எனக்குக் கடைக்குப்போக வழி சொல்லவேண்டும்."

"கடைக்குக் கொஞ்ச தூரம் போகவேண்டும். நீ தனியாகப் போகக்கூடாது. திருடர்கள் பயம் இங்கே ஜாஸ்தி. உன்னுடன் இன்னும் யார் இருக்கிறார்கள்?"

"இன்னும் யாரும் இல்லை."

பிராமணன் வெகு நேரம் பிரபுல்லாவின் முகத்தை உற்றுப் பார்த்தான். "இந்தப் பெண் சகல லக்ஷணங்களும் பொருந்தினவளாக இருக்கிறாள். நன்றாகத் தெரிந்துகொண்டு போகவேண்டும்" என்று எண்ணிக்கொண்டு, "நீ தனியாகப் போகக்கூடாது, ஆபத்து நேரக்கூடும். இங்கேயே எனக்கு ஒரு சின்ன சில்லறைக் கடை இருக்கிறது. இஷ்டமானால் நீ அதிலிருந்து வேண்டியதை வாங்கிக்கொள்ளலாம்" என்றான்.

"அப்படியானால் ரொம்ப நல்லதாயிற்று. ஆனால் உங்களைப் பார்த்தால் நல்ல வைதீகப் பிராமணன் போலிருக்கிறதே?" என்றாள் பிரபுல்லா.

"வைதிக பிராமணர்கள் அநேக ரகம், அம்மா! என்னுடன் வா!"

இந்தமாதிரி சொல்லி பிராமணன் பிரபுல்லாவைக் கூட்டிக்கொண்டு காட்டில் இன்னும் அடர்த்தியான பிரதேசத்தில் நுழைந்தான். பிரபுல்லாவிற்கு உள்ளூறக் கொஞ்சம் பயந்தான். ஆனால் காட்டில் எங்கேதான் பயமில்லை? அங்கே எதிரே ஒரு குடிசை இருந்தது. கதவு சாத்திப் பூட்டப்பட்டிருந்தது; ஒருவருமில்லை.. பிராமணன் கதவைத்

திறந்தான். கடையில் வேண்டிய சாமான் யாவும் இருந்தன - பானை, சொம்பு, அரிசி, பருப்பு, நெய், எண்ணெய், உப்பு சகலமும்!

"இதில் உன்னால் தூக்க முடிந்ததை வேண்டிய அளவு எடுத்துக்கொள்" என்றான் பிராமணன்.

பிரபுல்லா வேண்டியதை எடுத்துக்கொண்டாள். "இதற்கு எவ்வளவு கொடுக்கவேண்டும்?" என்று கேட்டாள்.

"எட்டு அணா!"

"என்னிடம் சில்லறை இல்லையே!"

"ரூபாயாக இருக்கிறதா? கொடு, மாற்றித் தருகிறேன்."

"என்னிடம் ரூபாயும் இல்லை."

"ரூபா இல்லாமல் பின் எதற்காக சந்தைக்குப் புறப்பட்டாய்?" என்று பிராமணன் கொஞ்சம் கோபத்துடன் கேட்டான்.

"ஒரு மோஹராவாகத்தான் இருக்கிறது."

"காட்டு!"

பிரபுல்லா மோஹராவைக் காட்டினாள். பிராமணன் அதைப்பார்த்துத் திகைத்துப்போனான்.

"அதற்கு ரூபாய் கொடுக்க என்னிடம் பணம் இல்லை. உன்னுடன் கூட வருகிறேன். வீட்டிலிருந்து பணம் எடுத்துக்கொடு" என்றான் அவன்.

"வீட்டிலும் என்னிடம் சில்லறை இல்லை" என்றாள் பிரபுல்லா.

"எல்லாம் மோஹராவா? அப்படியானால் வா, போவோம். உன் வீட்டைப் பார்த்துத் தெரிந்து வைத்துக் கொள்ளுகிறேன். நீ சில்லறை மாற்றிய பிறகு வந்து வாங்கிக்கொள்ளுகிறேன்."

"எல்லாம் மோஹராவா?" என்று பிராமணன் கேட்ட தொனியிலிருந்து பிரபுல்லாவிற்குச் சந்தேகம் ஏற்பட்டது.

தன்னிடம் ஏராளமாகப் பணம் இருந்ததை அறிந்த கெட்டிக் காரப் பிராமணன் தன் வீட்டைத் தெரிந்துகொள்ள விரும்பி னது அவளுக்குப் பிடிக்கவில்லை.

“நானே சந்தைக்கு வரவேண்டியிருக்கிறது துணிமணி வாங்க. அப்பொழுது—”

பிராமணன் சிரித்துக்கொண்டு, “அம்மா! உன் வீட்டைத் தெரிந்துகொண்டு நான் உன் பணத்தையெல்லாம் அபகரித்துக் கொள்ளப் பார்க்கிறேன் என்று நினைக்கிறாய் போலிருக்கிறது. ஆமாம், நீ என்னிடமிருந்து விடுபட்டல்லவா இங்கிருந்து போகவேண்டும்? நான் உன்கூட வராவிட்டால், உன்னைக் காப்பாற்றாவிட்டால், நீ தப்பமுடியாது” என்றான்.

பிரபுல்லா நடுக்கமுற்றாள்.

“நான் உன்னை ஏமாற்ற இஷ்டப்படவில்லை. நான் வைதீக பிராமணன் என்று நீ நினைக்கிறாய். நான் கொள்ளைக் காரர்களின் தலைவன்: என் பெயர் பவானி பாடக்.”

பிரபுல்லாவிற்கு நாடி தளர்ந்துவிட்டது. பவானி பாடக் என்ற பெயரை அவள் துர்க்காபுரத்தில் கேள்விப்பட்டிருக்கி றாள். அவன் பெயர்போன திருடன். அவன் பெயரைக் கேட்டால் வரேந்திர பூமியே கலங்கும்; பிரபுல்லாவிற்கு பேசக்கூட நா எழவில்லை.

“நம்பிக்கையில்லாவிட்டால் நேரிலேயே பார்!” என்று சொல்லிவிட்டு, பவானி பாடக் வீட்டிற்குள்ளிருந்த ஒரு நகராவை வெளியே கொண்டுவந்து அதில் சில அடி அடித் தான். சிறிது நேரத்தில் யமபடர்கள்போல ஏழெட்டுப் பேர்கள் கையில் கம்பும் வேலுமாகத் தோன்றினார்கள். அவர் கள் பவானியைப் பார்த்து, “என்ன உத்திரவு?” என்றார்கள்.

“இந்தப் பெண்ணை நீங்கள் நன்றாக அடையாளம் வைத் துக் கொள்ளவேண்டும். நான் இவளைத் தாய்போலக் கருது கிறேன். நீங்களும் அதேமாதிரி எண்ணி அவளிடம் அந்தப்

படி நடந்துகொள்ளவேண்டும். நீங்கள் இவளுக்கு யாதொரு தீங்கும் விளைவிக்கக்கூடாது, தெரியுமா? வேறு யாரும் கிட்டே நெருங்காமல் பார்த்துக்கொள்ளவேண்டும். ஜாக்கிரதை. நீங்கள் போகலாம்'' என்று பவானி பாடக் சொன்னதும் அவர்கள் உடனே மறைந்தார்கள்.

பிரபுல்லா மிகவும் ஆச்சரிய மடைந்தாள். அவனைச் சரணுகதி அடைவதைத் தவிர வேறு வழியில்லை என்று உடனே தீர்மானித்தாள்.

"போங்கள். நான் என் வீட்டை உங்களுக்குக் காண்பிக்கிறேன்" என்றாள் பிரபுல்லா.

பிரபுல்லா பணத்தை வைத்திருக்கும் இடத்தை நோக்கிப் புறப்பட்டாள். அவள் முன்னல் சென்றாள், பவானி பாடக் பின்னல் சென்றான். அவர்கள் அந்த இடிந்த மாளிகைக்கு வந்துசேர்ந்தார்கள். பிரபுல்லா சாமான்களைக் கீழே வைத்துவிட்டு, பாடக் உட்காருவதற்காக ஒரு கிழிந்த பாயைக் கொண்டுவந்து போட்டாள்.

---

## பன்னிரண்டாம் அத்தியாயம்

## பாடக் தேடின பொருள்

"இந்த இடிந்த மாளிகையிலா உனக்கு மோஹராக்கள் கிடைத்தன ?" என்று பாடக் கேட்டான்.

"ஆமாம் !" என்றாள் பிரபுல்லா.

"எவ்வளவு ?"

"ரொம்ப !"

"சரியாகப் பதில் சொல், தப்புத் தண்டாவாக பதில் சொன்னால் என் ஆட்கள் வந்து தோண்டிப் பார்ப்பார்கள்."

"இருபது தவலைகள்."

"இவ்வளவு திரவியத்தை வைத்துக்கொண்டு நீ என்ன செய்வாய் ?"

"ஊருக்கு எடுத்துக்கொண்டு போவேன்."

"அதை உன்னால் ஜாக்கிரதையாகக் காப்பாற்ற முடியுமா ?"

"உங்களுடைய உதவியிருந்தால் முடியும்."

"இந்தக் காட்டில் எனக்குப் பூர்ண அதிகாரம் உண்டு. இதைத் தாண்டினால் என் வார்த்தை ஒன்றும் செல்லாது. இதைத் தாண்டி நீ பணத்தை எடுத்துக்கொண்டு போனால் என்னால் காப்பாற்றிக்கொடுக்க முடியாது."

"அப்படியானால் நான் இங்கேயே, இந்த வனத்தில், இத்துடன் இருந்தால், நீங்கள் காப்பாற்றுவீர்களா ?"

"செய்வேன் ; ஆனால் நீ இவ்வளவு பணத்தை வைத்துக்கொண்டு என்ன செய்வாய் ?"

"உலகத்தில் பணத்தை வைத்துக்கொண்டு எல்லோரும் என்ன செய்வார்கள்?"

"அனுபவிப்பார்கள்!"

"நானும் அனுபவிப்பேன்!"

பவானி பாடக், "ஹோ, ஹோ!" என்று உரக்கச் சிரித்தான். பிரபுல்லா திடுக்கிட்டுப் போனாள்.

"ஒன்றும் தெரியாத பெண்போலப் பேசுகிறாயே! அதற்காகத்தான் சிரித்தேன். உனக்கு யாரும் கிடையாது என்று சொன்னாய். நீ யாரைக் கொண்டுவந்து வைத்துக் கொண்டு இந்த ஐசுவரியத்தை அனுபவிக்கப் போகிறாய்? தனியாக நீ மட்டும் இதை அனுபவிப்ப தென்பது எப்படி சாத்தியம்?" என்று பாடக் கேட்டான்.

பிரபுல்லா தலை குனிந்துகொண்டாள்.

"உலகத்தில் ஐசுவரியத்தைக்கொண்டு சிலர் சுகம் அனுபவிக்கிறார்கள்; சிலர் புண்ணியம் சம்பாதிக்கிறார்கள்; சிலர் நரகத்திற்குப்போகும் வழியை எளிதாக்கிக்கொள்ளுகிறார்கள். உனக்கு சுகம் அனுபவிக்க முடியாது; ஏனெனில் உனக்கு யாரும் இல்லை. நீ புண்ணியம் சம்பாதிக்கலாம், அல்லது நரகத்தின் பாதையை சுலபப்படுத்திக்கொள்ளலாம். என்ன செய்யப்போகிறாய்?" என்று பாடக் மேலும் கேட்டான்.

பிரபுல்லா நல்ல தைரியசாலி.

"இந்தப் பேச்செல்லாம் கள்வர் தலைவர் பேசும் பேச்சாக இல்லையே!" என்றாள்.

"இல்லை. நான் வெறும் கொள்ளைக்கூட்டத் தலைவன் அல்ல. அதுவும் உன்னிடம் நான் கள்வர் தலைவனாகப் பேசவில்லை. நான் உன்னைத் தாயார் என்றேன். உன்னிடம் நான் இப்பொழுது மிகவும் ஈடுபட்டுவிட்டேன். ஆகையால் இப்பொழுது உன் நன்மைக்காகச் சொல்லுகிறேன், கேள். பணத்

தால் ஏற்படும் சுகானுபவம் உனக்குக் கிடையாதென்றேன். ஏனெனில், உனக்கு யாரும் இல்லை ; ஆகையால் இந்தப் பணம் மூலம் விஸ்தாரமாக பாபமோ புண்ணியமோ செய்யமுடியும். எந்தப் பாதையில் போக விரும்புகிறாய்?"

"பாவம் செய்கிறேன் என்று நான் சொல்லுவதாக வைத்துக்கொள்ளுங்கள்."

"ஆட்களைக்கொண்டு உன் பணத்தையும் உன்னையும் இந்தக் காட்டை விட்டு வெளியேற்றி விடுவேன். இந்தக் காட்டில் என் ஆட்கள் அநேகர் இருக்கிறார்கள். அவர்கள் உன் பணத்தில் ஆசைப்பட்டு கெட்ட வழியில் தூண்டப் படலாம். ஆகையால் உனக்கு அந்த மாதிரி இஷ்டம் இருந்தால் உன்னை இந்த நிமிஷமே இங்கிருந்து வெளியே அனுப்ப எனக்கு உரிமையுண்டு ; இந்தக் காடு என்னுடையது!"

"உங்கள் ஆட்களைக்கொண்டு என்னை அப்படி வெளியே அனுப்பிவிட்டால் எனக்கு என்ன ஆபத்து வந்துவிடும் என்று நினைக்கிறீர்கள்?"

"உன்னை யார் காப்பாற்றுவார்கள் ? உனக்கு ரூபம் இருக்கிறது, யௌவனம் இருக்கிறது, வேண்டுமானால் திருடர்கள் கையிலிருந்து விடுபடலாம் ; ரூப யௌவனங்களிடமிருந்து நீ தப்புவது எப்படி? பாபம் செய்யவேண்டுமென்ற ஆசை பணத்தால் நிறைவேறும். நரகத்தின் பாதையை அது சரிப்படுத்துகிறது."

"ஐயா, நான் குடும்பப் பெண். நான் பாபமென்பதை அறியேன். நான் எப்படிப் பாவம் செய்யக்கூடும்? நான் பரம ஏழை. எனக்கு அன்ன வஸ்திரத்திற்கு ஏதாவது இருந்தால் போதும். எனக்குப் பணம் வேண்டாம், நீங்கள் இந்த திரவியம் பூராவையும் எடுத்துக்கொள்ளுங்கள். நான் காலட்சேபம் செய்வதற்கு ஏதாவதொரு ஏற்பாடு செய்து விடுங்கள் போதும்" என்றாள் பிரபுல்லா திடமென்று.

பவானி பாடக் மனத்திற்குள் பிரபுல்லாவைப் புகழ்ந்து கொண்டான். வெளிக்கு, "பணம் உன்னுடையது, எனக்கு அது வேண்டாம்!" என்றான்.

பிரபுல்லா ஆச்சரியம் அடைந்தாள். அவள் மனத்தை ஊகித்து பாடக், "கொள்ளையடித்து, பிறர் சொத்தை அபகரித்து எடுத்து, இந்த மாதிரி நான் பாசாங்கு செய்வதேன் என்று நீ யோசிக்கிறாய். அதைப்பற்றி நான் இப்பொழுது உன்னிடம் ஒன்றும் சொல்லிப் பிரயோசனமில்லை. நீ அகிருத்தியம் செய்ய ஆரம்பித்தால் உன் பணத்தையும் கொள்ளையடித்துக்கொண்டு விடுவேன். மறுபடியும் கேட்கிறேன் - இந்தப் பணத்தை வைத்துக்கொண்டு நீ என்ன செய்யப் போகிறாய்?" என்று கேட்டான்.

"நீங்கள் எல்லாம் தெரிந்தவர்கள் என்று தெரிகிறது. நான் இதை வைத்துக்கொண்டு என்ன செய்வதென்று நீங்களே சொல்லுங்கள், கேட்கிறேன்" என்றாள் பிரபுல்லா.

சொல்லுவதற்கு நாலு ஐந்து வருஷங்கள் ஆகவேண்டும். இஷ்டப்பட்டால் நான் உனக்கு வழி சொல்லிக்கொடுக்கத் தயாராக இருக்கிறேன். இந்த ஐந்தாறு வருஷமும் நீ இந்தப் பணத்தைத் தொடக்கூடாது. உனக்குக் காலட்சேபம் நடத்துவதற்கு ஒரு சிரமமும் இல்லாமல் பார்த்துக்கொள்ளுகிறேன். வேலையாட்கள் முதல், சகலமும் உனக்குக் கொடுக்கிறேன். ஆனால் நான் எது சொல்லுகிறேனே அதற்கு நீ மறு பேச்சு சொல்லக்கூடாது, என்ன ? சரிதானா ?"

"நான் எங்கே இருப்பது?"

"இங்கேயேதான்."

"இங்கே தனியாகவா வசிப்பது ?"

"இல்லை, நான் இரண்டு பெண்களை அனுப்புகிறேன். அவர்கள் உன்னுடன் இருப்பார்கள். ஒன்றுக்கும் நீ பயப்படவேண்டாம். இந்தக் காட்டில் நான் வைத்ததுதான் சட்

டம். நான் இருக்கிற வரையிலும் உனக்கு யாதொரு ஆபத்தும் கிடையாது."

"எனக்கு என்ன சொல்லிக்கொடுக்கப் போகிறீர்கள்?"

"உனக்கு எழுதப்படிக்கத் தெரியுமா?"

"தெரியாது!"

"முதலில் எழுதப் படிக்கச் சொல்லிக் கொடுக்கப் போகிறேன்."

பிரபுல்லா உடனே திருப்தி அடைந்தாள். அந்தக் காட்டில் தனக்கு அப்பேர்ப்பட்ட ஆதரவு கிடைத்துவிட்டதை நினைத்து மனம் பூரித்தாள்.

பவானி பாடக் அவளிடமிருந்து விடைபெற்றுக் கொண்டு வெளியே வந்தான். அங்கே ஒருவன் அவனை எதிர் பார்த்துக் காத்துக்கொண்டிருந்தான். அவன் சரியான ஆசாமி, உருண்டு பருத்த தோள்களும் தேகமும் உடையவனாக யிருந்தான். பவானி அவனைப் பார்த்து, "ரங்கராஜா, எங்கே வந்தாய்?" என்று கேட்டான்.

"உங்களைத் தேடிக்கொண்டுதான். நீங்கள் இங்கே-?"

"நாம் இவ்வளவு நாள் தேடினது இன்று கிடைத்து விட்டது."

"ராஜாவா?"

"ராணி!"

"ராஜா ராணியைத் தேடுவானேன்? ஆங்கில ராஜா இருக்கிறார். கல்கத்தாவில் வாரன் ஹேஸ்டிங்ஸ் என்பவர் இருக்கிறார்."

"நான் அந்தமாதிரி ராஜாவைத் தேடித்திரியவில்லை. நான் யாரைத் தேடினேன் என்பது உனக்குத் தெரியும்."

"இப்பொழுது கிடைத்தாய்விட்டதா?"

"நல்ல வஸ்துவாகக் கிடைத்துவிட்டது. கொஞ்சம் தயார்செய்யவேண்டும், அவ்வளவுதான். ஈசுவரன் மகத்தான

சிருஷ்டி செய்திருக்கிறார். இப்பொழுது நமக்கு திவ்வியமான பொருள் கிடைத்திருக்கிறது. இதோ பார், இந்த வீட்டிற்குள், என்னைத் தவிர வேறு புருஷர்கள் யாரும் நுழையக் கூடாது. அழகும் யௌவனமும் நிறைந்த பெண் ஒருத்தி இதில் இருக்கிறாள்."

"உத்தரவு. இப்பொழுது இஜாராதார்கள் நஞ்சனபுரத்தைக் கொள்ளை யடித்திருக்கிறார்கள். அதற்காகத்தான் உங்களைத் தேடிவந்தேன்."

"போ, அப்படியானால் நாம் அவர்களுடைய கச்சேரியைக் கொள்ளையடித்து கிராமத்தார்களுக்கு அவர்கள் சொத்தைத் திருப்பிக்கொடுப்போம்; கிராமத்தார் உதவி செய்வார்களா?"

"செய்வார்கள் என்று நினைக்கிறேன்."

---

## பதின்மூன்றும் அத்தியாயம்

## தோழிகள்

பவானி பாடக், சொன்னபடியே இரண்டு பெண்களை அனுப்பினான். ஒருத்தி கடைகண்ணிக்குப் போகவேண்டியது; மற்றொருத்தி சதா பிரபுல்லாவுடன் கூட இருக்க வேண்டியது. இருவரும் இரண்டு தினுசு, வெளியில் போகிறவள் பெயர் கௌரம்மாள்; வயது எழுபத்திமூன்று, கருப்பைக் காட்டிலும் கருப்பு. ஒரே அடியாய்க் காது கேட்காமல் போனாலும பாதகமில்லை. ஓரளவு சமிக்ஞைகள் மூலம் தெரிந்துகொள்வாள். சில பேச்சுகள் காதில் படும்; சில படாது.

பிரவில்லாவுக்குத் தோழியாக வந்தவள் அழகானவள். அவளைக் காட்டிலும் ஐந்தாறு வயது பெரியவள். நல்ல நிறம். மழை காலத்து இளம் தளிர்கள் போல அவள் மேனி தளதளவென்று இருந்தது. அழகு பொங்கி வழிந்து கொண்டிருந்தது அவளுடைய அங்கங்களில்.

இருவரும் பௌர்ணமியும் அமாவாசையும் சேர்ந்து வருவதுபோல் வந்துசேர்ந்தார்கள். கௌரம்மாள் பிரபுல்லா விற்கு வந்தனம் செய்தாள்.

"உங்கள் பெயர் என்ன அம்மா?" என்று பிரபுல்லா கேட்டாள்.

"அவளுக்குக் காது கேட்கவில்லை. மற்றவள், "அவள் ஒரே கருப்பாகையால் எல்லோரும் அவளை "கௌரம்மாள்" என்று கூப்பிடுவார்கள்" என்றாள்.

"கௌரம்மா! உங்களுக்குக் குழந்தைகள் எவ்வளவு?"

"நான் எங்கே போகப் போகிறேன்? வீட்டிலேயே தான் இருக்கப்போகிறேன்" என்றாள் அந்தம்மாள்.

"நீங்கள் என்ன ஜாதி?" என்று உரக்கக் கேட்டாள் பிரபுல்லா.

"போய்வரத்தான்! எங்கே போகச் சொல்லுகிறீர்களோ அங்கே போகிறேன்."

"நீங்கள் என்ன ஜாதி என்று கேட்கிறேன்."

"உங்களிடத்தில் என்ன வேலை இருக்கிறது அம்மா? நான் ஒருத்தியே செய்துவிடுவேன்; ஒன்று இரண்டுதான் என்றால் செய்யமுடியாது."

"எது செய்ய முடியாது?" என்று பிரபுல்லா கேட்டாள்.

அந்தம்மாளுக்குக் கொஞ்சம் காது கேட்டது. "எது முடியாது என்று கேட்கிறீர்களா? ஜலம் தூக்க முடியாது; எனக்கு இடுப்பில் பலம் இல்லை; துணிமணி துவைக்க முடியாது; அதை நீங்கள்தான் செய்துகொள்ள வேண்டும்."

"பாக்கி எல்லாம் செய்ய முடியுமோல்லியோ?"

"பாத்திரம் கீத்திரம் தேய்க்க வராதம்மா; அதை நீங்களேதான் செய்துகொள்ள வேண்டும்."

"அதுவும் முடியாது, பின் எதுதான் முடியும்?"

"இன்னும் இந்த மாதிரி சிலது இல்லையா? - வீடு கூட்டி மொழுகி சுத்தம் செய்கிறது - அதுவும் அதிகமாகத் தள்ளாது."

"பின் என்ன முடியும், சொல்லிவிடுங்களேன்."

"இன்னும் என்ன சொல்லுகிறாயோ அதெல்லாம் செய்வேன். வீடு பெருக்குகிறது, ஜலம் இழுக்கிறது, இன்னும் என்ன காரியம் இருக்கிறதோ, எல்லாம் செய்வேன்."

"செலவழித்த பணத்திற்குக் கணக்குச் சொல்லத் தெரியுமா?"

"ஐயையோ! அதெல்லாம் என்னுலாகாதம்மா! எனக்கு வயதாகி விட்டது. ஏதாவது சில்லறை கொடுத்தால் செல வழித்து விட்டு வருவேன், கணக்கு சொல்லத் தெரியாது."

"உன்னைப் போல வேலைக்காரி கிடைப்பது ரொம்ப அபூர்வம், போ!" என்றாள் பிரபுல்லா.

"என்னம்மா சொல்லுகிருய்! என்னைப் பற்றித் தானே?"

பிரபுல்லா பிறகு இளையவளைப் பார்த்து, "உன் பெயர் என்னம்மா?" என்று கேட்டாள்.

"அது எனக்குத் தெரியாதம்மா!" என்றாள் புதிதாக வந்தவள்.

"அதென்ன? தாயார் தகப்பனார் பெயர் வைக்க வில்லையா உனக்கு?"

"வைத்திருக்கலாம், அது எனக்குத் தெரியாது."

"அதெப்படி?"

"எனக்கு அறிவு வருவதற்கு முன்பே நான் தாய் தந்தையர்களை விட்டுப் பிரிந்துவிட்டேன். குழந்தையா யிருக்கும் பொழுதே தொட்டிலிலிருந்து என்னைத் திருடர் கள் தூக்கிக்கொண்டு வந்துவிட்டார்கள்."

"இருக்கட்டும், அவர்களாவது ஏதாவதொரு பெயர் வைத்திருப்பார்கள், அல்லவா?"

"அநேக பெயர்கள் உண்டு."

"என்னென்ன?"

"அழுமூஞ்சி, மூதேவி, அஷ்டதரித்திரம் -"

செவிட்டம்மாளுக்கு அப்பொழுது பேசியது காது கேட்டுவிட்டது. கடைசியாகச் சொன்ன வார்த்தைகள் தன்னைப்பற்றித்தான் என்று நினைத்துவிட்டாள். அவ்வளவு

தான், ஆரம்பித்துவிட்டாள்: "என்னை யார் அழுமூஞ்சி என்கிறார்களோ அவர்கள் நான் அழுமூஞ்சி; என்னை யார் மூதேவி என்கிறார்களோ அவர்கள்தான் மூதேவி - என்னை யார் மலடி -"

"மலடி என்று யாரும் சொல்லவில்லையே!" என்று வந்தவள் சிரித்துக்கொண்டு சொன்னாள்.

"நீதான் சொல்லியிருப்பாய்."

"உங்களைச் சொல்லவில்லை; என்னையல்லவா சொன்னது" என்று பிரபுல்லா சிரித்துக்கொண்டு சொன்னாள்.

"என்னையில்லையா! உன்னையா? நீ கோபித்துக்கொள்ளாதே, அம்மா. ஐயையோ, அவள் பிராமணப் பெண்ணையிற்றே. வாக்குப் பலித்துப்போனாலும் போகுமே!" என்றாள் கிழவி.

தன்னைப்பற்றி அவர்கள் ஏதோ சொல்லிவிட்டதாக எண்ணின பொழுது அவளுக்கு வந்த கோபத்தையும் பிறரைச் சொன்னார்கள் என்றதால் கோபம் உடனேமாறி, அவள் முகம் மலர்ந்ததையும் கண்டு, இரண்டு யுவதிகளும் சிரித்தார்கள்.

பிரபுல்லா மற்றவளைப் பார்த்து, "நீ பிராமணப் பெண்ணா! நீ அதை இதுவரையில் என்னிடம் சொல்லவில்லையே! நான் நமஸ்காரம் செய்யவேண்டாமோ?" என்று சொல்லிவிட்டு, நமஸ்காரம் செய்தாள்.

அவள் பிரபுல்லாவிற்கு ஆசீர்வாதம் செய்துவிட்டு, "நான் பிராமணப் பெண் என்று கேள்வி, ஆனால் இப்பொழுது பிராமணப் பெண் அல்ல."

"அதெப்படி?"

"ஜாதி விதிப்படி எனக்கு அந்த உரிமை இல்லை."

"கலியாணம் ஆகவில்லை? அது எதனால்?"

"கொள்ளைக்காரர்கள் கலியாணம் பண்ணிவைப்பார்களா?"

"ஆனால் அவர்களிடத்தில் வெகுகாலமாக இருக்கிறாயா?"

"கொள்ளைக்காரர்கள் என்னை ஒரு ராஜாவுக்கு விற்று விட்டார்கள்."

"ராஜா கலியாணம் செய்துகொள்ளவில்லையா?"

"ராஜபுத்திரன் இஷ்டப்பட்டான், ஆனால் கலியாணம் காந்தர்வ முறையில்தான் நடந்தது."

"பிறகு?"

"சில நாட்கள்தான் அங்கே இருந்தேன்."

"பிறகு?"

"அங்கிருந்து ஓடிவிட்டேன்."

"அப்புறம்?"

"ராணி சில ஆபரணங்கள் கொடுத்திருந்தாள். அவற்றுடன் வெளியேறினேன். திருடர்கள் கையில் அகப்பட்டுக் கொண்டேன். அவர்கள் தங்கள் தலைவர் பவானி பாடக்கிடம் என்னைக் கொண்டுபோனார்கள்; அவர் என் கதையைக் கேட்டு மனம் இளகினார். எனக்கு இன்னும் சில ஆபரணங்கள் கொடுத்து தன் வீட்டிலேயே என்னை வைத்து சம்ரக்ஷணை செய்தார். நான் அவர் மகளாக ஆகிவிட்டேன், அவர்தான் என் பிதா. அவர்தான் எனக்கு ஒரு விதமாக உபதேசம் செய்திருக்கிறார்."

"என்ன விதம்?"

"எல்லாம் ஸ்ரீ கிருஷ்ணார்ப்பணம் என்ற மாதிரி."

"எந்த மாதிரி?"

"ரூபம், யௌவனம், உயிர் எல்லாம் அவருடையது என்று."

"அவர்தான் உனக்குப் பதி என்றா?"

"ஆமாம், ஏன் கூடாது? எவர் சம்பூரணமாக என் மனதைக் கொள்ளைகொண்டுவிட்டாரோ அவர்தான் என் பதி."

பிரபுல்லா பெருமூச்செறிந்தாள்.

"எனக்கு ஒன்றும் தெரியவில்லை. என் பதியை நான் காணவில்லை, அது எனக்குத் தெரிகிறது. அவரைக் கண்டேனுல் ஸ்ரீ கிருஷ்ணனின் ரூபம் என் மனத்தில் இருக்காது" என்ருள் பிரபுல்லா மெதுவாக.

முட்டாள் விரஜேசுவரனுக்கு இது தெரியுமா?

"ஸ்ரீ கிருஷ்ணன் எல்லா ஸ்திரீகளின் மனத்திலும் தோன்றக் கூடியவன் - அவருடைய ரூபம் அனந்தம், யௌவனம் அனந்தம், ஐசுவரியம் அனந்தம், குணம் அனந்தம்!"

அந்தப் பெண், பவானி டாகுரிடம் சிக்ஷை பெற்றவள். பிரபுல்லா எழுதப்படிக்கத் தெரியாதவள், ஆகையால் அவளுக்கு ஒன்றும் பதில் சொல்லத் தெரியவில்லை. ஹிந்து தர்மம் அறிந்தவர்களுக்கு பதில் சொல்லத் தெரியும்; ஈசுவரன் அனந்தன்; ஆனுல்அனந்த ஸ்வரூபத்தைச் சின்ன ஹிருதயக் கூட்டில் இடமுடியாது. ஆகையால்தான் அனந்தனுன ஜகதீசுவரன் ஹிந்து ஹிருதயத்தில் ஸ்ரீ கிருஷ்ணனுக ஆவிர்ப்பவிக்கிருன். பெண்ணின் புருஷனும் அதே ஆவர்ப்பாவத்தின் அம்சந்தான். இந்த மாதிரி அன்பு பரிசுத்தமானுல் ஈசுவர சான்னித்தியத்திற்கு பதிபக்தி ஒரு படி. ஆகையால்தான் ஹிந்துப் பெண்களுக்கு பதி தேவதை.

பிரபுல்லா கல்வியறிவற்றவள், அவளுக்கு ஒன்றும் அர்த்தமாகவில்லை.

"எனக்கு நீ சொல்லுவது அர்த்தமாகவில்லை அம்மா! இருக்கட்டும். உன் பெயர் என்ன சொல்லவில்லையே!"

"பவானி டாகுர் எனக்கு நிசி என்று பெயர் வைத்திருக்கிருர். நான் பகலின் சகோதரி நிசி. பகலுடன் பேசித்தான் காலம் கழிக்கிறேன். ஆனுல் நான் ஒன்று சொல்லுகிறேன், கேள். ஈசுவரன்தான் பரம ஸ்வாமி. ஸ்திரீகளுக்குப் புருஷன் தான் தேவதை. ஸ்ரீ கிருஷ்ணன் எல்லோருக்கும் தேவதை.

## பதினான்காம் அத்தியாயம்

## *பிரிவாற்றுமை*

**து**ர்லப சக்கரவர்த்தி பிரபுல்லாவை அவளுடைய தாய் வீட்டிலிருந்து அபகரித்துச் சென்ற அதே இரவு, தற்செயலாக விரஜேசுவரன் பிரபுல்லாவைத் தேடிக்கொண்டு அங்கே வந்துசேர்ந்தான். அவனுக்கு ஒரு குதிரை உண்டு; குதிரைச் சவாரியில் அவன் கெட்டிக்காரன்கூட. ஆகையால் தன் வீட்டில் எல்லோரும் தூங்கினதும் விரஜேசுவரன் யாருக்கும் தெரியாமல் குதிரையேறி இருட்டில் துர்க்காபுரியை நோக்கிப் புறப்பட்டான்; பிரபுல்லா இருந்த வீட்டில் நுழைந்தான். அதில் யாரும் காணேம். வீடு பூராவும் இருட்டாக இருந்தது. அவனுக்கு ஒன்றும் அர்த்தமாகவில்லை.

ஒரு வேளை அங்கே தனியாக இருப்பதற்குப் பயந்து பிரபுல்லா எங்காவது அண்டை அயலார் வீட்டிற்குப்போயிருப்பாளோ என எண்ணினன். அப்போது அவனல் வேறு ஒன்றும் செய்ய முடியவில்லை. தகப்பனருக்குப் பயந்து அன்றிரவே ஊருக்குத் திரும்பிப்போய்விட்டான். சில நாட்கள் கழிந்தன. ஹரவல்லபர் வீட்டில், எல்லாம் எப்பொழுதும் போல, ஒழுங்காக நடைபெற்றுக்கொண்டுதான் இருந்தன. ஆனல் விரஜனுக்கு மட்டும் இருப்புக்கொள்ளவில்லை. எதிலும் அவனுக்கு மனது செல்லவில்லை. முதலில் அவன் தாய்தான் அதைக் கண்டுபிடித்தாள். சாப்பாட்டைக்கூட அவன் சரியாகச் சாப்பிடாததை அவள் கவனித்தாள். உடம்பு சரியா

யில்லை என்று தன் தாயார் கேட்ட கேள்விகளுக்கு விரஜன் பதில் சொன்னான். பிள்ளைக்கு ஜீரண சக்தி கொஞ்சம் குறைந்திருக்கிறது என்று தாயார் எண்ணினாள். வைத்தியனைக் கூப்பிட்டுக் காட்டுவோமா என்று யோசித்தாள்; ஆனால் விரஜன், தாயாரை அதட்டி அடக்கிவிட்டான். ஆனால் அத்தை அம்மாள் சும்மா இருக்கவில்லை. அவள் ஒரு நாள் விரஜனிடம் வந்து வாயைக்கிண்ட ஆரம்பித்தாள்.

"ஏண்டாப்பா, இப்பொழுதேன் நீ நயனதாரா முகத்தைத் திரும்பிக் கூட பார்க்கிறது கிடையாது?"

"முகம் ஒரே அமாவாசை இரவு மாதிரி இருக்கிறது. பார்க்கிறதற்கே முடியவில்லையே!"

"அவள் இல்லையென்றால் நீ எப்படி சாப்பிடுவாய்?"

"நீ சமைத்துப்போடுகிறாய்!"

"என்னை என்ன கல்லால் செய்திருக்கிறதா? நான் எவ்வளவு நாள் சமைத்துப் போடப்போகிறேன்?"

"ஆமாம், இப்பொழுது உன் கைகூட சளைத்துப்போய் விட்டது."

"ஆமாம், இரவும் பகலுமாக 'ஹா, ஹா' என்று பெருமூச்சுவிட்டுக்கொண்டு என்ன விசாரப்படுகிறாய்?"

"எப்பொழுது உன்னைக் காசிக்குக் கூட்டிக்கொண்டு போகிறது என்றுதான்."

"அதைப்பற்றி நீ எதற்குக் கவலைப்படுகிறாய்? இந்த வேப்பமரத்தடியில்கூட எனக்கு கங்கை வந்துவிடுவாள். இந்தத் துளசியைப் பார்த்தால் போதாதா? அதற்காக நீ ஏன் கவலைப்பட்டு இளைத்துப் போகிறாய்? நேற்று மாடிப்படியில் உட்கார்ந்துகொண்டு என்ன ஆழ்ந்து யோசித்துக் கொண்டிருந்தாய்?...என்னடா, கண்ணில் ஏன் ஜலம்?"

"குளித்துவிட்டு நீ சமைத்த சாப்பாட்டைச் சாப்பிட்டாக வேண்டுமே என்று நினைத்துக்கொண்டேன், அழுகை வந்துவிட்டது."

"அப்படியானல் ஸாகரா சமைத்தால் அப்பொழுது சாப்பிடுவாயா ?"

"என்ன, தினமும் ஸாகரா சமைக்கவா? போதும்; அவள் அறையில் இருக்கிற குப்பைகூளம், அப்ப! ஒரு நாள் நீ சாப்பிடு - பிறகு என்னைச் சொல்."

"பிரபுல்லாவை சமைக்கச் சொல்லுவோமா?"

வழிப்போக்கன் இருட்டில் விளக்கெடுத்துக்கொண்டு போகும்பொழுது எப்படி வெளிச்சம் திடீரென்று வீட்டுக்குள் தெரிந்து மறுநிமிஷம் மறைகிறதோ அப்படியே பிரபுல்லாவின் பேச்செடுத்ததுமே விரஜனின் மனத்தில் ஒரு பிரகாசம் தோன்றி மறைந்தது.

"அவள்தான் தள்ளிவைக்கப்பட்டவ ளாயிற்றே!"

"அவள்மேல் ஒரு பிசகும் இல்லையே! வெறும் அபாண்டம். உன் தகப்பனருக்கு யாரென்ன சொல்லுவார்களோ என்று பயம். மகன், மருமகளைக்காட்டிலும் ஊர் பெரிதில்லை. அவளை மறுபடியும் வரவழைப்போமா ?"

"ஐயோ கூடாது. என்னுல் ஊரில் அப்பாவுக்குக் கெட்ட பெயர் கூடாது."

அன்று அதன்பிறகு அதைப்பற்றி வேறு பிரஸ்தாபம் ஏற்படவில்லை. அத்தையம்மாளுக்குங்கூட விஷயம் பூராவும் தெரியவில்லை; அந்தப் பேச்சை எடுப்பதும் அவ்வளவு சுலபமல்ல.

பிரபுல்லாவின் அழகு ஈடற்றது; அது ஒரே யடியாக விரஜேசுவரன் ஹிருதயத்தில் அதிகாரம் பெற்றுவிட்டது. ஒரு நாள் கண்டதிலேயே அவனுக்கு இது புலனுகிவிட்டது. அவளுடைய அகத்தழகு ஒருபுறமிருக்க, புறத்தழகு சுந்தர

மாகவும் மதுரமாகவும் இருந்தது. அவள் நயனதாரா வைப்போலத் தன் கூடவிருந்து இல்வாழ்க்கை நடத்தினுல் அவளுடைய அழகால் ஏற்பட்ட அந்த அளவுகடந்த மோகம் நெருங்கிய அன்பாகப் பரிணமித்து, ரூபமோகம் அடங்கி குணமோகம் தலையெடுக்கும். ஆனுல் அதற்குக் கொடுத்து வைக்கவில்லை. பிரபுல்லா என்ற மின்னல் ஒருதரம் பளிச் சென்று தோன்றி காலாந்தரத்திற்கும் இருளில் மறைந்து கலந்துவிட்டது; அதனுலேயே அந்த மோகம் நூறு மடங் காகப் பலமடைந்தது. அதே அவன் மனத்தைப் பிளந்தது; அதற்குமேல் ஒரு பெரும் கருணை! அந்தத் தங்க விக்கிர கத்தை அதன் ஸ்தானத்திலிருந்து அகற்றி அதிகாரத்தை இழக்கச்செய்து, அவமானம் செய்து, பொய் அபவாதம் சுமற்றி, என்றென்றைக்கும் பகிஷ்காரம் செய்தாய்விட்டதே! அடடா! சோற்றுக்கே அவளுக்கு எவ்வளவு கஷ்டம்! ஒருவேளை, பசியாலேயே இறந்துவிட்டாளோ என்னவோ! இந்தமாதிரியாக அந்தப் பலத்த மோகத்தின்மேல் அவன் மனத்தில் இந்த ஆழ்ந்த கருணை யுணர்ச்சியும் கிளம்பி கரை யற்றுப் போயிற்று. அவன் ஹிருதயம் பிரபுல்லா மயமாகி விட்டது. அங்கே வேறெதற்கும் இடமில்லாமல் போய் விட்டது. இதெல்லாம் கிழவிக்குத் தெரியுமா?

பிரபுல்லா காணுமற்போன விஷயமாக நாவிதப்பெண் பூலமணி கிளப்பிவிட்ட கதை ஹரவல்லபர் வீட்டிற்கு எட்டிற்று. கதை வாய்க்கு வாய் மாறி உருமாறிக்கொண்டே போயிற்று. கடைசியாக அங்கு வந்துசேர்ந்த விவரப்படி கடைசி காலத்தில் பிரபுல்லா கபவாத ஜுரத்தால் இறந்த தாகவும், இறப்பதற்குமுன் அவளுடைய தாயார் வந்து கண்ணில் பட்டதாகவும் விரஜேசுவரன் கேள்விப்பட்டான்.

ஹரவல்லபர் செய்தியைக் கேட்டதும் சாவு ஸ்நானம் செய்தார்; ஆனுல் . உத்தரக்கிரியைகள் கூடாதென்று

சொல்லிவிட்டார். "பிரஷ்டை"க்கு பிராமணர்கள் சிரார்த்தம் எப்படிச் செய்கிறது?" என்றுர். நயனதாராவும் ஒரு பாபம் தொலைந்தது என்று சொல்லிக்கொண்டு ஸ்நானம் செய்தாள்.

சில நாட்களில் விரஜேசுவரன் மெலிந்து துரும்பாஞன். வியாதி ஒன்றும் இல்லை; எப்பொழுதாவது காய்ச்சல் வரும், அவ்வளவுதான். படுத்த படுக்கையாஞன். வைத்தியர் பார்த்தார் - ஔஷதங்களில் ஒன்றும் குணம் தெரியவில்லை. உடம்பு அதிகமாயிற்று. பிழைப்பாஞ என்ற சந்தேகங்கூட ஏற்பட்டு விட்டது.

உண்மை வெகுநாள் வெளியாகாமல் இருக்கமுடியுமா? முதலில் கிழவிக்குத் தெரிந்தது. பிறகு விரஜேசுவரன் தாயாருக்குத் தெரிந்தது. ஸ்திரீகளுக்கு முதலில் விஷயம் பூராவும் தெரிந்தது. ஹரவல்லபருக்கு அதற்குமேல் தெரியாமல் இருக்குமா?

ஹரவல்லபர் உட்கார்ந்து போஞர். சிறு குழந்தைபோல அழுதார். "ஐயையோ! என்ன காரியம் செய்துவிட்டேன்! என் தலைக்கு நானே இடி கொண்டுவந்து விட்டேனே!" என்று புலம்பிஞர்.

அவர் மனைவி, "குழந்தை பிழைக்காவிட்டால் நான் விஷம் தின்று பிராணனை விடப்போகிறேன்" என்றுள்.

"இந்தத் தடவை கடவுள் புண்ணியத்தால் அவன் பிழைத்தெழுந்து விடட்டும். இனிமேல் அவனைக் கேட்காமல் நான் ஒரு காரியமும் செய்வதில்லை" என்றுர் ஹரவல்லபர்.

விரஜேசுவரன் ஒரு தினுசாக அந்த வேளைக்குப் பிழைத்தெழுந்தான். கொஞ்சம் கொஞ்சமாக உடம்பில் பலம் வந்தது. ஹரவல்லபருடைய தகப்பஞர் சிரார்த்தம் வந்தது. விரஜேசுவரன் ஏதோ காரியமாக அங்கே வந்தான். சிராத்தத்தின் முடிவில் புரோகிதர் மந்திரம் சொன்ஞர்.

पिता स्वर्गः पिता धर्मः पिताहि परमं तपः।
पितरि प्रीतिमापन्ने प्रीयन्ते सर्वदेवताः॥

(பிதாதான் சுவர்க்கம்; பிதாதான் தர்மம்; பிதாதான் மேலான தவப் பயன்; பிதாவுக்குத் திருப்தி யேற்பட்டால் சகல தேவதைகளும் திருப்தி யடைந்தவர்க ளாகிறார்கள்.)

விரஜேசுவரன் அந்த மந்திரத்தைப் பாடம் பண்ணிக் கொண்டான்.

பிரபுல்லாவைப் பற்றி நினைவு வந்தபொழுதெல்லாம் அந்த மந்திரம் ஞாபகத்திற்கு வரும்படி செய்துகொள்வான். அந்த மாதிரி அவளை மறக்க முயன்றான். அவனுடைய தகப்பனார்தானே அவள் மரணத்திற்கே காரணம் என்ற எண்ணம் தோன்றும்; உடனே மந்திரத்தை நினைத்துக் கொள்வான்.

पिता स्वर्गः पिता धर्मः पिताहि परमं तपः।

பிரபுல்லா போய்விட்டாள்; ஆனால் விரஜேசுவரனுக்குத் தகப்பனாரிடம் இருந்த மரியாதையும், பக்தியும் குறைய வில்லை.

---

## பதினைந்தாம் அத்தியாயம்

## ஐந்து வருஷக் கல்வி

**பி**ரபுல்லாவிற்குப் படிப்பு ஆரம்பமாயிற்று. நிசி ராஜ கிருகத்திலும் பவானி டாகுரிடத்திலும் நன்றாக எழுதப்படிக் கத் தெரிந்து கொண்டிருந்தாள். அவளிடம் பிரபுல்லா கல்வி கற்க ஆரம்பித்தாள். பிறகு பாடக் தானே அந்த வேலையை ஏற்றுக்கொண்டு நடத்தினார். முதலில் இலக்கணம் ஆரம்பித் தார். ஆரம்பித்து நாலைந்து நாள் சொல்லிக்கொடுத்ததி லேயே ஆசிரியருக்கு ஆச்சரியம் ஏற்பட்டது. பிரபுல்லா வெகு கூர்மையான புத்தி படைத்தவள். படிக்கவேண்டு மென்ற ஆவலும் அவளுக்கு அதிகம். வெகு சீக்கிரமாக எல்லாவற்றையும் கிரகித்துக்கொண்டாள். நிசி கூட ஆச் சரியமடைந்தாள். பிரபுல்லாவிற்கு சாப்பாடு தூக்கம் எல் லாம் பெயருக்குத்தான். சதா **सु औ जस् अं औ शस्**— இதுதான் அவள் மனத்தில். சில மாதங்களுக்குள் வியாகரணம் முடிந்தது. பிறகு பிரபுல்லா பட்டி காவியம் படித்தாள்; உடனே அதைக் கரைத்துக் குடித்துவிட்டாள். பிறகு, ரகுவம்சம், குமார சம்பவம், நைஷதம், சாகுந்தலம் முதலிய கிரந்தங்களைச் சிரமமின்றிக் கற்றாள். அதன் பிறகு குரு, கொஞ்சம் சாங்கியம், கொஞ்சம் வேதாந்தம், கொஞ்சம் நியா யம் - எல்லாம் சொல்லிக்கொடுத்தார். இப்படி யெல்லா தரிசனங்களிலும் கொஞ்சம் கொஞ்சம் கற்பித்து வழிகாட்டி, யோக சாஸ்திரத்தை சவிஸ்தாரமாகக் கற்றுக்கொடுக்க

ஆரம்பித்தார்; உத்தமமான பகவத்கீதையைப் பாடம் சொல்லிவைத்தார். ஐந்து வருஷங்களுக்குள் பிரபுல்லாவின் வித்தியாப்பியாசம் முடிவடைந்தது.

இதர விஷயங்களிலும் பிரபுல்லாவிற்குத் தேவையான அளவு பயிற்சி உண்டாவதற்கு வேண்டிய ஏற்பாடுகளும் பவானி பாடக் செய்திருந்தார். கௌரம்மாள் ஒரு காரியமும் செய்வதில்லை; கடைக்கு மட்டுந்தான் போவாள். பாடக்கின் உத்தரவு அது. நிசிகூட ரொம்ப ஒத்தாசை செய்வதில்லை; பிரபுல்லாவே அநேகமாக எல்லாக் காரியங்களையும் செய்தாள். அதெல்லாம் அவளுக்குச் சிரமமாகவே தோன்றவில்லை. தாய் வீட்டில் சகல காரியங்களும் செய்து அவளுக்குப் பழக்கம்.

போஜன விஷயத்தில் வருஷத்திற்குக் கொஞ்சமாக சீர்திருத்தம் ஏற்படுத்தி ஆகாரத்தைச் சுத்தமான சத்து வாகாரமாக ஆக்கினர்.

படுக்கை, உடை, தூக்கம் - இந்த விஷயங்களிலும் இதேமாதிரி பிரபுல்லாவைத் தயார் செய்தார். வெறும் பாயும், சாதாரண உடையும், அல்ப நித்திரையுமாக இருக்குமாறு செய்தார்.

ஜலம், காற்று முதலியவைகளைப் பொறுக்கும்படி சரீரத்தைச் செய்துகொண்டாள், பிரபுல்லா. பவானி பாடக் பிரபுல்லாவை மற்றோர் விஷயத்திலும் தயார் செய்தார். அதை வெளியிடக் கொஞ்சம் யோசனையாக இருக்கிறது. ஆனல் வெளியிடாவிட்டால் கதை பூர்த்தியாகாது. இரண்டாவது வருஷம், "குழந்தாய் நீ மல்யுத்தம் கற்றுக்கொள்ள வேண்டும்" என்றார் பவானி டாகுர்.

பிரபுல்லா லஜ்ஜையுடன் தலைகுனிந்துகொண்டு, "நீங்கள் சொன்னதையெல்லாம் கற்றுக்கொண்டேன், செய்தேன்; ஆனல் இதைச் செய்யமுடியாது" என்றாள்.

"இது இல்லையென்றால் உபயோகமில்லை."

"அதெப்படி? பெண்கள் மல்ல யுத்தம் கற்றுக் கொண்டு என்ன செய்கிறது?"

"இந்திரிய ஜயம் பெறுவதற்காக. துர்ப்பலமான சரீரத்துடன் இந்திரிய நிக்கிரகம் செய்வது முடியாத காரியம். அதற்கு தேகப்பயிற்சியைத் தவிர வேறு வழியில்லை."

"எனக்கு யார் மல்யுத்தம் கற்றுக்கொடுப்பார்கள்? புருஷர்களிடமிருந்து நான் அதைக் கற்றுக்கொள்ள மாட்டேன்."

"நிசி கற்றுக்கொடுப்பாள். அவள் திருடர்கள் கூட்டத்திலிருந்தவள். அவர்கள் நல்ல பலிஷ்டர்களான யுவ யுவதிகளைத்தான் தங்கள் கூட்டத்தில் வைத்துக்கொள்வார்கள்.* அவர்கள் வழக்கத்தையொட்டி சிறுவயதிலேயே, நிசி தேகப் பயிற்சி பெற்றிருக்கிறாள். இதையெல்லாம் முன்னாலேயே யோசித்துத்தான் நிசியை உன்னிடம் அனுப்புவித்தேன்."

பிரபுல்லா நான்கு வருஷம் மல்ல யுத்தம் பயின்றாள்.

முதல் வருஷத்தில் பிரபுல்லா இருந்த ஜாகைக்கு ஆண் பிள்ளைகள் யாரையும் போக விடவில்லை பவானி பாடக். அருகில் நின்று பேசக்கூட அனுமதிப்பதில்லை. இரண்டாவது வருஷம், பேச்சின் மேலிருந்த தடையை நீக்கினார். ஆனால் அவளுடைய வீட்டிற்குள் யாரும் போகக்கூடாதென்று கட்டளையிட்டார். பிறகு சிறு பயில்வான்களை மட்டும் உள்ளே போக அனுமதித்தார். அவர்களுடன் பிரபுல்லாவை மல்யுத்தம் செய்யச் சொன்னார். ஐந்தாவது வருஷத்தில் ஒரு நிபந்தனையும் கிடையாது. பிரபுல்லாவும் தன்முன் வருகிற எல்லா வீரர்களையும் தன் புத்திரர்கள்போல பாவிக்கத் தலைப் பட்டாள்.

இந்த மாதிரியாக பல தினுசுகளாகப் பரீட்சைகளும் பயிற்சிகளும் செய்வித்துப் பிரபுல்லா தன் கணக்கிட முடியாத

---

*வாரன் ஹேஸ்டிங்க்ஸ் இந்த மாதிரியே எழுதியிருக்கிறார்.

ஐசுவரியத்திற்குத் தகுதியான எஜமானியாவதற்கான திறமையை அவளுக்கு ஏற்படுத்திக்கொடுத்தார் பவானிடாகுர். ஐந்து வருஷங்களில் எல்லாம் கற்றுக்கொண்டுவிட்டாள்.

ஆனால் தன் கதையை மட்டும் அவள் பவானி டாகுரிடம் சொல்லவில்லை; ஆவல் இருந்தது, ஆனால் பவானி பாடக் ஒன்றும் அறியமுடியவில்லை.

---

## பதினாறும் அத்தியாயம்

# நிஷ்காம கர்மம்

ஐந்து வருஷக் கல்வி முடிந்ததும் பவானி பாடக் பிரபுல்லாவை நோக்கி, "உனக்கு வித்தியாரம்பம் ஆகி ஐந்து வருஷங்கள் ஆகின்றன; இன்று முடிந்துவிட்டது. இப் போது நீ உனக்குக் கிடைத்த பொருளை உன் இஷ்டப்படி விநி யோகிக்கலாம். நான் ஆட்சேபிக்கவில்லை. நான் ஒரு யோசனை கூறுகிறேன்; இஷ்டமிருந்தால் ஏற்றுக்கொள். அது எனக்கு வேண்டாம். நீ உனக்கேற்றவாறு வழி தேடிக்கொள். நீ எந்த வழியைக் கடைபிடிக்கப்போகிறாய்?" என்றார் பவானி.

"கர்ம மார்க்கத்தைத்தான் கடைபிடிக்கப் போகிறேன். ஞான மார்க்கத்திற்கு என் மனது பக்குவமாக வில்லை" என் றாள் பிரபுல்லா.

"நல்லது, அதைக்கேட்டு நான் ரொம்ப சந்தோஷமடை கிறேன்; ஆனால் பற்றில்லாமல் கர்மா செய்யவேண்டும். பகவான் கீதையில் சொல்லுகிறார்:

**तस्मादसक्तः सततं कार्यं कर्म समाचर।**
**असक्तोह्याचरन्कर्म परमाप्नोति पूरुषः॥**

(ஆகையால் எப்பொழுதும், செய்யவேண்டிய கர்மாவைப் பற்றற்றுச் செய்; அப்படிப் பற்றற்றுக் காரியம் செய்கிறவன்தான் மேன்மை பெறுகிறான்.)

இந்த அனாஸக்தி எப்படி? அது என்ன? அதைத் தெரிந்துகொள்ள வேண்டும். அதற்கு முதலாவதான லக்ஷ

ணம் இந்திரிய நிக்கிரஹம். இந்த ஐந்து வருஷங்களும் நான் உனக்கு கற்றுக்கொடுத்த தெல்லாம் வீணாகாது என்று நம்பு கிறேன். இரண்டாவது லக்ஷணம், அகங்காரமின்மை. அகங் காரமின்மை இல்லையென்றால் தர்மத்தைக் கடைப்பிடிப்ப தென்பது கிடையாது. பகவான் சொல்லுகிறார்.

प्रकृतेः क्रियमाणानि गुणैः कर्माणि सर्वशः ।
अहंकारविमूढात्मा कर्ताहमिति मन्यते ॥

(இயற்கையின் குணங்களால் நடக்கும் காரியங்களை அகங்காரத் தால் மதியிழந்தவன், தான் செய்ததாக எண்ணுகிறான்.)

இந்திரியங்களின் பற்று மூலம் செய்யும் எல்லாக் கர்மாக் களும், "நான் செய்கிறேன்" என்ற உணர்ச்சி கொண்டிருக் கும். அதுதான் அகங்காரம். எந்தக் கருமம் செய்தாலும் அதை மனத்தில் வைத்துக்கொள்ளக்கூடாது. அப்படிச் செய்தால் புண்ணிய கர்மா வீணாகும். மூன்றாவது லக்ஷணம் இதுதான்: எல்லாக் காரியங்களின் பலனையும் ஸ்ரீ கிருஷ்ண னுக்கு அர்ப்பணம் செய்துவிடவேண்டும்.

यत्करोषि यदश्नासि यज्जुहोषि ददासि यत् ।
यत्तपस्यसि कौन्तेय तत्कुरुष्व मदर्पणम् ॥

(எதைச் செய்தாலும், எதை உட்கொண்டாலும், எதை அருந்தினாலும், எதைக் கொடுத்தாலும், எதை வேண்டினாலும்— அதை எனக்கு அர்ப்பணம் செய்வாயாக!)

என்று பகவான் சொல்லுகிறார். இந்த மாதிரி இருக்கிறதே, நீ உன் தன ராசியை என்ன செய்யப்போகிறாய்?"

"நான் எப்படி என் சகல கர்மாக்களையும் ஸ்ரீ கிருஷ் ணார்ப்பணம் ஆக்குகிறேனோ அதே மாதிரி பணத்தையும் கிருஷ்ணார்ப்பணம் செய்கிறேன்."

"பூராவும்?"

"ஸர்வஸ்வத்தையும்!"

"பணத்தைப் பூராவும் அப்படிச் செய்துவிட்டால் பற்றற்ற கர்மா செய்வது கடினமாகிவிடும். உன் ஆகாரத்திற் காக நீ சில காரியங்கள் செய்யவேண்டி வரும். அப்பொழுது தன்னலமும் பற்றும் உண்டாகிவிடும்; எனவே பணத்தி லிருந்து உன் தேகத்தைக் காப்பாற்றிக்கொள்ள வேண்டியது அவசியம். ஓரளவு வைத்துக்கொண்டு பாக்கியை அர்ப் பணம் செய். ஆனால் அதை எப்படிச் செய்வாய்?"

"நீங்கள்தான் சொல்லிக் கொடுத்திருக்கிறீர்களே! அவர் எங்குமிருப்பவர். ஆகையால் சர்வ பூதங்களிடத்தி லும் இதைப் பகிர்ந்துவிட வேண்டியதுதான்."

"சபாஷ், சபாஷ்! பகவானே சொல்லிவிட்டார்.

यो मां पश्यति सर्वत्र सर्वञ्च मयि पश्यति ।
तस्याहं न प्रणश्यामि स च मे न प्रणश्यति ॥
सर्वभूतस्थितं योमां भजत्येकत्वमास्थितः ।
सर्वथा वर्तमानोऽपि स योगी मयि वर्तते ॥
आत्मौपम्येन सर्वत्र समं पश्यति योऽर्जुन ।
सुखं वा यदि वा दुःखं सयोगी परमो मतः ॥

(என்னை எவன் எங்கும் எதிலும் காண்கிறானோ, என்னிடத் தில் சகலத்தையும் காண்கிறானோ, அவனுக்கு நான் என்றும் அழிவு பெறுவதில்லை; அவனும் எனக்கு அழிவதில்லை. எல்லாம் ஒன் றென்ற மனோ நிலையை யடைந்து நான் சர்வ பூதங்களிலும் இருப் பவன் என்று என்னை நினைக்கிறவன், சாதாரணமாக இருந்தாலும் என்னிடம் எப்பொழுதும் ஒற்று நிற்கிறான். ஆத்ம ஐக்கியத்தினால் எங்கும் துக்கத்தையும் சுகத்தையும் சமமாகக் காண்பவன் மேலான யோகியாகிறான்.)

ஆனால் அந்த மாதிரி செய்வதற்கு அநேக கஷ்டங்களும் சிரமங்களும் இருக்கின்றனவே, உனக்குத் தெரியுமா?"

"இத்தனை நாள் என்ன அறிந்தேன் பின்?"

"அந்தக் கஷ்டங்களைப் பற்றி உனக்கு நான் சொல்ல வில்லை. அவற்றை உன்னால் தாங்கமுடியுமா?" என்று பவானி பாடக் கேட்டார்.

"அவை எப்படிப்பட்டவை?" என்று பிரபுல்லா ஆவலுடன் கேட்டாள்.

"பிறகு சொல்லுகிறேன்."

"சரி, இப்படிச் செய்வோம். எனக்குக் கொஞ்சம் வைத்துக்கொண்டு பாக்கித் திரவியம் பூராவையும் உங்களிடம் ஒப்படைத்து விடுகிறேன். நீங்கள் அதை உசிதப்படி ஸத் விஷயங்களில் செலவிடுங்களேன்."

"பணத்திலிருந்து எனக்கு ஆகவேண்டியது ஒன்று மில்லை. அது என்னிடம் யதேஷ்டமாக இருக்கிறது. நான் பணத்திற்காகக் கொள்ளையடிக்கவில்லை."

"பின்?" என்று பிரபுல்லா ஆச்சரியத்துடன் கேட்டாள்.

"நான் ராஜ்யம் ஏற்படுத்த முயலுகிறேன்."

"கொள்ளையடித்து ராஜ்யமா?" பிரபுல்லாவின் குரலில் கொஞ்சம் ஏளனம் கூட இருந்தது.

"யார் கையில் ராஜ்யாதிகாரம் இருக்கிறதோ அவர்கள் தானே ராஜா?"

"அப்படியா! ராஜாவின் கையில் அல்லவா ராஜ்யாதி காரம்?"

"இந்த தேசத்தில் ராஜா இல்லை. முஸல்மான்கள் நசித்துப் போய்விட்டார்கள். ஆங்கிலேயர்கள் இப்பொழுது அட்டகாசம் செய்கிறார்கள். ஆனால் அவர்களால் ராஜ்யம் ஏற்படுத்த முடியாது, தெரியவும் தெரியாது. நான் துஷ்டர்களை அடக்கி நல்லோர்களை ரட்சித்து வருகிறேன்."

"கொள்ளையடித்தா?" என்று பிரபுல்லா குறுக்கிட்டுக் கேட்டாள்.

"சொல்லுகிறேன், கேள்."

பவானி பாடக் விஸ்தாரமாகத் தன் கதையைச் சொல்ல ஆரம்பித்தார்; பிரபுல்லா ஆவலுடனும் கவனத்துடனும் கேட்க ஆரம்பித்தாள்.

உணர்ச்சி ததும்பும் உன்னத நடையில் அவர் நாட்டின் சீர் கெட்ட நிலைமையை வர்ணித்தார்; அதிகாரிகள் செய்யும் சகிக்கமுடியாத அக்கிரமங்கள், கச்சேரி சிப்பந்திகள் பாக்கி தாரர்கள் வீட்டு சாமான்களைக் கொள்ளையடித்தல் முதலிய பல தொந்தரவுகளை விவரித்துக் கூறினார். "அதிகாரிகள், கிழவர்கள் கண்களில் எறும்பை விட்டுக் கடிக்க வைக்கிறார்கள்; தொப்புள்களில், கடிக்கும் புழுக்களை வைத்துக் கட்டுகிறார்கள். சிறு பெண்களைக் கச்சேரிகளுக்கு இழுத்துக் கொண்டுபோய் எல்லோர் முன்பாகவும் அவமானப் படுத்துகிறார்கள்" என்று நாட்டில் நடந்த கொடுமைகளை நடந்தபடியே விவரித்தார்.

"இந்த துராத்மாக்களை நான் சிட்சிக்கிறேன்; அநாதைகளை ரட்சிக்கிறேன். எப்படி என்பதை இன்னும் இரண்டு நாள் என்னுடன் இருந்தால் அறிவாய்" என்று மேலும் உணர்ச்சியுடன் கூறினார் பாடக்.

பிரஜைகளின் கஷ்டங்களைக் கேட்டு பிரபுல்லாவின் ஹிருதயம் உருகிற்று. அவள் பவானியை வாயாறப் புகழ்ந்தாள்.

"நான்கூட வருகிறேன். என் தனத்தைப் பூராவும் ஏழைகளுக்குக் கொடுத்து உதவி செய்வோம்" என்றாள் பிரபுல்லா உத்சாகமாக.

"நீங்கள் சொன்னபடி கர்மாவை நான் ஸ்ரீ கிருஷ்ணனுக்கு அர்ப்பணம் செய்துவிட்டேன். அது அவருடையது, என்னுடைய தன்று. அதைச் செய்வதிலிருந்து ஏற்படும் சுகதுக்கங்களும் அவருடையது; அதற்காக எது செய்ய வேண்டுமோ அதைச் செய்யத் தயாராக இருக்கிறேன். உங்கள் உத்தரவுக்குக் கீழ்ப்படிகிறேன்" என்று பிரபுல்லா

மேலும் சொன்னதைக் கேட்டு பவானி பாடக் பரவசம் கொண்டார்.

பவானி பாடக்கின் மனோபீஷ்டம் கடைசியாக அவள் மூலமாக நிறைவேறிற்று. அவர் கொள்ளைக்காரர்களுடன் வெளியே புறப்பட்டபொழுது பிரபுல்லாவும் தன் பணத்துடன்கூடப் புறப்பட்டாள். நிசியும் கூடப் போனாள்.

---

## முதல் அத்தியாயம்

## ஹரவல்லபர் ஏழ்மை

ஐந்து ஐந்தாகப் பத்து வருஷங்கள் கழிந்தன. பிரபுல்லாவை ஹரவல்லபர் பிரஷ்டையென்று வெளியே துரத்தினதிலிருந்து பத்து வருஷங்களாகிவிட்டன. இந்தப் பத்து வருஷங்களில் ஹரவல்லப ராயின் பொருளாதார நிலைமை அவ்வளவு சுவாரஸ்யமாக இல்லை. நாட்டின் சீர்கெட்ட நிலைமையைப்பற்றி முன்பே கூறினோம். தேவி சிங்கின் அக்கிரமங்களைப் பற்றியும் கொள்ளைக்காரர்களின் அட்டூழியங்களைப் பற்றியும் சொன்னோம். ஒரு சமயம் அவர் கிராமத்திலிருந்து ஹரவல்லபருக்கு வந்துகொண்டிருந்த பணத்தை நடுவழியில் கொள்ளைக்காரர்கள் அடித்துக்கொண்டு போய்விட்டார்கள். அதிலிருந்து அவர் தேவிசிங்கிற்குச் சேரவேண்டிய வரியைக் கொடுக்க முடியாமல் போய்விட்டது. தேவிசிங் ஒரு கிராமத்தை ஏலத்திற்குக் கொண்டுவந்து விட்டான். அந்த மாதிரி ஏலத்திற்குக் கொண்டுவருவதில் அவன் கொஞ்சமாவது தாமதம் செய்வது வழக்கம் கிடையாது. வாரன் ஹேஸ்டிங்க்ஸ், கங்கா கோவிந்தசிங், இவர்களுடைய தயவால், தேவி சிங்கிற்கு செல்வாக்குக் குறைவில்லை; சர்க்கார் சிப்பந்திகளும் குமாஸ்தாக்களும் அவன் சொன்னபடி ஆடுவார்கள். ஏலம் போடுவது எடுப்பது விஷயமாக அவன் இஷ்டந்தான். ஹரவல்லபருடைய பதினாயிரம் ரூபாய் பெறுமானமுள்ள கிராமத்தை 250 ரூபாய் கிஸ்திக்காக ஏலம் போட்டு எடுத்துக் கொண்டு விட்டான். அப்பொழுதும்

கொடுக்கவேண்டிய பாக்கி குறையவில்லை. கொடுக்கவேண்டிய தொகை ஏறிக்கொண்டே போயிற்று. தேவிசிங் உபத்திரவம் தாங்காமல் சிறைவாசத்திற் கஞ்சி ஹரவல்லபர் மற்றொரு சொத்தைப் பந்தகம் வைத்து கடனைத் தீர்த்தார். எனவே, இதெல்லாவற்றாலும் வருமானம் ரொம்ப கம்மிப்பட்டுவிட்டது; செலவு மட்டும் குறையவே இல்லை. விதைப்பு, பயிர்த் தொழில் செலவுக்குவேண்டிய சௌகரியம் குறைந்துவிட்டது.

உலகத்தில் எல்லோருக்கும் இந்த மாதிரி காலம் ஒன்று வருகிறது. லக்ஷ்மி வந்து, "உன் பழைய பழக்க வழக்கங்களைக் கைவிடுகிறாயா? அல்லது என்னைக் கைவிடுகிறாயா?" என்று கேட்கிறாள். பலர், "அம்மா, உன்னை வேண்டுமானால் கைவிட்டு விடுகிறேன். பழக்க வழக்கங்களைக் கைவிட என்னால் முடியாது" என்று விடுகிறார்கள். ஹரவல்லபரும் அவர்களில் ஒருவர். தேவோத்ஸவம், துர்க்கா பூஜை, அது இது, தானம், விரதங்கள், குஸ்திகள் எல்லாம் முன்போலவேதான் நடந்தன. ஆனால் பணம் கொள்ளை போனதிலிருந்து பயில்வான்கள் செலவு மட்டும் கொஞ்சம் குறைந்தது. பூராவாக நின்றுவிட வில்லை. ஒவ்வொரு கிஸ்தியிலும் சர்க்கார் வரி பாக்கி விழுந்துகொண்டே இருந்தது. பாக்கியிருந்த நிலங்களையும் விற்று அதைக் கட்டினார்; ஒன்றும் மிச்சமில்லை. கொடுக்க வேண்டியதில் கொடுத்தது போக பாக்கிக்கு என்ன செய்வது?

இப்படியாக தேவி சிங்கிற்குப் பாக்கி கொடுக்கவேண்டியது இன்னும் ஐம்பதினாயிரம் ரூபாய் என்று ஏற்பட்டது. ஹரவல்லபர் அதில் கொஞ்சங்கூடக் கொடுக்க முடியாதவராகி விட்டார். கடைசியாக ஹரவல்லபரைக் கைதியாக்க உத்தரவு பிறந்துவிட்டது. அதிலிருந்து தப்ப இப்பொழுது இருப்பது போல அப்பொழுது ஏதாவது சட்ட முண்டா? கிடையாது. ஆங்கில சட்டங்கூடக் கிடையாது; சட்டமற்ற காலம்.

## இரண்டாம் அத்தியாயம்

## மாமனார் வீடு

பலத்த மாறுதல் ஏற்பட்டது. விரஜேசுவரன் மாமனார் வீட்டிற்குப் போனான். எந்த மாமனார் வீடு என்று சொல்ல வேண்டியது அனுவசியம். ஸாகராவின் பிறந்த வீடுதான். அந்தக் காலத்தில் மாப்பிள்ளை மாமனார் வீடு போவது என்பது சாதாரண காரியமல்ல. விரஜேசுவரன் பரிவாரங்களுடன் அந்தமாதிரி போகவில்லை.

மாப்பிள்ளையை வரவேற்கப் பிரமாதமான ஏற்பாடுகள் எல்லாம் நடந்தன. வீட்டில் ஒரே அமர்க்களம். ஆனால் அவ்வளவு மரியாதைகள் யாருக்காகத் தயாராயினவோ அவன் மனத்தில்மட்டும் சந்தோஷமில்லை. விரஜேசுவரன் மாமனார் வீட்டு ஆசார உபசாரங்களையும் சுகங்களையும் சந்தோஷங்களையும் அனுபவிக்க அங்கே வரவில்லை. அவன் தகப்பனாரை 'வாரண்டில்' பிடிப்பதற்காக உத்திரவு பிறந்துவிட்டது. தப்புவதற்கு வழியே காணோம். ஒருவரும் பணம் கடன் கொடுப்பாரில்லை. விரஜேசுவரன் மாமனாரிடம் பணம் இருந்தது. மாமனாரிடம் கடன் கேட்பதற்காகத்தான் விரஜேசுவரன் மாமனார் வீட்டிற்கு வந்திருந்தான்.

"அப்பா, என்னிடம் இருக்கும் பணம் பூராவும் உன்னுடையதுதான். எனக்கு வேறு யார் இருக்கிறார்கள்? சொல். ஆனால் பணம் என் கையில் இருக்கிறவரையில்தான்

இருக்கும். உன் தகப்பனாரிடம் கொடுத்தால் என்ன பாக்கி இருக்கும்? ஊர் விழுங்கிவிட்டுப் போய்விடும்; ஆகையால் உன் சொத்தை நீயே இழக்கவா இச்சைப்படுகிறாய்?'' என்றார் மாமனார்.

"இருக்கலாம். எனக்குப் பண ஆசை கிடையாது. என் தகப்பனார் தப்பவேண்டியதுதான் என் முதல் கவலை."

மாமனார் கொஞ்சம் கடுமையான குரலில், "ஆமாம் அப்பா, உன் தகப்பனார் தப்பினால் என் குழந்தைக்கு என்ன பிரயோஜனம்? என் குழந்தைக்குப் பணம் இருந்தால் கஷ்டமில்லை; மாமனார் தப்புவதால் அவளுக்கேதாவது துக்கம் குறையுமோ?'' என்றார்.

விரஜேசுவரனுக்குக் கோபம் வந்துவிட்டது.

"சரி, உம் பெண்ணையும் பணத்தையும் நீரே வைத்துக் கொள்ளும், தெரிகிறதா? உம், மாப்பிள்ளை உமக்கு இனிமேல் இல்லை. நான் உயிருடன் இருக்கும்வரை இனி மேல் இங்கே வருவதில்லை'' என்று சொன்னான் விரஜன்.

ஸாகராவின் தகப்பனாருக்கும் கோபம் அசாத்தியமாக வந்துவிட்டது. அவர் ஏதோ சொன்னார்; விரஜேசுவரன் ஏதோ காரமாக பதில் சொன்னான். முடிவில் விரஜேசுவரன் மூட்டை கட்டிக்கொண்டு கிளம்ப ஆரம்பித்தான். ஸாகரா விற்குத் தூக்கிவாரிப் போட்டுவிட்டது.

ஸாகராவின் தாயார் மாப்பிள்ளையைக் கூப்பிட்டு என்னென்னவோ சமாதானங்கள் எல்லாம் சொன்னாள். ஆனால் மாப்பிள்ளை கோபம் தணியவில்லை. பிறகு ஸாகராவின் முறை வந்தது.

பகல்வேளையில், மனைவி புருஷனைச் சந்தித்துப் பேசக் கூடாது என்று புக்ககத்திலிருக்கும் நிர்ப்பந்தம்போல பிறந்தகத்தில் இல்லையல்லவா? ஸாகரா அகமுடையானிடம் போனாள்; அவன் காலில் விழுந்தாள்.

"இன்னும் ஒருநாள் இருங்களேன்! நான் என்ன பிசகு செய்தேன்?" என்று கெஞ்சினாள்.

விரஜேசுவரன் அப்பொழுது பெருத்த கோபத்தில் இருந்தான். கோபத்தில் காலை உதறி இழுத்துக்கொண்டான். கோப சமயங்களில் உடல்சேஷ்டைகள் வெகு வேகமாக இருக்கும்; கை கால்களும் எப்பொழுதும் போல இரா; ஒன்று செய்யவேண்டுமென்றால், மற்றொன்று செய்து முடியும். எனவே, ஸாகரா அவன் காலடியில் இருந்தபொழுது அவன் கால்களை உதறி இழுத்துக்கொண்டது பிரமாதமாய்ப் போய்விட்டது. ஒரு கால் அவள் உடலில் நன்றாகத் தாக்கி விட்டது. கோபத்தில் புருஷன் தன்னை உதைத்துவிட்டான் என்று ஸாகரா எண்ணினாள். அவ்வளவுதான், ஸாகரா அவன் கால்களை விட்டுவிட்டுக் கோபமடைந்த பெண் நாகம்போல எழுந்து நின்றாள்.

"என்ன என்னை உதைக்கிறீர்களா?" என்று ஸாகரா சீறினாள்.

உண்மையில் விரஜேசுவரனுக்கு உதைக்க வேண்டும் என்ற எண்ணமே கிடையாது. அப்படி அவன் சொல்லியிருந்தானானால் எல்லாம் சரியாகப் போயிருக்கும். ஆனால் அந்தக் கோப சமயத்தில் ஸாகரா முகத்தையும் கண்களையும் விகாரப் படுத்திக்கொண்டு எதிர்த்து நின்றது அவனுக்கு இன்னும் கோபத்தை உண்டாக்கியது.

"ஆமாம்! நீ என்ன பெரிய மனுஷ வீட்டுப் பெண்ணாயிருந்தால் என்ன? என் காலுக்குச் சமானம். பெரிய மனுஷனான உன் அப்பனுக்கும் ஒரு நாள் பாத பூஜை செய்கிறேன்" என்று விரஜன் கோபாவேசத்தால் கொட்டினான்.

ஸாகரா கோபத்தில் மெய்ம்மறந்தாள்.

"அசட்டுத்தனமாகப் பேசவேண்டாம்; நான் அதற்குத் தகுந்த பிராயச்சித்தம் செய்துவிடுவேன்."

"திருப்பி நான் உதைத்தால்?"

"நான் சளைக்கமாட்டேன். நான் பிராமணன் வயிற்றுப் பெண்ணாயிருந்தால் உங்கள் காலை—"

ஸாகரா மேலே சொல்லி முடிப்பதற்குள் பின்புறமாக ஜன்னலிலிருந்து, "என் மடியில் வைத்துக்கொண்டு வேலைக் காரிபோல வருடுவேன்" என்று யாரோ சொன்னார்கள்.

ஸாகராவிற்குமுன் யார் அந்தமாதிரியாகச் சொல்லி யிருக்கக்கூடும்?

ஸாகரா யோசிக்காமலும் பின்னால்கூடத் திரும்பிப் பாராமலும் கோபத்தின் மறதியில் அந்த வார்த்தைகளை தானும் திருப்பிச் சொன்னாள்.

விரஜேசுவரனும் கோபத்தில் ஒரு பக்கமும் பாராமல் "எனக்கும் அந்த வழிதான். நீ வழிக்கு வருகிற வரை யிலும் நான் உன் முகாலோகனம் செய்யப்போவதில்லை. நான் இந்த உறுதியிலிருந்து தவறினேனானால் நான் பிராமணன் இல்லை" என்றான்.

உடனே விரஜேசுவரன் கோபத்தில் வெளியே போய் விட்டான். ஸாகரா காலைக் கட்டிக்கொண்டு அழ ஆரம்பித்தாள். அப்பொழுது அவள் உட்கார்ந்திருந்த அறைக்கு ஒரு வேலைக் காரி வந்தாள். விரஜேசுவரன் போன பிறகு ஸாகரா என்ன மாதிரி இருக்கிறாள் என்பதைப் பார்ப்பதற்காகவே அவள் அங்கே வந்தாள். ஏதோ வேலை செய்ய ஆரம்பித்தாள். அப்பொழுதுதான் ஜன்னலிலிருந்து யாரோ பேசினது ஸாகராவுக்கு ஞாபகம் வந்தது. அவள் வேலைக்காரியைப் பார்த்து, "ஜன்னலிலிருந்து யார் பேசினது?" என்று கேட்டாள்.

"யார், ஒருவருமில்லையே!"

"பின் ஜன்னல் வழியாக யாரோ கண்ணில் பட்டார் களே?"

அப்பொழுது சாக்ஷாத் பகவதியைப் போல ரூபமும் தேஜஸும் கொண்ட ஒரு பெண் உள்ளே நுழைந்தாள்.

"ஜன்னலில் நான்தான் இருந்தேன்" என்றாள் அவள்.

"நீங்கள் யாரம்மா?" என்று ஸாகரா கேட்டாள்.

"உனக்கு என்னை அடையாளம் தெரியவில்லையா என்ன?"

"இல்லையே! நீங்கள் யார்?"

"நான் தேவி சௌதுராணி!"

வேலைக்காரி தன் கையிலிருந்த வெற்றிலைப் பெட்டியை தபாலென்று கீழே போட்டுவிட்டாள். விக்கி விக்கி அழ ஆரம்பித்தாள். அவள் இடுப்புத் துணிகூட நழுவ ஆரம்பித்தது.

தேவி சௌதுராணி அவள் பக்கம் திரும்பி, "சீ கழுதை, வாயை மூடு!" என்று அதட்டினாள்.

வேலைக்காரி சிலைபோல நின்றுபோனாள். ஸாகராவுக்குக் கூட உடம்பு நடுங்கிற்று. பேச நா எழவில்லை அவளுக்கு. அவர்கள் காதில் பட்ட பெயர், சிறுகுழந்தைகள் முதல், கிழவர்கள் வரை அறிந்தது! அதைக் கேட்டாலே நடுக்கம் உண்டாகும்.

ஆனால் ஸாகரா சிறிது நேரத்திற் கெல்லாம் அவளைப் பார்த்து புன்சிரிப்புச் சிரித்தாள். தேவி சௌதுராணியும் சிரித்தாள்.

## மூன்றும் அத்தியாயம்

## சர்வாங்க சுந்தரி

மழை காலம். இரவு நிலவு படர்ந்திருந்தது. ஆனல் அது அவ்வளவு ஒளி நிரம்பியதாக இல்லே. ஓர் இருள் அதைச் சூழ்ந்ததுபோல் இருந்தது. பூமியின் கனவுதோய்ந்த ஆடை போல கங்கை வர்ஷா காலத்தின் ஜலப் பெருக்கில் கரை புரண்டு பிரவகித்துக் கொண்டிருந்தது. சந்திர கிரணங்கள் வேகமாய்ப் போய்க்கொண்டிருந்த அந்தப் பிரவாகத்தில் ஒவ்வொரு சமயம் சின்ன அலேகளில் விழுந்து ஜ்வலித்தன. ஒவ்வோரிடத்தில் ஜலம் அடித்துக் கிளம்பினபோது அது ஜ்வாலேபோலத் தெரிந்தது. ஓரிடத்தில் மணலில் அலே மோதி உடைந்து விழுந்ததும் அங்கே ஒரு பிரகாசம் தோன்றும். கரையிலிருந்த மரங்களின் வேர்களில் ஜலம் பாய்ந்து பாய்ந்து பின்னிக்கொண்டுபோயிற்று. அந்த மரங்களின் நிழல் விழுந்த இடத்தில் ஜலமே இருட்டாக இருந்தது. இருட்டில் மரங்களின் புஷ்பங்கள், பழங்கள் இலேகளே வெள்ளம் ஏந்திக் கொண்டு வேகமாகச் சென்றது. கரையில் போய் அடித்த ஜலம் ஒருவிதமான சலசல சத்தம் செய்தது. ஆனல் அது இருட்டிலேதான் கேட்டது. இருட்டில் அந்த அகண்ட ஆறு சமுத்திரத்தை நோக்கி ஒரு பெண் பட்சிபோலப் பறந்து சென்றுகொண் டிருந்தது. இரு கரையிலும் கணக்கற்ற மிருதுவான சத்தங்கள்; சுழல்களின் கர்ஜனேகள் அடிபட்டுத் திரும்பின. ஜலத்தின் கர்ஜனேகள் எல்லாம் கலந்து ஒரு பெரும் கோஷமாக ஆகாயத்தை வியாபித்தது.

நதியின் மேற்குக் கரையின் அருகில் ஒரு உல்லாஸப் படகு கட்டப்பட் டிருந்தது. அதற்கருகே ஒரு பெரிய புளிய மரத்தின் நிழலில் ஜலத்தில் ஒரு பெரிய ஓடம் இருந்தது. அதன் கதையைப் பின்னுல் கவனிப்போம் — முதலில் உல்லாஸப் படகைப்பற்றி பார்ப்போம். அது அநேக வர்ணங்கள் கொண்டு அலங்கரிக்கப் பட்டிருந்தது. பித்தளைப் பிடிகள் முதலியவைகளுக்கு வெள்ளி 'கில்ட்' செய்யப்பட்டிருந்தது. ஒரு புறம் பெரிய மீன் முகம் அமைக்கப்பட்டிருந்தது. அதுவும் வெள்ளிப் பூச்சு செய்யப் பட்டிருந்தது. எல்லாம் பரிஷ்காரமாக இருந்தது.

படகோட்டிகள் ஓரிடத்தில் தூங்கிக்கொண் டிருந்தார்கள். யாரும் விழித்துக்கொண்டிருந்த சின்னமே இல்லை. பார்ப்பதற்கு மிகவும் அபூர்வமாக இருந்த அமைதி. அதனுடைய மேல்தட்டில் ஒரு சின்னவிரிப்பு — வெகு மிருதுவாகவும் பலவிதமான வர்ண சித்திரங்கள் அடங்கியதாகவும் இருந்தது.

அந்த விரிப்பின்மேல் ஒரு பெண் உட்கார்ந்து கொண்டிருந்தாள். அவளுடைய வயதை நிச்சயமாக அனுமானிப்பது கொஞ்சம் சிரமம். அவளுடைய நல்ல உடல் கட்டைப் பார்த்தால் வயது இருபத்தைந்துக்குக் குறைந்து இருக்குமென்று சொல்லமுடியாது. இருபத்தைந்து வயதிற்கு மேற்பட்டவர்கள் சாதாரணமாக அப்பேர்ப்பட்ட ரூபலாவண்யத்துடன் இருப்பது காணும். வயதும் ஆகியிருக்கவேண்டும்; அப்படியும் அந்த ஸ்திரீ பரம சுந்தரியாயிருந்தாள் என்பதுதான் விஷயம். அவள் ஒடிந்து விழுவது போல இல்லை. ஆனுல் அவளை ஸ்தூல சரீரம் கொண்டவள் என்று சொல்லுவதும் நிந்தையாகும். அவள் அங்கங்கள் எல்லாம் நிறைந்திருந்தன. கங்கை கரைக்குக்கரை நிறைந்து நின்றதுபோல அவளது உடலும் பூரித்திருந்தது. அதற்

கேற்றவாறு பாங்காக உயர்ந்தும் இருந்தது அவள் சரீரம். ஸ்தூலமே இல்லை என்று சொல்லும்படி அவ்வளவு உயரமாக இருந்தாள் அவள். யௌவனம் மழையாகப் பொழிந்து அந்த மனோகரமான பாத்திரத்தில் நிறைந்திருந்தது; வழிந்தோடவில்லை. ஆனால் கரைபுரண்டது போல கொந்தளித்துக் கொண்டிருந்தது. நதியில் ஜலந்தான் ஸ்திரமற்றிருக்கிறது, நதி அலையற்று அசைவற்றது போல இருந்தது. அவளுடைய லாவண்யம் சஞ்சல ஸ்பாவம் கொண்டிருந்தது; அவள் மட்டும் சஞ்சலமற்றவளாக இருந்தாள். அவள் சாந்தமாகவும் கம்பீரமாகவும், மதுரமாகவும் ஆனந்தம் நிரம்பியவளாகவும் இருந்தாள். நிலவு படர்ந்த அந்த நதியைப் போலவே இருந்தாள். அதைப்போல அவளும் அதிகமாக அலங்காரம் கொண்டிருந்தாள். இப்பொழுது முக்காடு போட்டுக்கொள்வது மரியாதை இல்லை; ஆனால் நூறு வருஷங்களுக்கு முன்னால் முக்காடிட்டுக் கொள்வது நல்லதாகவும் இருந்தது, மரியாதையாகவும இருந்தது. இந்த ஸ்திரீ அணிந்திருந்த அந்தத் துணி லேசாகவும் ஜரிகை போட்டதாகவும் இருந்தது. அதற்குள் வைரம் முத்துகள் ஜொலிக்கும் ரவிக்கை யொன்று பளிச்சென்று பிரகாசித்துக்கொண் டிருந்தது. வைரம், மரகதம், தங்கங்களால் நகசிகை பரியந்தம் அலங்கரிக்கப்பட்டிருந்ததால் அவள் தேகம் நில வொளியில் மின்னிக்கொண்டிருந்தது— நதியின் ஜலம் எப்படி மின்னிக்கொண் டிருந்ததோ அப்படி. நிலவேறிய நதிஜலம்போல இருந்தது அவளுடைய வெண்மையான ஆடை. ஜலத்தின் நடுவில் நிலவு பளிச் பளிச் சென்று விளங்கிற்று; அவளுடைய ஆடையிலும் வைரங்களும் முத்துக்களும் ஜ்வாலை விட்டுப் பிரகாசித்தன. நதிக்கரையில் காட்டு நிழல் கிடந்தது போல அவிழ்த்து விடப்பட்ட கேசபாசம் அவள் தேகத்தின்மேல் கிடந்தது. சுருங்கியும் நீண்டும், கலைந்தும் ஒழுங்காகவும் கேசம் அவள் பின்புறத்திலும்,

தோள்களிலும் கைமேலும் மார்பிலுமாக விழுந்து கொத்துக் கொத்தாகத் தொங்கிற்று. அந்த மிருதுவான மெல்லிய பளபளப்பின்மேல் நிலவு விழுந்து விளையாடிக் கொண்டிருந்தது. அதன் மனோகரமான வாசனை ஆகாயத்தை அளாவிச் சென்று கொண்டிருந்தது. ஒரு ஜாதிப் பூ ஸரத்தைக்கொண்டு ஓரிடத்தில் தலைமயிரைக் கட்டியிருந்தாள்.

நவரத்தின பூஷிதையாக ஸரஸ்வதியே உருவெடுத்து வந்ததுபோல வீணை வாசித்துக்கொண் டிருந்தாள் அந்த சர்வாங்க சுந்தரி. சந்திரன் பிம்பத்தில் நிலவு கலப்பதுபோல அவளிடத்தில் அந்த மிருதுவான மதுர வீணை தொனியும் கலந்தது. ஜலத்தில் சந்திர கிரணம் விளையாடுவது போலவும், அந்தக் கட்டழகியின் அலங்காரத்தில் சந்திரிகை புகுந்து விளையாடினது போலவும், காட்டு மலர்களின் மணம் ஏறியதும், வெண்ணிலவு நீராடியதுமான காற்றில் அந்த சப்தம் விளையாடிற்று. பலவிதமான ஸ்வர ஸ்தானங்களிலிருந்துகிளம்பிய கமகங்களையும் குழைவுகளையும் எப்படி எடுத்துரைப்பது? வீணை சில சமயங்களில் சோகத் துவனியுடன் உருகிற்று; சில சமயங்களில் ராகத்தின் உச்சஸ்தாயியில் கிளம்பி எழுந்தது. நர்த்தனம் செய்வது போலவும், ஆதரவுடன் கொஞ்சுவது போலவும், கர்ஜிப்பது போலவும், புன்சிரிப்புப் பூப்பது போலவும் மாறி மாறி கானம் செய்தது. செஞ்சுருட்டி, காம்போஜி, ஸிந்து ராகங்களில் முழக்கம் செய்தது; கேதாரம், நாடை, பியாக் ராகங்களில் கம்பீரமாக ஒலித்தது; கானடா, சஹானு, வாகீசுவரி ராகங்களில் உணர்ச்சிப்பெருக்காகக் கிளம்பிற்று; நாதம், பூமாலை போல நதியின் அலை வெள்ளத்தில் மிதந்து சென்றது. பிறகு ஓரிரண்டு தடவை பர்தாத் துணியை எடுத்துவிட்டு திடீரென்று அவள் புத்துணர்ச்சி மேலிட்டு வீணையின் தாரஸ்தாயியில் உயிர் ஒலியைக் கிளப்பித் தந்திகளை உத்வேகத்துடன் விம்மச் செய்தாள்.

அப்பொழுது ஒருபுறம் தூங்குவதுபோலப் படுத்துக் கொண்டிருந்த ஓர் ஆசாமி எழுந்திருந்து மௌனமாக அவள் பக்கத்தில் வந்து நின்றான்.

அவன் ஆஜானுபாகுவான ஆள்; நல்ல பலசாலி; பூணூல் அணிந்திருந்தான்.

"என்ன விசேஷம்?" என்று அவன் கேட்டான்.

"தெரியவில்லையா?" என்று அந்தப் பெண் கேட்டாள்.

படகில் ஒரு தூரதிருஷ்டிக் கண்ணாடி கிடந்தது. அப்பொழுதுதான் அது இந்தியாவிற்குப் புதிதாக வந்த சமயம். அந்தக் கண்ணாடியை எடுத்து அதை அவன் கையில் கொடுத்தாள் அந்தப் பெண்மணி — வேறொன்றும் சொல்லவில்லை. அவன் கண்ணாடியைக் கண்ணுக்கருகில் வைத்துக்கொண்டு நதி பூராவும் எல்லாத் திக்குகளிலும் பார்த்தான். கடைசியில் ஓரிடத்தில் ஒரு படகு கண்ணில் பட்டது. "அந்தத் திரும்பு வாயில் என்ன அது?" என்று கேட்டான்.

"இந்தப் பக்கம் இதுவரை வேறு எந்தப் படகும் வருவது வழக்கமில்லை யல்லவா?" என்று பெண் கேட்டாள்.

அந்த ஆள் மறுபடியும் கண்ணாடியின் மூலம் அந்தத் திக்கை உற்று நோக்கினான்.

யுவதி வீணையை வாசித்தவண்ணம், "ரங்கராஜ்!" என்றாள்.

"உத்தரவு" என்று ரங்கராஜன் பதில் சொன்னான்.

"என்ன பார்க்கிறாய்? ஏதாவது தெரிகிறதா?"

"யாரோ இருக்கிறார்கள். அதைத்தான் பார்க்கிறேன்."

"எவ்வளவு பேர்?"

"நன்றாகத் தெரியவில்லை. ஆனால் அதிகம் பேர் இல்லை. படகை அவிழ்த்து ஓட்டட்டுமா?"

"ஓட்டு, மெள்ள, ரகசியமாக, இருட்டாக இருக்கும் இடத்தின் பக்கமாகவே போகவேண்டும்."

## நான்காம் அத்தியாயம்

## விரஜன் கைதி

படகின் அருகில் புளிய மரத்து நிழலில் ஒரு பெரிய ஓடம் இருந்தது என்று முன்பு சொன்னேனல்லவா? அந்த இடமே நிச்சப்தமாக இருந்தது; இருந்த ஆட்கள் எல்லோரும் தலைமாடு கால்மாடாகப் படுத்துக்கொண்டு தூங்கினார்கள். அவர்கள் சுமார் ஐம்பது பேர். ரங்கராஜன் கொடுத்த சங்கேதத்தைக் கேட்டதும் அவர்கள் வாரிச்சுருட்டிக்கொண்டு எழுந்திருந்தார்கள். ஆளுக்கொரு துடுப்பைச் சட்டென்று எடுத்துக் கொண்டு ஓடத்தை ஓட்டத் தயாரானார்கள். சத்தம் செய்யாமல் ரங்கராஜன் அதற்கு வந்தான். அப்பொழுது அந்த யுவதி அவனைச் சந்தடியின்றி கூப்பிட்டு, "முதலில் நான் சொன்னது ஞாபகமிருக்கிறதா?" என்று கேட்டாள்.

"ஞாபகம் இருக்கிறது" என்று பதில் சொல்லிவிட்டு ரங்கராஜன் ஓடத்தை விட்டான். அது நிச்சப்தமாக, கரையோரமாக, ஆற்றை எதிர்த்துச் சென்றது.

தூரதிருஷ்டிக் கண்ணாடியில் கண்ட படகு வேகமாக நதியில் வெள்ளத்தோடு மிதந்து வந்துகொண்டிருந்தது; அதில் அதிகம் பேர் இல்லை.

அதில் எட்டு பேர் ஹிந்துஸ்தானியர்கள் இருந்தார்கள். அந்த மாதிரி ஆட்கள் கூடஇல்லாமல் அந்த இடத்தில் தனியாக யாரும் போக முடியாது. அவர்களில் இருவர் ஆயுதபாணிகளாக இருந்தார்கள். தலையில் சிகப்புத் தலைப்பாகை

அணிந்திருந்தார்கள். மற்ற ஆறுபேரும் திவ்வியமான தென்றல் காற்றில் கருப்புத் தாடி ஊசலிட, நிலவில் சுகமாக நித்திரையை அனுபவித்துக்கொண் டிருந்தார்கள்.

பாரா கொடுத்துக்கொண்டிருந்தவர்களில் ஒருவன், எதிரே வரும் படகைப் பார்த்துவிட்டான்.

"பாய்மரம் இறக்கு!" என்று வழக்கப்படி கூச்சல் போட்டான்.

"அவசியமில்லை" என்றான் ரங்கராஜன்.

பார்த்தான் பாராக்காரன், அவர்களைப் பயமுறுத்த எண்ணி குண்டில்லாத் துப்பாக்கியை ஆகாயத்தில் சுட்டான்.

"ஏனப்பா காலித் துப்பாக்கியைச் சுடுகிறாய்? குண்டு இல்லையா உன்னிடம்? நான் தருகிறேன் இரு!" என்று சொல்லிக்கொண்டு ரங்கராஜன் அவன் தலையை நோக்கிக் குறிவைத்தான். துப்பாக்கியைத் தாழ்த்திக்கொண்டு, "பயப் படாதே. நான் உன்னை இந்த மாதிரி சுட்டுவிடமாட்டேன் உன் சிகப்புத் தலைப்பாகையை மட்டும் எடுத்துவிடுகிறேன்" என்று சொல்லிக்கொண்டு வில்லில் ஒரு அம்பைத் தொடுத்து விட்டான். பாராக்காரன் தலைப்பாகை மறைந்துபோயிற்று. அவன், "ராம, ராம" என்று ராம நாம ஜெபம் செய்ய ஆரம்பித்தான்.

இரண்டு படகுகளும் ஒன்றையொன்று நெருங்கின. ரங்கராஜனின் படகிலிருந்து பத்துப்பேர் அதில் குதித்தார் கள். தூங்கிக்கொண்டிருந்த ஆறு பேரும் துப்பாக்கி சத் தத்தில் விழித்துக்கொண்டார்கள்; ஆனாலும் அவர்களுக்கு சட்டென்று ஒன்றும் செய்ய முடியவில்லை. க்ஷணநேரத்தில் அவர்கள் எல்லோரையும் ரங்கராஜனின் ஆட்கள் கைது செய் தார்கள். தூங்காம லிருந்த இருவரும் கொஞ்ச நேரம் போராடிவிட்டுத்தான் கட்டுண்டார்கள். எதிரிகள் தொகை அதிகமானதால் அவர்களால் ஒன்றும் செய்ய முடியவில்லை.

சீக்கிரமாகக் கைதியானார்கள். பிறகு அவர்கள் படகிற்குள் பிரவேசித்தார்கள்.

அறைக் கதவு தாளிடப்பட் டிருந்தது. உள்ளே விரஜேசுவரன். அவன் மாமனார் வீட்டிலிருந்து ஊருக்குத் திரும்பிக்கொண்டிருந்தான். வழியில் இந்த விபத்து. அது அவனுடைய அசட்டு தைரியத்தின் விளைவுதான். வேறு யாரும் அந்தமாதிரி அப்படிப் பிரயாணம் செய்யமாட்டார்கள்.

ரங்கராஜன், "ஐயா, சற்று கதவைத் திறவுங்கள்!" என்று சொல்லிக்கொண்டு அதைத் தட்டினான்.

உள்ளே யிருந்துகொண்டு அப்பொழுதுதான் விழித்துக் கொண்ட விரஜேசுவரன், "யார்? அதென்ன ரகளை அங்கே?" என்று கேட்டான்.

"ரகளை ஒன்றுமில்லை, கொள்ளைக்காரர்கள் வந்திருக்கிறார்கள். அவ்வளவுதான்."

விரஜேசுவரன் சிறிது நேரம் மௌனமாக இருந்துவிட்டுப் பிறகு, "பாண்டே ராம்சிங்!" என்று கூப்பிட்டான்.

ராம்சிங் ஒருபுறத்திலிருந்து, "யஜமான்! எல்லோரும் கைதிகளாகிக் கட்டுண்டு கிடக்கிறோம்!" என்றான்.

விரஜேசுவரன் கொஞ்சம் சிரித்துக்கொண்டு, "அதைக் கேட்க வருந்துகிறேன்" என்றான்.

"கதவைத் திறக்கவேண்டும்" என்றான் ரங்கராஜன்.

"நீ யார்?" என்று விரஜேசுவரன் கேட்டான்.

"நானா! நான் ஒரு கொள்ளைக்காரன். கொஞ்சம் தயை செய்து கதவைத் திறக்கிறீர்களா? ரொம்பக் கேட்டுக்கொள்ளுகிறேன்" என்று ரங்கராஜன் சொன்னான்.

"எதற்காகக் கதவைத் திறப்பது? கொஞ்சம் சொல் பார்ப்போம்?"

"எதற்காகவா? அது தங்களுக்குத் தெரியாதா? தங்களிடம் இருக்கும் யாவற்றையும் கொள்ளை கொள்ளத்தான்!"

"என்ன? என்னைச் சில வடக்கத்திப் பசங்களா இந்த மாதிரிப் பயமுறுத்துவது? என் கையில் துப்பாக்கி இருக்கிறது. யார் என் அறைக்குள் நுழைகிறானோ அவன் உயிர் அவனுடையதல்ல, தெரியுமா?" என்று விரஜேசுவரன் கர்ஜித்தான்.

"ஒரு ஆள் நுழையமாட்டான். நீங்கள் எவ்வளவு பேரைக் கொல்லுவீர்கள்? அது கிடக்கட்டும். நீரும் பிராமணன்; நானும் பிராமணன். எந்தப் பக்கமானாலும் ஒரு பக்கம் நிச்சயம் பிரம்மஹத்தி தோஷம் வரும். அதில் என்ன லாபம், நீங்களே சொல்லுங்கள்?"

"அந்தப் பாவத்தைச் செய்யக்கூடாது என்பதை நானும் ஒப்புக்கொள்ளுகிறேன்" என்றான் விரஜேசுவரன்.

இந்த மாதிரி சம்பாஷணை நடைபெற்றுக் கொண்டிருக்கும் பொழுது மடமடவென்று ஒரு சப்தம் கேட்டது. படகின் ஒரு பக்கத்தில் ஒரு கதவை உடைத்துக்கொண்டு ஒரு கொள்ளைக்காரன் அறைக்குள் நுழைந்தான். விரஜேசுவரன் கையிலிருந்த துப்பாக்கியை கட்டைப்பக்கம் திருப்பிக் கொண்டு அவன் தலையில் அடித்தான் ஓங்கி. அவன்மூர்ச்சையடைந்து கீழே விழுந்தான். அதேசமயம் ரங்கராஜன் கதவை ஓங்கிக் காலால் உதைத்தான்.கதவு உடைந்துவிழுந்தது. ரங்கராஜனும் அறைக்குள் நுழைந்தான். விரஜேசுவரன் துப்பாக்கியைத் திருப்பிக்கொண்டு ரங்கராஜனை நோக்கிக் குறி வைத்தான். ரங்கராஜன் சட்டென்று பாய்ந்து அவன் கையிலிருந்த துப்பாக்கியைப் பிடுங்கிவிட்டான். இருவரும் சரியான பலசாலிகள்; ஆனாலும் ரங்கராஜன் கை வெகு சீக்கிரமாக வேலைசெய்யும். எனவே விரஜேசுவரன் துப்பாக்கியைச் சரியாகக் குறிவைப்பதற்குள் ரங்கராஜன் அதை அவன் கையிலிருந்து பிடுங்கிவிட்டான். உடனே விரஜேசுவரன் தன் முழு பலத்தையும் கொண்டு ரங்கராஜனைத் தன்

முஷ்டியால் ஓங்கித் தலையில் அடித்தான். ரங்கராஜன் கையால் சட்டென்று அடியைத் தடுத்தான்.

படகில் ஒரு பக்கத்தில் பல ஆயுதங்கள் கிடந்தன. விரஜேசுவரன் சட்டென்று அங்கே இருந்து ஒரு கூரிய வாளை எடுத்துக்கொண்டு சிரித்த வண்ணம், "இப்போது பாருங்கள் ஸ்வாமி, பிரம்மஹத்தி தோஷம் இப்போது எனக்குக் கிடையாது" என்று சொல்லி ரங்கராஜனைத் தாக்கக் கத்தியை ஓங்கினான். அந்த சமயம் நாலு ஐந்து பேர் கொள்ளைக்காரர்கள் உள்ளே நுழைந்தார்கள். விரஜேசுவரனைத் தாக்கினார்கள். ஓங்கப்பட்ட வாளைக் கையிலிருந்து பிடுங்கிவிட்டார்கள். இருவர் விரஜேசுவரனுடைய இரு கைகளையும் கெட்டியாகப் பிடித்துக் கொண்டார்கள். ஒருவன் கயிறு எடுத்துக்கொண்டு வந்து, "கட்டிவிடட்டுமா?" என்று கேட்டான்.

"கட்டவேண்டாம்; நான் தோல்வியை ஒப்புக்கொள்ளுகிறேன். என்ன வேண்டுமோ, கேளுங்கள். கொடுத்துவிடுகிறேன்" என்றான் விரஜேசுவரன்.

"உம்மிடம் இருக்கும் யாவற்றையும் கொடுத்துவிடவேண்டும்; ஒன்றுகூட பாக்கி இருக்கக்கூடாது."

"படகில் இருக்கிறதை யெல்லாம் எடுத்துக்கொண்டு போங்கள்; மேலும் என்னைத் தொந்தரவு செய்யாதேயுங்கள்."

விரஜேசுவரன் இப்படிச் சொல்லுவதற்கு முன்பே ரங்கராஜனின் ஆட்கள் ஓடத்தைச் சோதனை போட்டுத் தேட ஆரம்பித்தார்கள். அங்கே ஒன்றும் அதிகமாகக் கிடைக்கவில்லை; வெறும் துணி மணிகள், பூஜா திரவியங்கள்—இந்த மாதிரி நடைமுதல் சமான்கள்தான் அங்கே இருந்தன. நிமிஷத்தில் அவைகளையெல்லாம் அவர்கள் எடுத்துக் கொண்டார்கள்.

"சரி, எல்லாவற்றையும் எடுத்துக்கொண்டாய் விட்ட தல்லவா? இனிமேல் போங்கள் — நீங்கள் வந்த திக்கை நோக்கி" என்று விரஜன் வெறுப்புடனே சொன்ஞன்.

"இனிமேல் போகவேண்டியதுதான்; ஆனல் தாங்களும் எங்களுடன் கூட தயைசெய்ய வேண்டும்" என்ருன் ரங்கராஜன்.

"அது எதற்காக? நான் எங்கே வரவேண்டும்?" என்று விரஜன் ஆச்சரியத்துடன் கேட்டான்.

"எங்கள் ராணியிடம்!"

"உங்கள் ராணி என்பது யார்?"

"எங்களை ஆளும் ராணிதான்!"

"அது யாரையா! இதுவரையில் கொள்ளைக்காரர்களுக்கு ஒரு ராணியுண்டு என்று நான் கேள்விப்பட்டதுகூட இல்லையே!"

"தேவி ராணியின் பெயரை எங்கும் கேள்விப் பட்டதில்லையா?"

"ஓகோ! நீங்கள் தேவி சௌதுராணியின் ஆட்களா?"

"ஆமாம்!"

"ராணி எப்படியோ அப்படித்தான் ஆட்களும் இருக்கிறீர்கள். என்னை உங்கள் ராணி முன்பு, கொண்டு போவதின் அபிப்பிராயம் என்ன? என்னைக் கைதியாக வைத்துக் கொள்வதில்தான் என்ன லாபம்?"

"காரியமாகத்தான். படகிலிருந்து ஒன்றும் எங்களுக்குக் கிடைக்கவில்லை. உங்களைக் கைதியாக வைத்துக்கொண்டிருந்தால் ஏதாவது பணம் கிடைக்கும்."

"எனக்கும் வரவேண்டும் போல்தான் இருக்கிறது. உங்கள் ராணி பார்க்கவேண்டிய வஸ்து என்றே கேள்விப் படுகிறேன். அவள் யுவதி அல்லவா?"

"அவள் எங்கள் அன்னை, குழந்தைகளுக்குத் தாயார்; வயது தெரியாது."

"ரொம்ப அழகானவள் என்று கேள்வி."

"எங்கள் அன்னை ஈசுவரிக்கு நிகரானவள்."

"சரி போங்கள் உங்கள் ஈசுவரி தரிசனம் செய்வோம்."

இவ்வாறு சொல்லிவிட்டு விரஜேசுவரன் ரங்கராஜனுடன் அறையை விட்டு வெளியே வந்தான். தன் படகிலிருந்தவர்கள் எல்லோரும் ஜலத்தில் குதித்து நீந்திக்கொண்டிருப்பதைக் கண்டான்.

விரஜேசுவரன் அவர்களைப் பார்த்து, "இப்பொழுது நீங்கள் எல்லோரும் மறுபடியும் ஏறிக்கொள்ளலாம். ஏறி அல்லாவைத் தொழுங்கள்" என்றான்.

அவர்கள் ஒருவர் ஒருவராக மறுபடியும் தோணிக்குள் ஏறினார்கள். விரஜேசுவரன் ரங்கராஜனைப் பார்த்து, "இப்பொழுது அந்தத் தர்வான்களை கட்டவிழ்த்து விடுவீர்களா?" என்று கேட்டான்.

"ஆட்சேபணை இல்லை; ஆனால் விடுபட்டவுடன் அவர்கள் எங்களைத் தாக்கினால் உங்கள் தலை போய்விடும், அவ்வளவு தான். இதை அவர்களிடம் முன்னாலேயே சொல்லிவிடுங்கள்."

விரஜேசுவரன் அந்த மாதிரியே தன் ஆட்களிடம் சொன்னான்.

"நீங்கள் கவலையின்றி இங்கேயே படகுடன் இருங்கள்; எங்கும் போகக்கூடாது; ஒன்றும் செய்யக்கூடாது; நான் சீக்கிரம் திரும்பி வருகிறேன்" என்று அவர்களிடம் சொன்னான்.

உடனே இருவரும் புறப்பட்டார்கள். ரங்கராஜனின் ஆட்கள், "தேவி சௌதுராணிகி ஜய்!" என்று கோஷித்துக் கொண்டு படகை ஓட்ட ஆரம்பித்தார்கள்.

## ஐந்தாம் அத்தியாயம்

## ராணியின் முன்பு

போகும் வழியில் விரஜேசுவரன் ரங்காராஜனைப் பார்த்து "ஆமாம், நான் எவ்வளவு தூரம் உங்களுடன் வரவேண்டும் இப்படி? உங்கள் ராணி எங்கே இருக்கிறாள்?" என்று கேட்டான்.

"அதோ அந்த ஓடம் தெரிகிறதல்லவா? அது அவர்களுடையதுதான்!" என்றான் ரங்கராஜன்.

"அந்த ஓடமா? அது ஆங்கிலேயர்களுடைய கப்பல் என்றல்லவா எண்ணியிருந்தேன்! ரங்கபுரத்தைக் கொள்ளையடிக்க வந்திருக்கலாம் என்று நினைத்தேன். ஏது இவ்வளவு பெரிய ஓடம்?"

"ராணிக்கு ராணிக்கேற்றவாறு எல்லாம் இருக்கவேண்டாமா? அதில் ஏழு அறைகள் இருக்கின்றன."

"அவற்றில் யார் இருக்கிறார்கள்?"

"ஒன்று ராணியின் தர்பார் மண்டபம்; மற்றொன்று அவர்களுடைய சயன கிருகம். ஒன்றில் வேலைக்காரிகள் இருக்கிறார்கள்; ஒன்றில் ஸ்நானம்; ஒன்று சமையல் அறை; ஒன்று சிறை. இப்பொழுது தெரிகிறதா இவ்வளவு அறைகள் எதற்கென்று?"

இப்படி இவர்கள் பேசிக்கொண்டிருக்கும்பொழுதே அந்தச் சிறு படகு ஓடத்தருகில் வந்து சேர்ந்தது. அப்பொழுது தேவி சௌதுராணி ஓடத்தின் மேல்தட்டில்

இல்லை. அவளுடைய ஆட்கள் கொள்ளை யடித்துக்கொண்டிருந்தபொழுது அவள் அங்கே இருந்துகொண்டு நிலவில் வீணை வாசித்துக்கொண்டிருந்தாள். அப்பொழுது வாசிப்பு ஒன்றும் அவ்வளவு சரியாக இல்லை; அபஸ்வரம்கூட விழுந்தது. தாளம் தவறிற்று; ஏதோ வாசிக்க முயன்றாள்; எதையோ வாசித்தாள்; அவள் மனம் எங்கோ சென்றிருந்தது. சின்னப்படகு வந்ததும், அவள் எழுந்திருந்து தன் அறைக்குப் போய்விட்டாள்.

ரங்கராஜன் அறை வாசலுக்கு வந்து, "ராணிகி-ஜய்!" என்றான். வாசலில் திரைபோட்டிருந்தது, உள்ளே பார்க்க முடியவில்லை. உள்ளே யிருந்து தேவியின் குரல், "என்ன விசேஷம்?" என்று கேட்டது.

"எல்லாம் சுபமான முடிவுதான்."

"உங்களிடையே எவ்வளவு பேர் காயமடைந்தார்கள்?"

"ஒருவரும் இல்லை."

"அவர்களிடையே எவ்வளவு பேர் இறந்தார்கள்?"

"ஒருவரும் இறக்கவில்லை. காரியம் உத்தரவுப்படி நடந்துவிட்டது."

"எவ்வளவு பேர் கைதியானார்கள்?"

"இருவர்".

"சாமான்?"

"பூராவையும் கொண்டுவந்துவிட்டேன்!"

"பாபு?"

"பாபுவைப் பிடித்துக்கொண்டு வந்திருக்கிறோம்."

"இங்கே கொண்டுவந்து ஆஜர்ப்படுத்து!"

ரங்கராஜன் உடனே விரஜேசுவரனிடம் சென்று உத்தரவைத் தெரிவித்தான். அவன் எழுந்துவந்து அறையின் முன் நின்றான்.

"நீங்கள் யார்?" என்று தேவி கேட்டாள். அவள் குரலில் கரகரப்பு இருந்தது.

விரஜேசுவரன் எப்படிப்பட்ட பேர்வழி என்பது முன்பே வாசகர்களுக்குத் தெரிந்த விஷயம். பயம் என்பது அவனுக்குக் குழந்தைப்பருவம் முதலே தெரியாது. தேவி சௌதுராணியின் பெயரைக் கேட்டு வடவங்காளமே நடுங்கிக் கொண்டு இருந்தபொழுது விரஜேசுவரனுக்குச் சிரிப்புத்தான் வரும். "பெண்களைக்கண்டு புருஷர்கள் பயப்படுவதென்பதை இதுவரையில் கேட்டதில்லையே! பெண்கள் புருஷர்களின் அடிமைகள்தானே!" என்று அவன் எண்ணுவதுண்டு.

"நான் யாரென்று நீங்கள் அறிந்து என்ன உபயோகம்? என் பணத்திற்கும் உங்களுக்குந்தான் சம்பந்தம். என் பெயரில் என்ன பணம் இருக்கிறது?" என்றான் விரஜன் தேவியின் கேள்விக்குப் பதிலாக.

"ஏன் இருக்காது? நீங்கள் எப்பேர்ப்பட்ட மனுஷன் என்பதை அறிந்தால் பணம் அதிலிருந்து வருகிறது" என்று ராணி சொன்னபொழுது அவள் தொண்டை அடைத்துக் கொண்டது.

"அதற்குத்தானே என்னை இங்கே பிடித்துக்கொண்டு வந்திருக்கிறீர்கள்?"

"இல்லாவிட்டால் நீங்களே என்னிடம் வருவீர்களா?"

தேவி திரைக்குப் பின் இருந்தாள். ஆகையால் இந்த வார்த்தைகளைச் சொல்லும்போது தேவியின் கண்களில் ஜலம் வந்ததை யாரும் பார்க்கவில்லை."

"என் பெயர் துக்கி ராம் சக்கரவர்த்தி என்று சொன்னால் நீங்கள் நம்புவீர்களா?" என்றான் விரஜன்.

"மாட்டேன்!" என்றாள் ராணி.

"ஆகையால் நான் சொல்லி என்ன பிரயோஜனம்?"

"சொல்லுகிறதைப் பார்த்தால் நீங்கள் சொல்லமாட்டீர் கள்போ லிருக்கிறது."

"என் பெயர் கிருஷ்ண கோவிந்த கோஸால்".

"இல்லை."

"தயாராம் வக்ஷி!"

"அதுவும் இல்லை!"

"விரஜேசுவர ராய்!"

"இருக்கக்கூடும்!"

அந்த சமயத்தில் தேவியின் அருகில் மற்றொரு ஸ்திரீ வந்து உட்கார்ந்தாள் மௌனமாக.

"குரல் ஏன் இப்படிப் போயிருக்கிறது?" என்று கேட் டாள் அவள்.

தேவியின் கண்ணீர் நிற்கவில்லை. வர்ஷா காலத்தில் பூத்த பூவின் உள்ளே நிரம்பியிருக்கும் மழை ஜலம் எப்ப டிக் கிளை ஆடினதும் மள மள வென்று வெளியே உதி ருமோ அப்படி தேவியின் கண்களில் நிறைந்திருந்த நீர் திடீ ரென்று மலமல வென்று உதிர்ந்தது. தேவி அந்த ஸ்திரீ யின் காதோடு காதாக, "இனிமேல் என்னால் இந்த நாடகம் நடத்த முடியாது. நீ பேசு, எல்லாம் தெரியு மல்லவா?" என்று சொல்லிவிட்டு அந்த அறையை விட்டு வேறு அறைக் குப் போனாள். வந்தவள், தேவியின் ஆசனத்தில் உட்கார்ந்து கொண்டு விரஜேசுவரனுடன் பேச ஆரம்பித்தாள். இவள் யார் என்பது வாசகர்களுக்குத்தான் தெரியுமே — இவள் தான் பிராமணப் பெண் நிசி.

"இந்தத் தடவை நீர் சரியாகச் சொல்லிவிட்டீர் — உம் பெயர் விரஜேசுவர ராய்" என்றாள் நிசி.

விரஜேசுவரனுக்குக் கலவரம் ஏற்பட்டது மனதில். படு தாவுக்குள் இருப்பது ஒன்றும் கண்ணுக்குத் தெரியவில்லை. யார் பேசுகிறார்கள் என்றும் தெரியவில்லை. இருந்தாலும்

"நான் யாரென்று தெரிந்துகொண்டு என்னை உடனே அனுப்பினுல் சௌகரியம். நான் என் ஊருக்குப் போகவேண்டும். நான் விடுதலையடைய எவ்வளவு தரவேண்டும்?" என்று கேட்டான்.

"ஒரு பாத்திரம் நிறைய பணம் கையில் இருந்தால் உடனே கொடுத்துவிட்டுப் போகலாம்."

"இப்பொழுது கையில் இல்லை."

"படகிலிருந்து கொண்டுவந்து கொடுக்கலாம்."

"அதிலிருந்த சாமான் பூராவையும் உங்கள் ஆட்கள் கொண்டுவந்து விட்டார்களே, அதில் கொஞ்சங்கூட இல்லை."

"யாரிடமிருந்தாவது கடன் வாங்கிக் கொடுக்கலாம்."

"அவர்களிடமும் இல்லை."

"சரி, அப்படியானுல் பணம் வரும் வரை நீங்கள் இங்கே கைதியாக இருக்கவேண்டும்."

அப்பொழுது அறைக்குள் இன்னும் யாரோ பெண் பேசுவது கேட்டது.

"ராணிஜி! பணம் அவரால் கொடுக்க முடியாவிட்டால் நான் தருகிறேன். என்னிடம் அவரை விட்டுவிடுங்கள்" என்று அவள் சொன்னது கேட்டது.

"செய்யலாம்; ஆனுல் அவரை விலைக்கு வாங்கி நீ என்ன செய்வாய்? பிராமணன், விறகு வெட்டவோ, ஜலம் கொண்டு வரவோகூட முடியாதே!" என்று ராணி சொன்னது கேட்டது.

"இருக்கட்டும், எனக்குச் சமைக்க ஆள் வேண்டும்" என்றுள் அவள்.

"பிறகு நிசி விரஜேசுவரனைப் பார்த்து, "நீர் விலையாகி விட்டீர், எனக்குப் பணம் வந்துவிட்டது. நீங்கள் அவளுடன் போக வேண்டும், சமையல் செய்ய வேண்டும்" என்றுள்.

"அவள் யார்?" என்று விரஜன் கேட்டான்.

"பெண் பிள்ளை, வெளியே போகவேண்டாம். உள்ளே வரலாம்" — என்றுள் நிசி..

## ஆறும் அத்தியாயம்

## ஸாகராவின் சாகஸம்

அனுமதி பெற்றுக்கொண்டு விரஜன் திரையை நீக்கி விட்டு உள்ளே நுழைந்தான். நுழைந்து பார்த்தவன் அப் படியே பிரமித்துப் போய் நின்றுவிட்டான். எங்கும் சுவர் களில் சித்திரங்கள். சும்ப நிசும்பர்கள் யுத்தம், மகிஷாசுர னின் யுத்தம், தசாவதாரம், எட்டு நாயிகைகள், சப்த மாதாக் கள், தசமகா வித்யைகள், கைலாசம், பிருந்தாவனம்; லங்கை, அமராவதி, ஒன்பது கன்னிகைகள், கோபிகா வஸ்திர ஹரணம்; — எல்லாம் வெகு அழகாக அங்கே ஓவிய விசித்திரங்களாகத் தீட்டப்பட்டிருந்தன. சித்திர வேலை செய்யப்பட்ட பல கம்பளங்கள் கீழே விரிக்கப்பட் டிருந் தன. அவற்றின்மேல் கொஞ்சம் உயரமாக சிம்மாஸ னம், அதில் மகமல் பட்டு ஆஸனம்; சாய்மானம், அத்தர் நிரம்பிய தங்கப் பாத்திரம், தங்கத்தால் செய்த வெற்றிலைப் பெட்டி, தங்கக் குடலைகள் — அதில் குவிக்கப்பட்டிருக்கும் சுகந்த புஷ்பங்கள். ஒரு தட்டில் புகையிலை இருந்தது. இரண்டு பக்கங்களிலும் இரண்டு வெள்ளி தீபஸ்தம்பங்கள். அவற்றில் பல விளக்குகள் ஜ்வலித்துக்கொண்டிருந்தன. மேல் கூறையிலிருந்து ஒரு தங்க விளக்கு தொங்கிக் கொண்டிருந் தது. நாலு பக்கங்களிலும் நாலு பொம்மைகள் கையில் வத்திகள் வைத்துக்கொண்டு நின்றன. சிம்மாசனத்தில் ஒரு பெண் உட்கார்ந்திருந்தாள். அவள் முகம் நன்றாகத் தெரிய

வில்லை. ஆனால் பத்தரை மாத்துத் தங்க மேனியின் காந்தி யும் கருத்த சுருள் குழலும் நன்றாகத் தெரிந்தன. கர்ணுபர ணங்கள் துணிக்குள்ளிருந்து பளபள வென்று மின்னின. இன்னும் அவளுடைய விசாலமான கண்களின் கூரிய பார்வை பிரகாசித்தது. அவள் ஆஸனத்தில் சாய்ந்துகொண்டிருந் தாள்.

விரஜேசுவரன் உள்ளே நுழைந்ததும் சாய்ந்துகொண் டிருந்த அந்தப் பெண்ணைப் பார்த்து, "ராணிஜியை என்ன சொல்லி ஆசிர்வாதம் செய்யட்டும்" என்று கேட்டான்.

"நான் ராணிஜி அல்ல" என்றாள் அந்தப் பெண்மணி.

விரஜேசுவரன் பார்த்தான். தான் இதுவரையிலும் பேசிக்கொண்டிருந்த பெண்ணின் குரலுக்கும் அந்தக் குரலுக்கும் ஒற்றுமை இல்லை. குரலைத்தான் மறைத்து மாற் றிப்பேசுகிறாளோ என்று எண்ணினான். தேவி சௌதுராணி மகா மாயாவினி என்று கேள்வி. இல்லாமலா பெண்கள் அவளைக் கொள்ளைக்காரி என்றார்கள்?

"அப்படியானால் உங்களுடன் பேசுகிறேன். அவர்கள் எங்கே?" என்று கேட்டான்.

"உம்மை உள்ளே வரச்சொல்லி உத்தரவு செய்துவிட்டு, படுத்துக்கொள்ளப் போய்விட்டார்கள்; ராணியிடம் உமக்கு என்ன ஆகவேண்டும்?" என்று அந்த சுந்தரி கேட்டாள்.

"நீ யார்?"

"நான் உன் யஜமானி!"

"என் 'யஜமானி'யா!"

"ஞாபகமில்லையா? இப்போதுதானே உம்மைப் பணம் கொடுத்து வாங்கினேன்!"

"வாஸ்தவந்தான், உங்களை எப்படி ஆசீர்வாதம் செய்து அழைப்பது?"

"ஆசீர்வாதத்தில் பல ர்கங்கள் உண்டல்லவா?"

"பெண்கள் விஷயத்தில் இருக்கின்றன. சுமங்கலி களை ஒருதினுசாக ஆசீர்வாதம் செய்யவேண்டும். விதவையை வேறு விதமாகச் சொல்லவேண்டும், புத்திர வதியை—."

"சீக்கிரம் மரணமடைவாயாக!" என்று சொல்லி ஆசீர்வதியும்.''

"அந்தமாதிரி நான் யாருக்கும் செய்யவே மாட்டேன். நீ ரொம்பகாலம் சௌக்கியமாக இருக்கவேண்டும்!"

"எனக்கு இப்பொழுது இருபத்தைந்து வயதாகிறது. எனது எழுபதாவது வயதுவரை எனக்கு சமைத்துப் போடுகிறீரா?"

"முதலில் ஒருநாள் சமைக்கிறேன்; பிடித்திருந்தால் ஆட்சேபணை இல்லை."

"பின் உட்காரும், என்னென்ன சமைக்கத் தெரியும், சொல்லும் பார்ப்போம்."

விரஜேசுவரன் அந்த மிருதுவான கம்பளத்தின்மேல் உட்கார்ந்தான்.

"உம் பெயர் என்ன?" என்று கேட்டாள் அந்தப் பெண்.

"உனக்குத்தான் எல்லாம் தெரிகிறதே! என் பெயர் விரஜேசுவரன். உன் பெயர் என்ன? தொண்டையை ஏன் அப்படி கரடுமுரடாக்கிக்கொண்டு பேசுகிறாய்?"

"நானு! நான் உம் 'எஜமானி.' எனக்கு நானேதான் அதிகாரி."

"உன் பெயர்?"

"என் பெயர் பாஞ்சகரி, ஆனால் நீர் எனது வேலைக்காரர். ஆகையால் நீர் அந்தப் பெயரைச் சொல்லக்கூடாது. நானும் உம்முடைய முன் பெயரைச் சொல்லக்கூடாது."

"பின் என்ன சொல்லிக் கூப்பிடுவது?"

"நான் உம்மை, 'ராமதனன்' என்று கூப்பிடுகிறேன். நீர் என்னை 'எஜமானியம்மா' என்று கூப்பிடும். சரி, உம்மைப்பற்றிக் கொஞ்சம் சொல்லும். உம் வீடு எங்கே?"

"நீங்கள்தான் என்னை விலைக்கு வாங்கிவிட்டீர்களே, நான் எந்த ஊர் ஆளுயிலென்ன? வீடு எங்கே இருந்தால் என்ன?"

"நீர் சொல்லாவிட்டால் போமேன்! ரங்கராஜனைக் கேட்டால் தெரிகிறது."

"நான் செய்யவேண்டிய வேலைகள் என்ன?"

"ஜலம் தூக்க வேண்டியது, விறகு வெட்ட வேண்டியது — வேலையா இல்லை?"

"நான் ராட தேசத்தான்"

"பின் என்ன? ஜலம் தூக்குவீர், விறகு வெட்டுவீர். நான் வாரேந்தரம், நீர் ராடி—குலீனரா, வம்சஜரா?

"அதெல்லாம் எதற்கு? சம்பந்தமா செய்துகொள்ளப் போகிறோம்? நான் கலியாணமானவன்."

"கலியாணமாயிற்று? எவ்வளவு பெண்சாதிகள்?"

"ஜலம் தூக்கலாம்—அது சொல்லிக் கொடுக்க வேண்டாம்."

பாஞ்சகரி தேவி ராணியை உரக்கக் கூப்பிட்டு, "இதோ பாருங்கள், இதென்ன இந்தப் பிராம்மணன் கேட்ட கேள்விக்கு பதில் சொல்லமாட்டேன் என்கிறாரே!" என்றாள்.

மற்றொரு அறையிலிருந்துகொண்டு ராணி, "பிரம்படி கொடு!" என்றாள்.

தேவியின் வேலைக்காரி ஒருத்தி மெல்லிய பிரம்பொன்றைக் கொண்டுவந்து கொடுத்துவிட்டுப் போனாள். அதை வாங்கி பாஞ்சகரி கம்பளியின்மேல் இரண்டுதாம் அடித்துவிட்டு, "பார்த்தீரா?" என்று கேட்டாள்.

விரஜேசுவரன் சிரித்தான். "உங்களால் எல்லாம் செய்ய முடியும். சொல்ல வேண்டியதைச் சொல்லுங்கள், சொல்லுகிறேன்."

"நீர் யாரென்று எனக்குத் தெரியவேண்டிய அவசியம் இல்லை. எனக்கென்ன பிரயோஜனம்? உம் சமையலை நான் சாப்பிட முடியாது. வேறென்ன வேலை செய்வீர், சொல்லும்?"

"சொன்னதைச் செய்வேன்!"

"ஜலம் எடுக்கத் தெரியுமா?"

"தெரியாது."

"விறகு வெட்டத் தெரியுமா?"

"தெரியாது."

"கடைக்குப் போகத் தெரியுமா?"

"ஏதோ கொஞ்சம்."

"அது உபயோகமில்லை. விசிறத் தெரியுமா?"

"முடியும்."

"நல்லது. அந்த சாமரத்தை எடுத்துக்கொண்டு விசிறும்."

விரஜன் விசிரியைக்கொண்டு விசிறலானான்.

"சரி, ஒரு காரியம் நன்றாகத் தெரிகிறது. கால் பிடிக்கத் தெரியுமா?"

துரதிருஷ்ட வசத்தால் அவளுடைய அரட்டையில் கொஞ்சம் ஈடுபட்டுவிட்டான். இந்தப் பெண்களை ஒரு தினுசில் சரிப்படுத்தி விடுதலையடைய முயற்சி செய்யலாமென்றும் அவனுக்குத் தோன்றிற்று. எனவே விரஜன், "உங்களைப் போன்ற சுந்தரிகளுடைய காலைப் பிடிப்பது என்பது பாக்கியம் —" என்று ஆரம்பித்தான்.

"எங்கே கொஞ்சம்" என்று பாஞ்சகரி தன் கால்களை நீட்டினாள். விரஜன் மெல்ல கால்களைப்பிடித்து விட்டான். அவள் உடனே தனது சுயக் குரலில் ஏதோ சொன்னாள்.

சட்டென்று கால்களை விட்டு விலகினான்.

விரஜன் ஆச்சரிய மடைந்தான். "இவள் யார்? இந்தக் குரல் எனக்குத் தெரிந்த குரலாயிருக்கிறதே?" என்று தனக்குள் சொல்லிக்கொண்டான். தைரியமாக விரஜன் அவள் முகத்திலிருந்த வஸ்திரத்தை எடுத்தான். அவள் விழுந்து விழுந்து சிரித்துக்கொண்டு எழுந்து நின்றாள்.

"இதென்ன? நீயா!—நீயா? ஸாகரா!—" என்று விரஜன் ஆச்சரியத்துடன் கத்தினான்.

"நான் ஸாகராதான்—கங்கை இல்லை. யமுனை இல்லை—குளமில்லை, வாய்க்கால் இல்லை! சாக்ஷாத் ஸாகராதான்! நீங்கள் ரொம்ப துரதிருஷ்டம் பிடித்தவர்கள்—அல்லவா? யாரோ ஒரு பெண்ணென்று வெகு சந்தோஷமாக காலைப் பிடிக்க வந்தீர்கள். உங்கள் வீட்டுப் பெண்தான் என்று தெரிந்ததும் உங்களுக்குக் கோபம் தானே வருகிறது? போகட்டும். என் பிரதிக்ஞை நிறைவேறிவிட்டது. நீங்கள் என் காலைப் பிடித்துவிட்டீர்கள். என் முகத்தைப் பார்த்தாய் விட்டது. என்னை விட்டு விடுங்கள். ஆனால் உண்மையில் நான் பிராமணன் பெண்தான்!" என்றாள் ஸாகரா.

---

## ஏழாம் அத்தியாயம்

## விருந்து வேடிக்கை

விரஜன் சிறிது நேரம் மெய்ம்மறந்து போனான். கடைசியாக, "ஸாகரா! நீ இங்கே எப்படி வந்தாய்?" என்று கேட்டான்.

"ஸாகராவின் கணவரே! நீங்கள் எப்படி இங்கே வந்தீர்கள்?" என்று ஸாகரா, குறும்பாகக் கேட்டாள்.

"அது எதற்கு? நான் கைதி. நீயும் கைதியா? என்னைப் பிடித்துக் கொண்டு வந்திருக்கிறார்கள். உன்னையும் பிடித்துக்கொண்டா வந்திருக்கிறார்கள்?"

"நான் கைதி இல்லை. என்னை யாரும் பிடித்துக் கொண்டு வரவில்லை. நானே இஷ்டப்பட்டு ராணி தேவியுடன் கூட இருப்பதற்கு வந்தேன். உங்களை வரவழைத்து என் காலைப் பிடிக்கச் சொல்லுகிறேன் என்று தேவி சொன்னதால் இங்கே வாசம் செய்துகொண்டிருந்தேன்."

அப்பொழுது உள்ளேயிருந்து நிசி வந்தாள். அவளுடைய ஆடைகள் ஜொலித்த ஜொலிப்பிலிருந்து, "இவள்தான் தேவி சௌதுராணி!" என்று எண்ணினான் விரஜன். உடனே தடபுடலாக எழுந்திருந்து நின்றான்.

"பெண்கள் கொள்ளைக்காரிகளா யிருந்தாலும் அவர்களுக்கு இவ்வளவு மரியாதை வேண்டியதில்லை. நீங்கள் தயை செய்து உட்காருங்கள். உங்கள் படகை நாங்கள் கொள்ளையடித்து விட்டோமா? இப்பொழுது ஸாகராவின் பணயம்

வெற்றியாகி விட்டது. இனிமேல் நீங்கள் எங்களுக்குத் தேவை இல்லை. நீங்கள் இனிமேல் உங்கள் படகுக்குத் திரும்பிப் போவதில் நீங்கள் கொஞ்சமும் தாமதம் செய்யவேண்டிய அவசியம் இல்லை. நாங்கள் ஒரு தடங்கலும் செய்யமாட்டோம். உங்களுடைய படகிலிருந்த யாவற்றையும் திருப்பி அனுப்பி விட்டேன்; ஒரு சல்லிகூட எங்களுக்கு வேண்டாம். ஆனால் இந்த சாமான்—ஸாகரா—இவள் என்ன ஆவது? இவள் தன் தகப்பனார் வீட்டிற்குத் திரும்பிப் போவதா என்ன? இவளை நீங்கள் கூட்டிக்கொண்டு போகிறீர்களா?" என்றாள் நிசி.

விரஜனுக்கு ஆச்சரியத்திற்கு மேல் ஆச்சரியமாக வந்தது. அவன் வெல வெலத்துப் போனான். அப்படியானால் கொள்ளைக் கதை பூராவும் பொய்! இவர்கள் கொள்ளைக்காரர்கள் இல்லை! சிறிது நேரம் யோசனையி லாழ்ந்தான்.

"என்னை நீங்கள் இப்பொழுது முட்டாள் ஆக்கிவிட்டீர்கள். தேவி சௌதுராணியின் ஆட்கள் தான் என் படகைக் கொள்ளை யடித்தார்கள் என்று எண்ணியிருந்தேன்" என்றான் கடைசியாக.

"உண்மையாக—இது தேவி சௌதுராணியின் படகு தான்—சந்தேகமில்லை. தேவி ராணி கொள்ளை யிடுகிறாள் என்பதும் உண்மை—"

"தேவி சௌதுராணி உண்மையில் கொள்ளைக்காரி என்கிறீர்கள்—நீங்கள் தேவி சௌதுராணி அல்லவா?" என்று விரஜன் குறுக்கிட்டுக் கேட்டான்.

"நான் தேவி அல்ல. நீங்கள் தேவியைப் பார்க்க விரும்பினால் அவள் தர்சனம் அளிப்பாள். முதலில் நான் சொல்லுவதைக் கேளுங்கள். நாங்கள் வாஸ்தவமாகவே கொள்ளை தான் அடித்தோம்—ஆனால் அதில் உங்கள்பேரில் வேறொரு அபிப்பிராயமும் இல்லை. ஸாகராவின் பிரதிக்ஞையைக் காப்பாற்று

வதற்காக மட்டுமே அப்படிச் செய்தோம். இப்பொழுது அவள் எப்படி வீடுபோய்ச் சேருவது என்பதுதான் கேள்வி—பிரதிக்ஞை நிறைவேறிவிட்டது வாஸ்தவம்.''

"எப்படி வந்தாள் இங்கே?''

"ராணிஜியுடன்கூட.''

"நானும் ஸாகராவின் தகப்பனார் வீட்டிற்குப் போயிருந்தேனே, அங்கிருந்துதானே வருகிறேன். அங்கே நான் வேறு யாரையும் பார்க்கவில்லையே!''

"உங்கள் பின்னாலேயே ராணிஜியும் சென்றார்கள்.''

"இங்கே வந்தது எப்படி?''

"எங்கள் படகுகளைப் பார்த்ததில்லையா நீங்கள்?''

"பின் நீங்களே அவளைப் படகேற்றி துணையுடன் ஊருக்கனுப்பி வைக்கலாமே?''

"அதிலும் ஒரு சங்கடம் இருக்கிறது. ஸாகரா யாரிடமும் சொல்லிக் கொள்ளாமல் ராணியுடன் வந்துவிட்டாள். ஆகவே அவள் திரும்பிப் போனால் லோகத்தில் 'எங்கே போனாய்?' என்று கேட்பார்கள். உங்களுடன் திரும்பிச் சென்றாளானால் பேச்சு மூச்சு இருக்காது.''

"சரி, தயைசெய்து படகைத் தயார் செய்யச் சொல்லுங்கள்.''

"ஆகட்டும்!'' என்று சொல்லிவிட்டு நிசி அவ்விடம் விட்டுச் சென்றாள்.

பிறகு ஸாகராவுடன் தனியாக இருந்ததால், "ஸாகரா! நீ எதற்காக இந்த மாதிரி பிரதிக்ஞை செய்துகொண்டாய்?'' என்று கேட்டான் விரஜன்.

முகத்தைத் துணியால் மூடிக்கொண்டு—இப்பொழுது பட்டு வஸ்திரமல்ல—அழுதாள் ஸாகரா. அதே வாயாடி ஸாகரா விம்மி விம்மி அழுதாள் — மெள்ள அழுதாள். பின்னால் தேவி காதில் படக்கூடாது என்று கொஞ்சம் அழுகை

அடங்கினதும் விரஜன், "ஸாகரா! நீ ஏன் என்னைக் கூப்பிட வில்லை? கூப்பிட்டிருந்தால் எல்லாம் சரியாகப் போயிருக் கும்" என்றான்.

"நீங்கள் என்னை அடித்தீர்கள். எப்படிக் கூப்பிடுகிறது நான்?"

இந்தப் பேச்சுகள் சாஸ்திரோக்தமாய் முடிவு பெற்ற தும் விரஜன், "ஆமாம், நீ இந்தக் கொள்ளைக்காரர்களுடன் கூட ஏன் வந்தாய்?" என்று கேட்டான்.

"தேவி, என் சகோதரி போன்றவள். முன்பே அறி முகம் உண்டு. நீங்கள் போனதும் அவள் எங்கள் வீட்டிற்கு வந்தாள். நான் அழுதுகொண்டு கிடந்ததைக் கண்டு, 'ஏனடி அழுகிறாய்? என்னுடன் இரண்டு நாள் வந்து இரு. எல்லாம் சரி பண்ணுகிறேன்' என்றாள். அதனால் நான் இங்கே வந் தேன். தேவியைப் பரிபூரணமாக நம்புவதற்கு எனக்கு ஆதா ரங்கள் இருக்கின்றன. நான் உங்களுடன் புறப்படுகிறேன் என்று எல்லோரிடமும் சொல்லிக்கொண்டு வருகிறேன், நீங் களும் எல்லாம் தயார் செய்யுங்கள். மற்றொருதரம் புகையிலை போடுங்கள். பிறகு புறப்படுவோம்."

பிறகு ஸாகரா தேவியைக் கூப்பிட்டாள். தேவி வர வில்லை. நிசி வந்தாள்.

"படகைத் தயார் செய்யச் சொல்லச் செல்லவில்லையா?"

"படகு உங்களுடையது. ஆனால் பாருங்கள், நீங்கள் எங்கள் தங்கை புருஷன். ஊருக்கு அனுப்புவதற்கு நாங்கள் எப்படி ஒத்தாசை செய்வோம்? தடைதான் செய்வோம். பிரிவது பெருங் கஷ்டம் அல்லவா? நாங்கள் கொள்ளைக்காரர் கள் என்றால் எங்களுக்கு உற்றார் உறவினர் இல்லையா?"

"என்ன செய்யச் சொல்லுகிறீர்கள்?"

"முதலில் எழுந்திருந்து அங்கே நன்றாக உட்காருங் கள்."

நிசி சிம்மாஸனத்தைக் காட்டினாள். விரஜன் கம்பிளியில் உட்கார்ந்திருந்தான். "என்ன, நான்தான் சரியாக உட்கார்ந்திருக்கிறேனே?" என்றான்.

நிசி ஸாகராவைப் பார்த்து, "அம்மா, உன் பதார்த்தத்தை நீ தூக்கி எடுத்து உட்கார வை. நான் பிறர் சொத்தைத் தொடக் கூடாது. தங்கப் பதுமை அவரை விட்டுவிட்டாள்" என்றாள் சிரித்துக்கொண்டு.

"நான் என்ன பித்தளை வெங்கலம் கையில் விழுந்து விட்டேனா?" என்றான் விரஜன்.

"புருஷர்கள் வெறும் உலோகப் பாத்திரம். எப்பொழுதும் உள்ளே காலி. நான் போய் குடத்தை ஜலம் போல நிரப்பவேண்டும்" என்றாள் ஸாகரா.

"சரி, உன் பாத்திரத்தைத் தூக்கி ஆசனத்தில் உட்கார வை."

விரஜன் கடைசியாக ஆஸனத்தில் உட்கார்ந்தான். உடனே இரண்டு திக்கிலிருந்து இரண்டு யுவதிகள் வந்து விரஜனுக்கு இருபுறத்திலும் நின்று சாமரம் போட்டனர். நிசி ஸாகராவைப் பார்த்து, "உன் கணவருக்கு உன் கையாலேயே புகையிலை தயார்செய்து கொடு" என்றாள்.

உடனே ஸாகரா ஒரு தங்கக் குமிழிலிருந்து மிருக நாபி வாசனையேற்றிய புகையிலையைக் கொண்டு வந்து கொடுத்தாள்.

"எனக்குத் தனியாக ஒரு புகைக் குழாய் தயார்செய்து கொடு" என்றான் விரஜன்.

"சந்தேகம் வேண்டாம். இந்தப் பாத்திரம் வேறு யாராலும் உபயோகப் படுத்தப்படவில்லை. நாங்கள் புகையிலை உபயோகிப்பதே இல்லை" என்றாள் நிசி.

"அதென்ன? அப்படியானால் இந்தப் பாத்திரமெல்லாம் எதற்கு?"

அந்தப் பாத்திரம் அன்றுதான் வெளியில் எடுக்கப் பட்டது. புகையிலையும் அன்றுதான் வாங்கினார்கள்—ஸாகராவின் புருஷன் வருவார் என்று. விரஜேசுவரன் புகைக்குழாயைப் பரிசோதித்துப் பார்த்தான். அதை யாரும் உபயோகித்ததாகத் தெரியவில்லை. அவ்வளவுதான், விரஜன் புகை பிடிப்பதன் சொல்ல இயலாத சுகத்தில் மூழ்கினான்.

பிறகு ஸாகரா சந்தனம் கர்ப்பூரம் முதலிய கலந்து பானத்தை ஒரு தங்கச் செம்பில் கொண்டுவந்து கொடுத்தாள்.

அப்பொழுது நிசி, "ஆமாம் உன் புருஷனுக்கு இவ்வளவெல்லாம் செய்தாயே! ஸ்நானம் செய்விக்க வேண்டாமா?" என்றாள் ஸாகராவைப் பார்த்து.

விரஜன் முகத்தில் களை குறைந்தது. "ஐயையோ இந்த இரவில் ஸ்நானமா? மன்னிக்கவேண்டும். முடியவே முடியாது!" என்றான்.

ஆனால் அவன் பேச்சை யார் காதில் போட்டுக் கொண்டார்கள்? ஸாகரா வெகு ஆடம்பரத்துடன் ஸ்நானத்திற்கு ஏற்பாடுகள் செய்யலானாள். ஓர் அறையில் ஆஸனப்பலகை முதலியன போட்டு உடம்பு தேய்த்துக்கொள்ள வாசனைப் பொடிகள், தைலங்கள் முதலியவற்றை அருகே வைத்தாள். ஒரு பெரிய தங்கப் பாத்திரம் நிறைய குளிர்ந்த ஜலத்தை நிரப்பினாள். ஏற்பாடெல்லாம் முடிந்ததும் நிசி விரஜனைப் பார்த்து, "சரி, ஸ்நானத்திற்கு எழுந்திருங்கள்" என்றாள். விரஜன் நிசியிடம் கைகூப்பிக்கொண்டு, "இதோ பாருங்கள்! என்னை வழி மறித்துக் கைது செய்துகொண்டு வந்து வைத்துக் கொண்டீர்கள், அந்த அக்கிரமத்தைச் சகித்துக்கொண்டிருக்கிறேன். ஆனால் இந்த ராத்திரியில் இந்த அக்கிரமத்தை என்னால் சகிக்க முடியாதம்மா, சொல்லிவிட்டேன்" என்றான்.

பிறகு சாப்பாடு! "ஐயையோ, என்னால் முடியவே முடியாது! இதென்ன கொடுமை!" என்று அலறினான்.

அதிலும் பெண்கள் அவனை லட்சியமே செய்யவில்லை. வேறு வழியின்றி விரஜேசுவரன் ஏதோ கொஞ்சம் சாப்பிட்டான்.

"ஆமாம், பிராம்மண போஜனம் செய்வித்தால் கொஞ்சம் தக்ஷிணை கொடுக்கவேண்டாமா?" என்று ஸாகரா நிசியைப் பார்த்துச் சொன்னாள்.

"தக்ஷிணையை தேவியே அவருக்கு நேரில் கொடுப்பாள்" என்று சொல்லிவிட்டு நிசி விரஜனைப் பார்த்து, "ஸ்வாமி, வாருங்கள், ராணியிடம் போகலாம்" என்று சொல்லி விரஜனைக் கூட்டிக்கொண்டு மற்றொரு அறைக்குள் நுழைந்தாள்.

## எட்டாம் அத்தியாயம்
## தேவியின் முன்

நிசி விரஜனைக் கூட்டிக்கொண்டு தேவியின் படுக்கை யறைக்குப் போனாள். தர்ப்பார் அறைபோல அது வெகு அபூர்வமாக அலங்காரம் செய்யப்பட் டிருந்ததைக்கண்டு விரஜன் திகைத்துப் போனான். ஒரு பக்கம் தங்கத்தால் அலங்கரிக்கப்பட்ட ஒரு சிறு கட்டில் இருந்தது. முத்து ஹாரங்கள் சுற்றிலும் தொங்கின. ஆனால் விரஜன் மனது அவற் றில் அதிக நேரம் பதியவில்லை. இவ்வளவு ஐசுவரியத்திற்கும் அதிகாரி, அந்தப் பெயர்பெற்ற ராணியைப் பார்க்கவேண்டும் என்ற ஒரே ஆவல்தான் அப்பொழுது அவனுக்கு இருந்தது. ஒரு பக்கம் பாதி முகத்தை மூடிக்கொண்டு ஒரு பெண் உட்கார்ந்திருந்தாள். ஸாகராவையும் நிசியையும்போல் அவள் அலங்காரம் செய்துகொண்டிருக்கவில்லை. அவர்கள்போல மினுக்காகவும் இல்லை. ஸ்திரமாக, சாவதானமாக, கீழ்நோக்கிய கண்களுடன், வெட்கத்தால் தலை குனிந்த வண்ணம் இருந் தாள். நிசியும் ஸாகராவும், நிசி அதிகமாக, ரத்னாபரணங்கள் அணிந்திருந்தார்கள்; விலையுயர்ந்த ஆடைகள் அணிந்திருந் தார்கள். அதெல்லாம் இவளிடம் காணோம். விரஜனைப் பார்ப்பதற்குமுன் தேவி சர்வாலங்காரங்களோடும் கூடின வளாய் இருந்தாள் என்பதை நாம் பார்த்தோம். இப்பொழுது, விரஜனை சந்திக்கும் சமயத்தில் தேவி மிகவும் சாமான்யமான உடை தரித்துக்கொண்டு, சாமான்ய அலங்காரம் செய்து கொண்டு அவனை எதிர்பார்த்துக்கொண்டிருந்தாள். முதலில்

நிசியின் யோசனையில் மயங்கிவிட்டாள் தேவி. பிறகு "சீச்சி! என்ன காரியம் செய்கிறேன்!" என்று தெளிந்து விட்டாள்; அதனால்தான் இந்த மாறுதல்.

விரஜேசுவரனை அங்கே கூட்டிக்கொண்டுபோய் விட்டு விட்டு நிசி போய்விட்டாள். அவன் நுழைந்ததும் தேவி எழுந்திருந்து தனக்கு நமஸ்காரம் செய்வதைக்கண்டு அவன் திகைத்துப் போனான். அவள் சாக்ஷாத் ஈசுவரியைப் போலவே தன்முன் நிற்பதைக் கண்டான். அந்த மாதிரிக் காட்சியைக் அவன் வேறு எங்கே காணப் போகிறான்? அவன் பேச்சற்றுப் போய் அப்படியே நின்றுபோய்விட்டான்.

நமஸ்காரம் செய்ததும் தேவி மெதுவான குரலில் பேசலானாள்:

"உங்களை நான் இன்று மிகவும் கஷ்டத்திற்குள்ளாக்கி விட்டேன். நிர்ப்பந்தமாக உங்களைப் பிடித்துக்கொண்டு வந்து தொந்தரவு கொடுத்துவிட்டேன். எதற்காக இந்த மாதிரி கெட்ட காரியம் செய்தேன் என்பதன் காரணத்தைக் கேளுங்கள். என்னைக் குற்றம் சாட்டமாட்டீர்கள்."

"எனக்கு ரொம்ப நல்லதுதான் செய்திருக்கிறீர்கள்" என்றுதான் விரஜன் சொன்னான். அவனால் வேறு வார்த்தைகள் சொல்ல முடியவில்லை.

"நீங்கள் தயைசெய்து இந்த இடத்தில் போஜனம் செய்தது எனக்குப் பெருத்த கௌரவமாகிவிட்டது. நீங்கள் குலீனர்—உங்களுக்கு நான் மரியாதை செய்யக் கடமைப்பட்டிருக்கிறேன். நீங்கள் என் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள். என் மரியாதைக்கு அடையாளமாக, அதன் ரூபமாகக் கொடுப்பதைத் தாங்கள் அங்கீகரித்தருளவேண்டும்."

"பெண்ணிற்கு மேற்போன தனம் எது? நீங்கள் அதை எனக்குக் கொடுத்தீர்கள். வேறென்ன கொடுக்க இருக்கிறது?"

ஏ, விரஜேசுவரா! என்ன சொன்னாய்? ஸ்திரீக்கு மிஞ்சின தனம் இல்லையென்றா? பின் ஏன் தகப்பனாருடன் சேர்ந்துகொண்டு பிரபுல்லாவை வெருட்டி அடித்தாய்?

கட்டிலிற்குப் பக்கத்தில் பணம் நிறைந்த குடம் ஒன்று இருந்தது. தேவி அதை யெடுத்து விரஜனின் அருகில் வைத்து, "இதை அங்கீகரிக்கவேண்டும்" என்றாள்.

"நான் இதை ஏற்றுக் கொள்வதற்கு முன் ஒரு வார்த்தை—"

அந்த வார்த்தை எதுவென்று தேவிக்குத் தெரியும். அவள் குறுக்கிட்டு, "இது கொள்ளையடித்தது அல்லவென்று சத்தியம் செய்து சொல்லுகிறேன். என்னைப்பற்றி கொஞ்சம் சமாசாரம் இருக்கிறது. கேட்கவேண்டும். ஆகையால் இதை அங்கீகரிப்பதில் ஒருவிதமான சம்சயமும் வேண்டாம்" என்றாள்.

விரஜன் சம்மதித்தான். குடம் ரொம்ப கனமாக இருந்தது. விரஜனால் லேசாகத் தூக்க முடியவில்லை.

"இதில் என்ன?" என்று கேட்டான்.

கேட்டுவிட்டு குடத்திற்குள் கையை விட்டு நாணயங்களை எடுத்துப் பார்த்தான். மோகராக்கள்! குடம் நிறைய மோகராக்கள்!

"இதை நான் எங்கே காப்பாற்றி வைக்கட்டும்?"

"காப்பாற்றி வைப்பானேன்? அது பூராவும் உங்களுக்குத்தான் கொடுத்தேன்."

"என்ன?"

"ஏன்?"

"எவ்வளவு மோகராக்கள் இருக்கின்றன?"

"ஐம்பதினாயிரம் ரூபாய்க்கு மேலாயிற்றே! ஸாகரா உங்களிடம் ஏதாவது பணவிஷயத்தைச் சொன்னாளா?"

"உங்களுக்கு இப்பொழுது ஐம்பதினாயிரம் ரூபாய் உபயோகமாக இருக்கும் என்று ஸாகரா மூலம் கேள்விப் பட்டேன்."

"அதற்காகத்தான் கொடுத்தீர்களா?"

"பணம் என்னுடையதல்ல; எனக்குத் தானம் செய்யவும் அதிகாரம் இல்லை; அது ஈசுவரனுடையது."

"எனக்கு இந்தப் பணம் ரொம்ப உபயோகந்தான். திருடிக் கொள்ளையடித்தாகிலும் இந்தப் பணத்தை நான் சேகரிப்பதில் பாபமில்லை என்பது என் எண்ணம்; ஏனென்றால் இந்தப் பணம் இல்லாவிட்டால் என் தகப்பனார் ஜாதியை விட்டு நீக்கப்படுவார். நான் இந்தப் பணத்தை ஏற்றுக் கொள்ளுகிறேன்; ஆனால் எப்பொழுது திருப்பிக் கொடுக்க வேண்டும்?"

"அது கடவுள் பணம்; ஆகையால் நான் இறந்த பிறகு அசலையும் வட்டியையும் கடவுள் பணியில் செலவு செய்து விடுங்கள்."

"அதுவும் நானா செய்யவேண்டும்? நான் மறந்துபோய் விடுவேன். நான் இதை ஏற்றுக்கொள்ளமாட்டேன்."

"உங்களுக்கு எப்படி இஷ்டமோ அந்தப்படி திருப்பிக் கொடுங்கள்."

"பணம் கைக்கு வந்ததும், நான் உங்களுக்கே திருப்பி அனுப்பிவிடுகிறேன்."

"உங்கள் ஆட்கள் யாரும் என் அருகில் வரக் கூடாது; வரவும் முடியாது."

"நானே நேரில் பணத்தைக்கொண்டு வருகிறேன்."

"எங்கே கொண்டுவருவீர்கள்? நான் ஓர் இடத்தில் ஸ்திரமாக இருக்கமாட்டேனே?"

"எந்த இடத்தைச் சொல்லுகிறீர்களோ அங்கே கொண்டு வந்து தருகிறேன்."

"நீங்கள் திருப்பிக் கொடுக்கும் நாளை ஸ்திரமாகச் சொல்லுங்கள், நான் இருக்கும் இடத்தை ஸ்திரமாகச் சொல்லுகிறேன்."

"மாசி பங்குனியில் நான் ரூபாய் சேகரித்து விடுவேன். ஆனால் ஒரு நிச்சயமாகச் சொல்லுவது தேவலை; வைகாசி மாதம் பணம் தந்துவிடுகிறேன்."

"அப்படியானால் வைகாசிமாதம் சுக்கில பக்ஷத்து சப்தமியன்று இதே இடத்திற்குப் பணம் கொண்டுவாருங்கள். அன்று இரவு சந்திராஸ்தமனம் வரையில் நான் இங்கு இருப்பேன்; அதற்குப் பிறகு வந்தால் என்னைப் பார்க்க முடியாது."

விரஜேசுவரன் சரியென்று ஒப்புக் கொண்டான். உடனே மோகராக் குடத்தைப் படகில் கொண்டுபோய் வைக்கும்படி ராணி வேலைக்காரர்களுக்கு உத்தரவிட்டாள். அவர்கள் அப்படியே செய்தார்கள். விரஜனும் தேவிக்கு ஆசீர்வாதம் செய்துவிட்டுப் புறப்படலானான். அப்பொழுது தேவி அவனைத் தடுத்து, "இன்னும் ஒரு வார்த்தை பாக்கி இருக்கிறது. இதைக் கடனாகக் கொடுத்தேன்; வேறு சரியான மரியாதை செய்யவில்லையே உங்களுக்கு?" என்றாள்.

"குடந்தான் பெரிய மரியாதை யாயிற்றே!" என்றான் விரஜன்.

"அது உங்களுக்குத் தகுந்த மரியாதை இல்லை. என்னால் இயன்ற மரியாதை—இதை வைத்துக்கொள்ளுங்கள்."

இவ்வாறு சொல்லிய வண்ணம் தேவி, தன் கை விரலிலிருந்து ஒரு மோதிரத்தைக் கழற்றி எடுத்தாள். அதைப் பெற்றுக்கொள்வதற்காக விரஜன் சந்தோஷத்துடன் கையை நீட்டினான். தேவி மோதிரத்தை அவன் கையில் கொடுக்கவில்லை. கையைப் பிடித்துக்கொண்டாள்—தானே மோதிரத்தைப் போட!

விரஜன் ஜிதேந்திரியன். ஆனால் அவன் அப்பொழுது பெருத்த கலவரம் அடைந்தான். புலன்களை வென்றவன்தான் —அவனுக்கு ஒன்றுமே தெரியவில்லை அப்பொழுது. உடல் நடுங்கலாயிற்று—உள்ளே அமிருத வெள்ளம் ஊற்றெடுத்தது போல இருந்தது. அவனால் கையைக்கூட இழுத்துக்கொள்ள முடியவில்லை. சிருஷ்டியில் பாருங்கள், சில சமயங்களில் அவன் அவன் செய்யவேண்டிய காரியத்தைக்கூட அவன் அவன் மறந்துவிடுகிறான்.

அவன் இப்படிக் கலவரப்பட்டுக்கொண் டிருக்கும் பொழுது கொஞ்சம் கொஞ்சமாக மெள்ள தேவி மோதிரத்தை அவன் விரலில் போட்டாள். அதே சமயத்தில் இரண்டு சூடான கண்ணீர்த் துளிகள் அவன் கையில் விழுந்தன.

விரஜனுக்குத் தூக்கி வாரிப் போட்டு விட்டது; பார்த்தான். தேவியின் கண்களிலிருந்து ஜலம் பெருகிக்கொண் டிருந்தது. எந்த தினுசில் என்ன நடந்தது என்று அவனுக்கு ஒன்றும் விளங்கவில்லை. மனம் ஒரே கொந்தளிப்பாக இருந்தது. அப்பொழுது ஒரு முகம் அவன் நினைவிற்கு வந்தது. ஆ! அந்த முகம் தான்! அதிலிருந்து அந்த இரவு இப்படித் தான் கண்ணீர் பெருகிற்று. அதுதான், அதுதான்! விரஜன் என்ன செய்கிறோம் என்று அறியாமல் தேவியின் தோளில் கை வைத்து முகத்தைத் தூக்கிப் பார்த்தான். அதே மாதிரி! பிரபுல்லாவின் முகமேதான்! பரவசனாகி, மெய்ம்மறந்து, கண்ணீர் வழிந்த அந்த இதழ்களில்—அடேடே விரஜா!

பிறகுதான் பிரக்ஞை வந்தது. "என்ன காரியம் செய்து விட்டேன்! இவள் பிரபுல்லாவா? அவள் இறந்துபோய் வருஷங்கள் பத்தாகி விட்டனவே!"

மேல்மூச்சு வாங்க விரஜன் அறையை விட்டு வெளியே ஓடினான். ஒரே ஓட்டமாக படகிற்குப் போய்ச் சேர்ந்தான். ஸாகராவைக்கூட கூப்பிடவில்லை.

அவள், "பிடி! பிடி! ஆள் ஓடுகிறது!" என்று சொல்லிக் கொண்டு பின்னால் போய் படகில் ஏறிக்கொண்டாள்: படகு கிளம்பிவிட்டது.

நிசி வந்து பார்த்தபொழுது, ராணி பூமியில் விழுந்து கிடந்தாள், அழுதுகொண் டிருந்தாள். நிசி அவளை எழுப்பி உட்காரவைத்தாள்—கண்களைத் துடைத்து சமாதானப் படுத்தினாள்.

"இதுதானா அம்மா உன் நிஷ்காம தர்மம்? இதுதானா சன்னியாஸம்? பகவத் வாக்கியம் எங்கே போச்சு?"

தேவி வாயை மூடிக்கொண்டிருந்தாள்.

"விரஜனல்ல புருஷன். வைகுண்டேசுவரன்."

"நீ யமபுரம் போ!"

"அதில் என்ன ஆபத்து? நீ சன்னியாசத்தை விட்டு விட்டு வீட்டுக்குப் போ!"

"இனிமேல் நான் இங்கே வரவில்லை. படகை விடச் சொல்!"

நாலு பாய்மரம் போட்ட படகு பக்ஷிபோல சிறகு விரித்துக் கிளம்பிற்று.

## ஒன்பதாம் அத்தியாயம்

## விரஜனும் ஸாகராவும்

விரஜேசுவரன் தன் படகிற்கு வந்த பிறகு ஸ்திமித மடைந்து உட்கார்ந்தான். ஸாகராவுடன் பேசவில்லை. தேவி யின் ஓடம் பாய் மரம் ஏற்றி பக்ஷிபோலப் பறந்து செல் வதைப் பார்த்தான்.

"அது எங்கே போகிறது?" என்று ஸாகராவைக் கேட் டான்.

"தேவியைத் தவிர வேறு யாருக்கும் அது தெரியாது. அதைப்பற்றி யெல்லாம் தேவி வேறு யாரிடமும் சொல்லுவ தில்லை."

"தேவி யார்?"

"தேவி, தேவி!"

"உனக்கு என்ன ஆகவேண்டும்?"

"சகோதரி!"

"எந்த மாதிரி சகோதரி?"

"சொந்தம்."

விரஜன் மறுபடியும் மௌனமானான்.

படகோட்டிகளைக் கூப்பிட்டு, "நீங்கள் அந்த ஓடத்தின் அருகில் போக முடியுமா?" என்று கேட்டான்.

"முடியுமா? அது நக்ஷத்திரம்போலல்லவா, பாய்ந்து போகிறது!" என்றார்கள் அவர்கள்.

விரஜன் மறுபடியும் மௌனமானான். ஸாகரா தூங்கிப் போய்விட்டாள்.

விடிந்தது, விரஜேசுவரன் படகை ஓட்டச் சொன்னான்.

ஸாகரா எழுந்திருந்து வந்து அவன் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டாள்.

"தேவி எதற்காக கொள்ளைக்காரியாக இருக்கிறாள்?" என்று விரஜன் ஸாகராவைக் கேட்டான்.

"உங்களுக்கு எப்படித் தெரியும்?"

"அதற்கு தகுந்த சின்னங்கள் எல்லாம் இருக்கின்றன. அப்படிச் செய்ய அவளுக்கு சக்தியும் இருக்கிறது; கொள்ளையடிக்கவில்லை என்றால் நம்ப முடியவில்லை."

"ஏன் நம்பிக்கையில்லை?"

"யார் கண்டார்கள்? கொள்ளை யடிக்கவில்லை யென்றால் இவ்வளவு பணம் ஏது?"

"யார் சொல்லக்கூடும்? தேவதையின் வரத்தால் தேவி இவ்வளவு சொத்தையும் பெற்றிருக்கக் கூடும். யார் கண்டார்கள், புதையல் கிடைத்திருக்கலாம்! யார் கண்டார்கள்? தேவிக்கு தங்கம் செய்யத் தெரியுமோ என்னவோ!"

"தேவி என்ன சொன்னாள்?"

"என்னிடம் ஒரு தம்பிடிகூடக் கிடையாது, எல்லாம் பிறருடையது" என்றாள்.

"பிறர் சொத்து இவளுக்கு எங்கே கிடைத்தது?"

"அது யார் கண்டார்கள்?"

"பிறர் சொத்தென்றால் இவள் அமீராக நடந்துகொண்டால் அவர்கள் ஏனென்று கேட்கமாட்டார்களா?"

"தேவி ஒருபோதும் அமீராக நடந்து கொள்வதே இல்லை, தெரியுமா? அல்ப ஆகாரந்தான் செய்கிறாள்; பூமியில்தான் படுத்துக்கொள்கிறாள். நீங்கள் நேற்று பார்த்ததெல்லாம் நமக்காக வாங்கினது. உங்கள் கையில் என்ன?"

ஸாகரா, விரஜன் கைவிரலில் இருந்த புது மோதிரத்தைப் பார்த்தாள்.

"நேற்று தேவியிடம் சாப்பிட்டேனல்லவா? அதற்காக மரியாதையாக இதைக் கொடுத்தாள்" என்றான் விரஜன்.

"எங்கே காட்டுங்கள்!"

விரஜன் மோதிரத்தைக் கழற்றி ஸாகராவிடம் கொடுத்தான். அவள் அதைத் திருப்பித் திருப்பிப் பார்த்தாள்.

"இதில் தேவி சௌதுராணியின் பெயர் இருக்கிறது!"

"எங்கே?"

"உள்ளே, பாரசீகத்தில்!"

"எங்கே!" என்று பார்த்தவன், "ஓ, ஆ, இதென்ன! என் மோதிரமாச்சே! ஸாகரா! நிஜமாகச் சொல், உண்மையைச் சொல்—தேவி யார்?" என்று கத்தினான்.

"உங்களுக்குத் தெரிந்துகொள்ள முடியவில்லையென்றால் அது என் பிசகா? நான் ஒரு நிமிஷத்தில் சொல்வேனே?"

"யாரடி, யார்? தேவி யார் சொல்!"

"பிரபுல்லா!"

அவ்வளவுதான். அதற்குப் பிறகு விரஜன் ஒரு வார்த்தை கூட பேச வில்லை. ஸாகரா அவனைக் கவனித்தாள். முதலில் உடலில் முள் தைத்ததுபோல இருந்தான். பிறகு சொல்ல இயலாத ஒரு சந்தோஷத்தின் சின்னம்—பொங்கிய சுகத்தின் அலை, அவன் சரீரத்தில் தென்பட்டது. முகம் ஒளி வீசிற்று, கண்கள் பிரகாசமாயின; கண்ணீர் ததும்பியிருந்தது. திடீரென்று அது மாறிற்று. கோரமான வேதனை வந்து காந்தியை அடக்கிவிட்டது. விரஜன் பேச்சற்று, சொரணையற்று இருந்தான். மெதுவாக ஸாகராவின் முகத்தைப் பார்த்தான். சிரமம்மேலிட்டு ஸாகராவின் மடியில் தலை வைத்துக்கொண்டு படுத்துக்கொண்டான். ஸாகரா கவலையுடன் என்னென்னவோ கேள்விகளெல்லாங் கேட்டாள். ஒன்றுக்கும் பதிலில்லை. ஒரு தடவை விரஜன், "பிரபுல்லா கொள்ளைக்காரி! சீ!" என்றான்.

## பத்தாம் அத்தியாயம்

## மனமாற்றம்

வீரஜேசுவரனையும் ஸாகராவையும் அனுப்பிவிட்டு தேவி சௌதராணி—ஆமாம்! எங்கே போனாள் தேவி? அவ்வளவு ஆடை ஆபரணங்கள், தங்கம், வைரம், முத்து—எல்லாம் எங்கே போயிற்று? தேவி எல்லாவற்றையும் துறந்துவிட்டாள். திடீரென்று எல்லாம் அந்தர்த்தானம் ஆகிவிட்டன. தேவி ஒரு சாதாரண உடைதான் உடுத்திருந்தாள். கையில் வெறும் கங்கணங்கள்தாம் இருந்தன. படகில் ஒரு பக்கம் கீழே படுத்திருந்தாள்; தூக்கம் கொள்ளவில்லை. அவளுக்கு ஒன்றும் ஓடவில்லை.

ஓடம் அதிகாலையில் தான் சொன்ன இடத்திற்கு வந்து சேர்ந்து விட்டதைப்பார்த்து தேவி நதியில் இறங்கி ஸ்நானம் செய்தாள். ஸ்நானம் செய்துவிட்டு ஈரத்துணியுடன் இருந்தாள். ஒரு முரட்டுத் துணி ரவிக்கை; நெற்றியிலும் உடம்பிலும் கங்கை மண்ணை எடுத்து இட்டுக்கொண்டாள். நனைந்த கூந்தல் கலைந்து விழுந்திருந்தது. அப்பொழுது தேவிக்கு இருந்த சௌந்தரியம், முதல் நாள் இரவு ஆடை ஆபரணங்கள் அணிந்து வைரம் முத்துகளுடன் ஜொலித்தபோது கூட இல்லை. முதல் நாள் ரத்னாபரணங்களுடன் ராணிபோல விளங்கினாள். அன்று கங்கா மிருத்திகையுடன் ஈசுவரி போலவே விளங்கினாள். அவளுக்கு வைரத்தைக் காட்டிலும் அந்த மண் அதிக லாவண்ணியம் ஏற்றிற்று.

தேவி அந்த இணையற்ற கோலத்துடன் துணைக்கு ஒரே ஒரு ஸ்திரீயை மட்டும் அழைத்துக்கொண்டு கரையோரமாகச் சென்றாள். ஓரிடத்திலும் நிற்கவில்லை. அப்படி வெகு தூரம் சென்று ஒரு காட்டிற்குள் நுழைந்தாள்.

அதற்குள்ளும் வெகு தூரம் சென்றாள். ஒரு மரத் தடியை அடைந்து வேலைக்காரியைப் பார்த்து, "இவா, நீ இங்கேயே இரு! நான் போய் விட்டு சீக்கிரம் வந்துவிடுகிறேன். இந்தக் காட்டில் புலி கரடி பயம் அதிகம் கிடையாது; ஆகையால் நீ பயமற்று இரு" என்று சொல்லிவிட்டு தேவி அங்கிருந்து இன்னும் அதிகமாக நெருக்கம் கொண்ட காட்டின் உள்ளே பிரவேசித்தாள். அதன் நடுவில் ஒரு சுரங்கம். அதில் இறங்க படி வரிசை இருந்தது. இறங்கவேண்டிய இடத்தில் ஒரே இருட்டு. முன் காலத்தில் கோவிலாக இருந்ததாம். இப்பொழுது எங்கும் பாழடைந்திருந்தது. தேவி படி வழியே இறங்கிச் சென்றாள்.

பூமிக்கடியில் இருந்த அந்தக் கோவிலில் ஒரு சின்ன விளக்கை சிக்கிமுக்கிக்கல் கொண்டு ஏற்றினாள். அதன் வெளிச்சத்தில் ஒரு சிவலிங்கம் தென்பட்டது. ஒரு பிராமணர் அந்த லிங்கத்தின் முன் உட்கார்ந்து பூஜை செய்து கொண்டிருந்தார். தேவி சிவலிங்கத்திற்கு வந்தனம் செய்துவிட்டு பிராமணருக்குக் கொஞ்ச தூரத்தில் நின்றாள். பிராமணர் பூஜையை முடித்து ஆசமனம் செய்துவிட்டு தேவியுடன் பேச ஆரம்பித்தார்.

"அம்மா! நேற்றிரவு நீ என்ன செய்தாய்? நீ கொள்ளையடித்தாயா, இல்லையா?"

"உங்களுக்கு என்ன தோன்றுகிறது?"

"எப்படித் தெரியும்?"

பிராமணன் வேறு யாரும் இல்லை. நமக்கு முன்பே பரிசயமான பவானி பாடக்தான்!

"எப்படித் தெரியும் என்று சொல்லுகிறீர்கள் ?" என்று தேவி கேட்டாள். "உங்களுக்கு என்னைத் தெரியாதா ? பத்து வருஷங்களாக இந்த ஆட்களுடன் கூட சுற்றிக்கொண்டிருக் கிறேன். நடக்கும் கொள்ளைகளையெல்லாம் நான்தான் செய் கிறேன் என்று உலகம் எண்ணுகிறது. நான் செய்வது உங்களுக்குத் தெரியும். அப்படியிருந்தும் எனக்கென்ன தெரியும் என்கிறீர்கள் !"

"எதற்காகக் கோபிக்கிறாய் ? நான் எந்த அபிப்பிராயம் கொண்டு கொள்ளையடித்தேனோ அது துஷ்கிருத்தியம் என்று நான் எண்ணவில்லை ; நீயும் இதைக் கெடுதலான காரியம் என்று கருதவில்லை. இந்தப் பத்து வருஷங்களும்—"

"இந்த விஷயத்தில் என் மனது மாறிவிட்டது. நான் என் கதையை இவ்வளவு நாள் மறந்து இருந்தேன். இனி மேல் மறக்கமாட்டேன். பிறர் சொத்தை அபகரித்து வரு வது கெடுதல் இல்லை என்பது மகா பாதகமல்லவா ? இனி மேல் நான் உங்களுடன் யாதொரு சம்பந்தமும் வைத்துக் கொள்ள முடியாது."

"ஏன் ? உனக்கு நான் முன்பு சொன்னதைத் திரும்ப ஞாபகமூட்டவேண்டுமா? இந்தத் திரவியம் பூராவையும் நான் ஸ்வீகரித்துக்கொண்டு விட்டால் அப்பொழுது அது மகா பாதகமாகும். ஆனால் நான் பிறருக்கு உபகாரம் செய்யவே இந்தக் காரியத்தைச் செய்கிறேன். தர்மிஷ்டர்களையும், நல்ல வழிகளில் பணம் சம்பாதிக்கிறவர்களையும், தன நஷ்டத் தால் கஷ்டமடையக் கூடியவர்களையும் நான் ஏதாவது செய் கிறேனா ? யார் அக்கிரமமாகப் பிறர் சொத்தை அபகரிக்கிறார் களோ அவர்களைத்தானே நான் வழிமறித்துக் கொள்ளையிடு கிறேன். இதை அறிய உனக்குத் தெரியாதா ? தேசம் அராஜகமாக இருக்கிறது, தேசத்தில் நல்ல அரசாட்சி இல்லை, துஷ்டர்களை அடக்குவோர் இல்லை ; அதற்காகத்தான் நான்

உன்னை ராணியாக்கி அரசாட்சி ஏற்படுத்தினேன். உன் பெயரில் நான் துஷ்டர்களை அடக்கி நல்லவர்களுக்கு ஆதரவு அளித்தேன்; இது அதர்மமா?"

"ராஜா ராணியாக யார் இருந்தாலும் இது நடக்கக் கூடும். என் நாட்கள் ஆகிவிட்டன, எனக்கு இனிமேல் ராணியாக இருக்க இஷ்டமில்லை."

"வேறு யாரும் இதை நிர்வகிக்க முடியாது. உன் தன தானத்தில் எல்லோரும் உன்னிடம் கட்டுப்பட்டவர்கள்."

"என்னிடமிருக்கும் பணம் பூராவையும் உங்களுக்குக் கொடுத்து விடுகிறேன். நீங்கள் அதை நான் செலவிடுவது போலச் செலவிடலாம். நான் காசிக்குப்போய் காலம் கழிப்பதாகத் தீர்மானித்துவிட்டேன்."

"கேவலம் உன் பணத்தால் மட்டுந்தான் எல்லோரும் உன்னிடம் அடங்கியிருக்கிறார்கள் என்று எண்ணுகிறாயா? ரூபத்திலேயே நீ யதார்த்தமான ராணி—குணத்திலும் ராணி! பலர் உன்னை சாக்ஷாத் ஈசுவரி என்றே கருதியிருக்கிறார்கள். உண்மைதானே! நீ சன்னியாசினி; லக்ஷ்மியைப் போல பிறருக்கு நல்லதைச் செய்கிறாய்; தேவையுள்ளவர்களுக்கு தனதானம் செய்கிறாய்; இன்னும் ஈசுவரியைப்போல ரூபம் கொண்டிருக்கிறாய்! அதனால்தான் நீ இங்கே அரசாளுகிறாய்! வேறு யார் எங்களைக் கட்டிப் பிடிக்க முடியும்?"

"அதனால் லோகத்தில் எல்லோரும் என்னைக் கொள்ளைக்காரி என்கிறார்கள். அந்த அபக்கியாதியைவிட சாவது மேல்!"

"அபக்கியாதி என்ன? தர்மம் செய்கிறவர்களுக்கு கியாதி அபக்கியாதி என்ற நினைவு எதற்கு? அந்த எண்ணம் இருந்தால், கர்மா நிஷ்காம கர்மா ஆகுமா? அபக்கியாதிக்கு நீ பயந்தால் நீ சுய நினைவு கொண்டுவிட்டாய் என்றுதான்

அர்த்தம். புற நினைவு இல்லை உனக்கு! ஆத்ம விஸர்ஜனம் இல்லை!"

"தர்க்கத்தில் நான் உங்களை மிஞ்சமுடியாது. நீங்கள் மகாமகோபாத்தியாயர். • என் பெண் புத்திக்கு எட்டியதை நான் சொல்லுகிறேன். எனக்கு இந்த ராணி ஸ்தானத்தில் இருக்க இஷ்டமில்லை. எனக்கு இது உற்றது அல்ல என்று எனக்குத் தோன்றிவிட்டது."

"அப்படி இது நல்லது இல்லை என்று நினைக்கிறவள் நேற்று ரங்கராஜனை எதற்காகக் கொள்ளையடிக்க அனுப்பினாய்? அது எனக்குத் தெரியாதா?"

"தெரிந்திருந்தால் நீங்கள் அவசியம் இதையும் அறிந்திருக்க வேண்டும். அவன் கொள்ளையடிக்கப் போகவில்லை."

"அதென்ன? அது எனக்குத் தெரியாதே! நீ புதிதாகச் சொல்லுகிறாயே!"

"ஒரு மனுஷ்யரைப் பிடித்துக்கொண்டு வரப்போனான்."

"அது யார்?"

தேவியின் வாயில் அந்தப் பெயர் வந்து வந்து தயங்கிற்று, சொல்ல வாய்வரவில்லை. ஆனால் பவானி பாடக்கிடம் அவள் எதையும் ஒளிக்க இஷ்டப்படவில்லை. எனவே வேறு வழியில்லாமல், "அவர் பெயர் விரஜேசுவர ராய்!" என்றாள்.

"அவனை எனக்கு நன்றாகத் தெரியும். அவனால் உனக்கு என்ன ஆகவேண்டி யிருக்கிறது?" என்று கேட்டார் பவானி பாடக்.

"கொஞ்சம் வேலை யிருந்தது. அவருடைய தகப்பனார் கடன்காரர்கள் தொல்லையால் கைதி யாகிவிட்டார். கொஞ்சம் பணம் கொடுத்து பிராம்மணனை காப்பாற்ற முயன்றேன்."

"நீ செய்தது சரியல்ல; ஹரவல்லப ராய் கெட்ட மனுஷ்யன்; அவனுக்கு உதவிசெய்து நீ உன் ஜாதியைக் கெடுத்துக்

கொண்டாய்; அவன் ஜாதிப் பிரஷ்டமாவதே நல்ல தாயிற்றே!"

"என்?" என்று தேவி மயிர்க்கூச்செறியக் கேட்டாள்.

"அவனுடைய நாட்டுப் பெண் ஒருத்தி, பாவம்! அவளுக்கு விதவையான தாயாரைத் தவிர வேறு யாரும் திக்கு கிடையாது. அவளுக்கு ஒரு கெட்ட பெயர் கற்பித்து, ஹரவல்லபன் அந்தப் பெண்ணை வீட்டை விட்டுத் துரத்தி விட்டான். துக்கம் மேலிட்டு அந்தப் பெண்ணின் தாயார் இறந்துபோனாள்."

"அந்தப் பெண்?"

"பட்டினி கிடந்து செத்துப் போனாள் என்று கேள்வி."

"அதெல்லாம் எனக்கு எதற்கு? பிறருக்கு ஹிதம் செய்ய வேண்டியதுதானே நமது விரதம்? யார் சிரமப்படு கிறார்களோ அவர்களுக்கு உதவி செய்வோம்!"

"அதனால் ஒன்றும் கெடுதல் இல்லை; ஆனால் இப்பொழுது பலர் வறுமை வாய்ப்பட்டு விட்டார்கள். இஜாராதார்களின் கொடுமையால் பலர் தங்கள் ஸர்வஸ்வத்தையும் இழந்து விட்டார்கள். சீக்கிரம் தர்பாரைக் கூட்டி அவர்களைக் காப்பாற்ற வழி செய்."

"பின், வருகிற திங்கட்கிழமை இங்கே தர்பார் நடக்கும் என்று பிரகடனம் செய்துவிடுங்களேன்."

"இல்லை, இனிமேல் நீ இங்கே இருக்கக்கூடாது. நீ இங்கே இருக்கிறாய் என்று ஆங்கிலேயர் கண்டுகொண்டு விட்டார்கள். 500 சிப்பாய்களுடன் உன்னைப் பிடிக்க வருகிறார்கள். ஆகையால் இங்கே தர்பார் கூடக்கூடாது. வைகுண்டபுரத்துக் காட்டில் நடக்கும் என்று பிரகடனம் செய்கிறேன். திங்கட்கிழமையே இருக்கட்டும். அந்தக் காட்டிற்குள் வர சிப்பாய்களுக்கு தைரியம் கிடையாது. வந்தால் ஹதந்தான்.

வேண்டிய தொகையை எடுத்துக்கொண்டு இன்றே வைகுண்ட புரத்துக் காட்டிற்குப் போய்விடு.''

"போகிறேன், ஆனால் இனிமேல் நான் இந்தக் காரியத்தில் ஈடுபடமுடியுமா என்பது சந்தேகம். இதில் என் மனது இப்பொழுது ஓடவில்லை.''

இவ்வாறு சொல்லிவிட்டு தேவி எழுந்திருந்தாள். மறுபடி காட்டைவிட்டு வெளியேவந்து ஓடத்தை அடைந்தாள். ரங்கராஜனைக் கூப்பிட்டு ரகசியமாக, "வருகிற திங்கட்கிழமை வைகுண்டபுரத்துக் காட்டில் தர்பார் நடக்கும். இந்த நிமிஷம் ஓடத்தை விடு, அங்கே போகவேண்டும். தேவி தூர்க்கம் போய்க் கூட பணம் எடுத்துக்கொண்டு போக வேண்டும். கையில் அதிகப் பணம் இல்லை'' என்றாள்.

மறுவினாடி கப்பலின் பாய் மரங்கள் பிரிக்கப்பட்டன. "ராணிஜீகி ஜே!'' என்ற ஜயகோஷத்துடன் ஓடம் புறப்பட்டது. அது பெரிய சண்டைக் கப்பலைப்போல இருந்தது. ஏராளமான மனிதர்கள் அதைப் பின்தொடர்ந்து கரையின் மேல் ஓடி வந்து கொண்டிருந்தார்கள். அவர்கள் கையில் சிறு சிறு மூங்கில் தடிகள்தா னிருந்தன. ஆனால் ஓடத்தில் ஈட்டி, கத்தி, துப்பாக்கி, வெடி மருந்து முதலிய சாமான்கள் ஏராளமாய் இருந்தன. இவர்கள்தாம் தேவியின் சேனை. கப்பலில் சாமான்கள் எல்லாம் சரியா யிருக்கின்றனவா என்று ஒரு தடவை பார்த்துவிட்டு தேவி தானே சுயம்பாகம் செய்து கொள்ள சமையலறைக்குள் சென்றாள்.

தேவி! எப்படிப்பட்ட துறவு உன்னுடையது!

## பதினோராம் அத்தியாயம்

## தேவியின் தர்பார்

திங்கட்கிழமையன்று காலைச் சூரியனின் ஒளியில் அடர்ந்த காட்டின் நடுவில் தேவி சௌதுராணியின் தர்பார் நடந்தது. தேவையுள்ளவர்களுக்குப் பணம் கொடுப்பதுதான் அதன் முக்கியமான நோக்கம்.

அடர்ந்த காடு. மரநிழல்களில் ஜனங்கள் தங்கலாம். அங்கே சுமார் பதினாயிரம் ஜனங்கள் கூடியிருந்தார்கள். அவர்கள் நடுவில்தான் தேவியின் தர்பார். ஒரு பெரிய சாமியானா, மரத்துக்கு மரம் கட்டி அலங்கரிக்கப்பட்டிருந்தது. சந்தனப் பலகையால் செய்த ஒரு மேடை. அதன்மேல் ஒரு அழகான ரத்தின கம்பளம் விரித்திருந்தது; அதன்மேல் ஒரு சின்ன வெள்ளிச் சிம்மாசனம் இருந்தது; அதன் மேல் குடையும், சுற்றிலும் முத்து சரங்களும் இருந்தன.

தேவியின் அலங்காரம் ரொம்ப விசேஷமாக இருந்தது. முதல்தரமான புடைவையில், பூக்களின் நடுவில் வைரங்கள் பதிக்கப்பட்டிருந்தன. அவளுடைய அங்கங்களோ ரத்தின கசிதமாக இருந்தன. ஒவ்வோரிடத்தில் மத்தியில் ஜொலிக்கும் சிகப்பு அங்கம் பளிச்சென்று தென்பட்டது. கழுத்தில் இருந்த ஹாரத்தால் கழுத்தே தெரியவில்லை. தலையில் ரத்ன மயமான கிரீடம். சரக்காலத்து உத்ஸவத்தில் அலங்கரிக்கப்படும் ஈசுவரியைப்போல இருந்தாள் தேவி அன்று.

இரண்டு பக்கங்களிலும் நான்கு சர்வாபரண பூஷிதைகளான யுவதிகள் நின்றுகொண்டு தங்கப்பிடி போட்ட சாம

ரங்களை வீசிக்கொண்டிருந்தார்கள். பக்கத்திலும் எதிரிலும் கணக்கற்ற சோக்தாரிகள் வெகு ஆடம்பரமாகக் காவல்கொடுத்துக்கொண்டு நின்றார்கள். எல்லோரும் கையில் வெள்ளித்தடிகள் வைத்திருந்தார்கள். தலையில் அலங்காரமான சிகப்புப் பாகைகள் அணிந்திருந்தார்கள் : சிகப்புச் சட்டைகள், சிகப்புச் சராய்கள்.

தேவி சிம்மாசனத்தில் உட்கார்ந்திருந்தாள். அந்தப் பத்தாயிரம் ஜனங்களும் ஒரு தடவை "தேவி ராணி—கி ஜய்!" என்று கோஷம் செய்தார்கள். அதன் பிறகு பத்து இளைஞர்கள் முன்வந்து தேவிக்கு ஸ்துதி கீதம் பாடினார்கள். அதற்குப்பிறகு அந்தப் பதினாயிரம் ஜனங்களிடையே யிருந்து ஒவ்வொருவராக ஆட்களை ரங்கராஜன் தேவியின் சிம்மாசனத்திற்குக் கூட்டிக்கொண்டுபோய் விட்டான். அவர்கள் தேவியின் முன்வந்து பக்தியுடன் சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்தார்கள். வயது முதிர்ந்த பிராம்மணர்கள்கூட நமஸ்காரம் செய்தார்கள். ஏன் மாட்டார்கள்? அவர்கள் தான் தேவியை, உலகத்தை உத்தாரணம் செய்யவந்திருக்கும் சாக்ஷாத் ஈசுவரி என்று நம்பியிருந்தார்களே! அதனாலேதான் அவள் இருப்பிடத்தை யாரும் ஆங்கிலேயரிடம் சொல்லாமல் இருந்தார்கள்; அவர்களுடைய ஒற்றர்களுக்கு உதவிகூட செய்யாமல் இருந்தார்கள். எல்லோரிடமும் தேவி இனிமையாகப் பேசி அவர்கள் சொந்த கஷ்ட நஷ்டங்களைப்பற்றி விசாரித்தாள். விசாரித்து அவரவர்கள் கஷ்டத்திற்குத் தேவையான அளவில் பண உதவி செய்தாள். அருகே கஜானா உத்தியோகஸ்தர்கள் எல்லோரும் தயாராக இருந்தார்கள்.

இந்த மாதிரி காலைமுதல் மாலைவரை தேவி ஏழைகளுக்கு தானம் செய்துகொண்டிருந்தாள்; இரவுகூட ஆகிவிட்டது அதைச் செய்து முடிக்க. அது முடியும் வரையில் தேவி ஜல பானங்கூடச் செய்யவில்லை; தேவியின் கொள்கை முறை இது!

சில நாட்களுக்குள், தேவி சௌதுராணி வைகுண்ட புரத்துக் காட்டில் தர்பார் நடத்தின செய்தி வங்கபுரத்தில் குட் ல்யட் துரை காதிற்கு எட்டிற்று. தேவி கொள்ளைக் காரர்கள் கூட்டமொன்றைக் கூட்டினுள் என்று பிரஸ்தா பம் வந்தது. பல கொள்ளைகள் நடத்தி ஏராளமான பணத் தைக் கொண்டு வந்திருக்கிறுள் என்று வதந்தி கிளம்பிற்று. அதிலிருந்து அவள் பல கொள்ளைகள் செய்திருக்கிறுள் என்று துரை நிச்சயித்தார். தேவியிடம் பண உதவிபெற்று வந்து எல்லோரும் கம்மென்று இருந்தார்கள். பணம் ஏது என்று சொல்லுவார்களா ? பணம் கிடைத்த தகவல் பரவி ஞல் இஜாராதார்கள் வந்து பிடித்துக்கொள்ளுவார்களே என்ற பயம். எனவே, எங்கும் இந்தப் பிரஸ்தாபந்தான்— தேவி ராணி பெரிய திட்டமாக கொள்ளை யடித்துவந்தாள் என்று.

## பன்னிரண்டாம் அத்தியாயம்

## கலியாணப் பேச்சு

**வி**ரஜேசுவரன் தகப்பனரிடம் போய்ச் சேர்ந்ததும் அவரை யதோக்தமாக வணங்கி நின்றான்.

ஹரவல்லபர் பல விஷயங்களைப்பற்றிப் பேசிய பிறகு, "முக்கியமான காரியம் என்னவாயிற்று? பணம் ஏதாவது கிடைத்ததா?" என்று கேட்டார்.

தன் மாமனர் பணம் கொடுக்க முடியாது என்று சொன்னதை விரஜன் சொன்னன். ஹரவல்லபருக்குத் தலையில் இடி விழுந்தாற்போல் ஆய்விட்டது.

"ஐயோ! அப்படியானல் பணமே கிடைக்கவில்லையா?" என்று அலறினர்.

"என் மாமனர் பணம் கொடுக்கச் சாத்தியமில்லை என்று சொன்னர்; ஆனல் வேறு ஓர் இடத்தில் பணம் சம்பாதித்தேன்—"

"கிடைத்ததா! அதை உடனே எனக்குச் சொல்லக் கூடாதா? துர்க்கே! உன் கிருபை!" என்று ஹரவல்லபர் ஆத்திரமாகக் கூறினர்.

"பணத்தை எங்கிருந்து வாங்கினேனே அதை அந்த திக்கிலிருந்து பெற்றுக்கொள்வது சரியா என்பதுதான் எனக்குச் சந்தேகமாக இருக்கிறது."

"யார் கொடுத்தார்கள்?"

விரஜன் தலை குனிந்துகொண்டே, "அவள் பெயர் கூட மனதில் வரமாட்டேன் என்கிறது—பெண் ஒருத்தி கொள்ளைத்தொழில் செய்து கொண்டிருக்கிருள், அல்லவா?" என்முன்.

"யார்—தேவி சௌதுராணியா?" என்று ஹரவல்லபர் ஆச்சரியத்துடன் கேட்டார்.

"அவள் தான்."

"அவளிடம் போய் எப்படியடா பணம் வாங்கிஞய்?" என்று அவர் ஆச்சரியத்துடன் கேட்டார்.

"அதை ஒரு வகையாக வாங்கினேன்" என்முன் விரஜன்.

தகப்பஞரிடம் பொய் சொன்னல் பாதகமில்லை யென்று அவன் நீதி சாஸ்திரத்தில் படித்திருக்கிருன். ஹரவல்லபரும் விஷயத்தை அதிகமாகக் கிளற இஷ்டப்படவில்லை.

"ஆமாம், அவளிடம் போய் பணம் வாங்கிக்கொண்டு வந்திருக்கிருயே—அவள் நம் வீட்டை நாளைக்குக் கொள்ளையடித்துக் கொண்டுபோய் விட்டால் என்னடா செய்கிறது?" என்றுர் ஹரவல்லபர் சிறிது நேரம் கழித்து.

விரஜன் வாய்திறக்கவில்லை.

"பணத்தைத் திருப்பிக் கொடுக்க வாயிதா உண்டா?"

"வருகிற வைகாசி மாதம் சுக்லபக்ஷத்து ஸப்தமி இரவு வரை வாயிதா."

"அதுவரை அவள் கொள்ளையடிக்கப் போய்விடுவாள். யாரும் காணமுடியாது. பணத்தை எப்படி எங்கே அனுப்புகிறது?" என்று கேட்டார் ஹரவல்லபர்.

"அன்று இருட்டின பிறகு ஸந்தானபுரத்தில் காலஸாஜ் கட்டத்தில் அவள் ஓடம் நங்கூரம் பாய்ச்சி நிற்கும். அங்கே கொண்டுபோய் பணத்தை அவளிடம் சேர்க்கவேண்டும்."

"அப்படியானல் தவருமல் அன்றே அங்கே பணம் அனுப்பிவிட-வேண்டும்."

விரஜன் விடைபெற்றுக்கொண்டு வெளியே போய்விட்டான்.

ஹரவல்லபர் நடந்ததைப்பற்றி மெதுவாக யோசனை செய்ய ஆரம்பித்தார். கடைசியாக ஒரு முடிவிற்கு வந்தார்.

"ஆகட்டும்! அந்தப் பெண் என்னிடமிருந்து பணத்தைத் திரும்பி வாங்குகிறதைப் பார்க்கிறேன். அவளைச் சிப்பாய்கள் பிடித்துக்கொண்டு போய்விட்டால்?—விஷயம் லகுவாக முடிந்துவிடுகிறது, அவ்வளவுதானே? வைகாசி மாதம் சுக்ல பக்ஷத்து ஸப்தமி இரவா!—அன்று காப்டன் பல்டன் துரை ஓடத்தைச் சூழ்ந்துகொண்டால்? அதைச் செய்து முடிக்காவிட்டால் என் பெயர் ஹரவல்லபன் அல்ல! அவள் என்னிடம் அப்புறம் எப்படிப் பணம் வாங்குவாள்!"

ஹரவல்லபர் இந்த மாதிரி ஒரு புனிதமான தீர்மானத்திற்கு வந்தார். ஆனால் அதை யாரிடமும் வெளியிடவில்லை, விரஜனைக்கூட நம்பவில்லை அவர்.

ஸாகரா அத்தையம்மாளிடம் போய், "இதோ பாருங்கள், உங்கள் மருமகன் எங்கேயோ போய் ஒரு ராணியைக் கலியாணம் செய்துகொண்டு வந்திருக்கிறார்" என்றாள். இன்னும் அநேக தினுசாகச் சொன்னாள். ஆனால் அத்தையம்மாளுக்கு நம்பிக்கை ஏற்படவில்லை. உடனே ஸாகரா தான் இனிமேல் அவன் இலையில் சாப்பிடப் போவதில்லை என்றாள். அத்தையம்மாள் விரஜனுக்கு யாவற்றையும் சொன்னாள். அவன் "அதெற்கென்ன அத்தை, ராணி நல்ல குலம்—அப்பாவுக்குக் கூட சொந்தம்" என்றான்.

விரஜன் சொன்னது பொய்யென்று தெரிந்துகொண்டாள் அத்தை. ஸாகராவின் வற்புறுத்தலின் பேரில் அவள் அதை நயனதாராவுக்குச் சொன்னாள்; அவ்வளவுதான். அவள் பிரமாதக் கோபத்துடன் ஸாகராவிடம் வந்தாள். புருஷன் ஒரு வயதான பெண்ணைக் கலியாணம் செய்து

கொண்டுவிட்டான் என்று அவளிடமிருந்து கேட்டதும் அவள் கோபத்தால் மெய்ம்மறந்தாள். சில நாட்கள் விரஜன் அவள் இருக்கிற பக்கமே போகவில்லை. ஸாகராவின் அறை யிலேயே இருந்தான்.

ஸாகராவின் எண்ணம் நிறைவேறிற்று. ஆனால் நயனதாரா பெருத்த ரகளை செய்துவிட்டாள். மாமியா ரிடம் போய் முறையிட்டாள்.

"நீ சுத்த அசடாக இருக்கிறாயே! அப்படி எங்காவது நடக்குமா? உன்னை எல்லோரும் கேலி செய்கிறார்கள். நீயும் ஏமாறுகிறாய்" என்றாள் மாமியார்.

"நிஜமாகக் கலியாணம் செய்துகொண்டிருந்தால்?"

"நிஜமாயிருந்தால் பெண் இங்கே வரமாட்டாளோ? கிரகப்பிரவேசத்திற்கு ஏற்பாடு செய்யவேண்டாமோ?

அந்த சமயத்தில் அங்கே விரஜன் வந்து சேர்ந்தான். நயனா அவ்விடத்தை விட்டு ஓடிப்போக வேண்டியதாகி விட்டது.

"அம்மா, என்ன சொல்லுகிறாள் அவள்?" என்று விரஜன் தாயாரைக் கேட்டான்.

"ஒன்றுமில்லை, நீ இன்னொரு விவாகம் செய்துகொண்டால் பெண்ணுக்கு கிரகப்பிரவேசம் செய்ய ஏற்பாடு செய்ய வேண்டும் என்று சொல்லிக்கொண்டிருந்தேன்."

வேறு ஏதோ ஞாபகமாயிருந்ததால் தாயார் சொன்னதைக் காதில் போட்டுக்கொள்ளாமல் விரஜன் போய் விட்டான்.

சாயந்திரம் விரஜனின் தாயார் தன் புருஷனுக்கு சுச்ருஷை செய்துகொண்டே, "ஸாகரா சரியாக இங்கே இருக்கிறதில்லை என்று உங்களுக்குத் தெரியும். நயனாவோ நமது குழந்தைக்குச் சரியான அகமுடையாள் அல்ல. ஆகையால் ஏதாவதொரு நல்ல பெண்ணைப் பார்த்து பையனுக்குக்

கலியாணம் செய்து வைத்துவிட்டால் நமக்கு விசாரம் இல்லை" என்றாள்.

"பயலைக்கேட்டு அவன் மனத்தை அறிந்து சொல்லு. நான் சரியான பெண்ணைப் பார்க்கிறேன்" என்றார் ஹரவல்லப பாபு.

"சரி, இன்று கேட்டுப்பார்க்கிறேன்" என்றாள் அம்மாள்.

ஆனால் அந்த பாரம் அத்தையம்மாள் தலையில் விழுந்தது. அவள் பிரிவாற்றாமை கொண்ட பல ராஜபுத்திரர்கள் கதையெல்லாம் சொல்லி விரஜன் வாயைப் பிடுங்க முயன்றாள் ; ஒன்றும் நடக்கவில்லை. கடைசியாக நேராகவே கேட்டுவிட்டாள்.

"அப்பா அம்மா என்ன சொல்லுகிறார்களோ அதன்படி நடக்கிறேன்" என்று சொல்லிவிட்டான் விரஜன்.

## முதல் அத்தியாயம்

# ஹரவல்லபர் துரோகம்

வைகாசி மாதத்து சுக்ல பக்ஷ ஸப்தமி நெருங்கிற்று. ஆனால் தேவி ராணிக்குக் கொடுக்க வேண்டிய கடனைக் கொடுக்க ஒருவிதமான பிரயத்தினமும் நடக்கவில்லை. ஹர வல்லபருக்கு அப்பொழுது தொல்லைகள் அதிகம் கிடையாது. மனது வைத்தால் சிரமமின்றி அவர் தேவிக்குக் கொடுக்க வேண்டிய கடனைக் காலா காலத்தில் கொடுத்துத் தீர்த்துவிட லாம். ஆனால் அவர் அதைப்பற்றி கவலையே படவில்லை. அவர் அந்த விஷயத்தில் அப்படி சிரத்தையற்று இருப்பதைக்கண்டு விரஜேசுவரன் இரண்டு மூன்று தடவை அதைப்பற்றி அவரிடம் சொல்லிப் பேச்செடுத்தான். ஹரவல்லபர் அதற்கு ஓரிருவார்த்தைகளில் பதிலளித்து சும்மா இருந்துவிட்டார். இந்த மாதிரி வைகாசிமாதத்து சுக்லபக்ஷ ஸப்தமிகூட வந்து விட்டது — நாலைந்து நாள்தான் இருந்தது. விரஜேசுவரன் தகப்பனரிடம் பணத்தைப்பற்றி நெருக்கலானன்.

“நல்லதப்பா! ஒன்றும் கவலைப்படாதே; பணம் சேக ரிக்கப் புறப்படுகிறேன்” என்றார் ஹரவல்லபர் மகனிடம்.

சமையல்காரன், வேலைக்காரர்கள் சகிதம் ஹரவல்லபர் ஊரைவிட்டுக் கிளம்பினர்.

ஹரவல்லபர் பணம் சேகரிக்கச் சென்றதாகத்தான் சொன்னர். ஆனல் அவர் போன காரியம் வேறென்று. உடனே அவர் ரங்கபுரத்திற்குப் போய், கலெக்டர் துரையைப்

பேட்டி கண்டார். அப்பொழுதிருந்த கலெக்டர் நாட்டின் அமைதியைப் பாதுகாப்பதில் ஊக்கமுள்ளவன். ஹரவல்லபர் அவனிடம், "என்னுடன்கூட சில சிப்பாய்களை அனுப்புங்கள். தேவி சௌதுராணியை, நான் பிடித்துக் கொடுக்கிறேன். பிடித்துக் கொடுத்தால் எனக்கு என்ன பிரதிப் பிரயோஜனம் செய்வீர்கள்?" என்றார்.

இதைக்கேட்டு துரை அகமகிழ்ந்தான். தேவி சௌதுராணி கொள்ளைக்காரர்கள் தலைவி என்பது அவனுக்குத் தெரியும். அவளைப் பிடித்துவிட்டால், பிறகு எல்லோரும் வெகு சீக்கிரத்திலும் சுலபமாகவும் பிடிபட்டுப்போவார்கள் என்று அவன் தேவி ராணியைப் பிடிக்க என்னென்னவோ பிரயத்தின மெல்லாம் செய்து பார்த்தான், ஒன்றும் பிரயோஜனப்படவில்லை. எனவே, அப்பேர்ப்பட்ட கொடிய ராக்ஷஸியைப் பிடித்துக் கொடுப்பதாக ஹரவல்லபர் சொன்னதும், அவன் ரொம்ப சந்தோஷ மடைந்தான். உடனே வேண்டிய உதவி செய்வதாகவும் அவன் ஒப்புக்கொண்டான்.

"என்னுடன் 500 சிப்பாய்களை அனுப்ப உத்தரவாக வேணும்" என்றார் ஹரவல்லபர்.

கலெக்டர் அதே பிரகாரம் உத்தரவு செய்தான். லெப்டினன்ட் பிரனென் என்பவன் சிப்பாய்களுடன் ஹரவல்லபருடன்கூட தேவியைப் பிடிக்கப் புறப்பட்டான்.

தேவி அநேகமாக எப்பொழுதும் கரையோரமாகவே தானிருப்பாள் என்று ஹரவல்லபர் விரஜேசுவரன் சொல்லக் கேட்டிருக்கிறார். அதனால் அவள், நிச்சயம் தன் ஓடத்தில் தான் இருப்பாள் என்று அவர் எண்ணினார். அந்தப்படி தான் பிரனெனுக்கு 'உளவும்' சொல்லிக் கொடுத்தார்.

பிரனென் கொஞ்சம் சேனையுடன் அந்தப் பக்கமே மறைந்து மறைந்து சென்றான். சிலரைப் பிரித்து அனுப்பி ஓடத்தைச் சூழ்ந்துகொள்ளும்படி உத்தரவிட்டான். எங்கே

தேவியின் ஓடம் இருக்குமென்று ஹரவல்லபர் சொல்லி யிருந்தாரோ அதற்கு நேராகக் கரையில் கொஞ்சம் சேனையை மறைத்து நிறுத்தினான். தேவி ஓடத்திலிருந்து தப்பியோட, கரைப்பக்கம் வந்தால் பிடித்துக் கொள்ளலாமென்பது அவன் யோசனை.

சன்னியாசினியான ஒரு பெண்ணைப் பிடிப்பதற்கு இவ்வளவு பயங்கரமான ஏற்பாடுகள்! ஆனால் அவற்றைச் செய்தவர்கள் சும்மா மட்டும் செய்யவில்லை. தேவி சன்னி யாசினி அங்கே இருந்தாலும் இல்லாவிட்டாலும் அவளுடைய ஆக்ஞைக்குள்பட்ட ஆயிரம் யுத்த வீரர்கள் அங்கேயிருந்தார் கள் என்பது வெள்ளைக்காரர்களுக்குத் தெரியும். அவர்க ளுக்கு "வரகந்தாஜ்" என்று பெயர். அநேகம் தடவைகளில் கம்பெனியின் சிப்பாய்கள் இந்த வீரர்களிடம் தடியடிபட்டு ஓடியிருக்கிறார்கள் என்று பிரஸ்தாபம் உண்டு.

ஆமாம், தடி! அதன் காலம் போய்விட்டது. அது வெறும் மூங்கில்தான் இப்போது! ஆனால் எவ்வளவு வாள் களை அது இரண்டு துண்டாக்கியிருக்கிறது! எவ்வளவு கேடயங்கள், கவசங்கள், ஈட்டிகள் அது முறித்து உடைத்து எறிந்தது! அதன் அடியால் எவ்வளவு துப்பாக்கியும் தோட் டாவும் எதிரி கையிலிருந்து நழுவிக் கீழே விழுந்திருக்கின்றன! எவ்வளவு சிப்பாய்கள் கையொடிந்து ஓடியிருக்கிறார்கள்! அது தான் வங்காளத்தின் பெண்களைக் காத்தது; மானத்தைக் காத்தது, பணத்தைக் காத்தது, ஜனங்களைக் காத்தது, வீரத்துவத்தைக் காத்தது! அதன் அடிக்கு முஸல்மான் அஞ்சினான்; கொள்ளைக்காரர்கள் அதைக்கண்டு நடுங்கினார் கள். சிலம்பக்குச்சி அப்பேர்ப்பட்ட பீனல் கோடாக (குற்ற சிட்சை சட்டம்) இருந்தது. அதைப்போல் துஷ்டர்களை அடக்கிற்று; சில சமயம் அதைப்போல நல்லோர்களையும் அடக்கிற்று; அதைப்போல சில சமயம் ராமன் பிசகை கிருஷ்

ணன் தலையில் சுமத்தி அதை உடைத்தது. பீனல் கோடைக் காட்டிலும் இந்தத் தடிக்கு இருந்த அதிகாரம் என்னவென்றால் அதற்குமேல் அப்பீல் கிடையாது. அப்படியிருந்தது அதன் மகிமை! பீனல் கோட் வந்து அதை வெருட்டி யடித்து விட்டு அதன் இடத்தைப் பற்றிக்கொண்டு விட்டது. சமூகத்தைச் சிட்சிக்கும் பொறுப்பு தடியின் கையிலிருந்து பீனல் சட்டத்தின் கைக்குப் போய்விட்டது. அது இனிமேல் சிலம்பத் தடியல்ல; வெறும் மூங்கில்தான்! வெறும் குச்சியாகிவிட்டது. நாய் நரிக்குப் பயந்த பிரபுக்கள் கையில்தான் அது இனிமேல்! நாய் கத்தினால்கூட கையிலிருந்து அது நழுவி விழுந்து விடலாம். அதற்கு இனிமேல் மகிமை இல்லை. ஆதியில் அது ஒரு உத்தமமான மருந்தாக இருந்தது. மனது சம்பந்தப்பட்ட வியாதிகளுக்கு சிறந்த வைத்தியர்கள், "மூர்க்கஸ்ய லாட் யௌஷதம்" என்று சொல்லுவார்கள். இப்பொழுது தடியடிக்குப் பதிலாக முட்டாளுக்கு, "குழந்தை" "கண்ணு" என்ற செல்லப் பதங்கள்தான் ஔஷதமாக இருக்கின்றன. அதனால்தான் முட்டாள்தனம் என்ற வியாதி ஸ்வஸ்தங்கூட ஆகிறதில்லை.

## இரண்டாம் அத்தியாயம்

# வரவேற்ற ஆபத்து

அந்த சிலம்பக் கம்பிற்கு பயந்துதான் இவ்வளவு சிப்பாய்கள் சேர்க்கை, சேகரம்; ஆனால் அவர்களிடம் ஒரு கம்புகூடக் கிடையாது; ஒரு சிலம்பக்காரன்கூடக் கிடையாது. விரஜேசுவரனைப் பிடித்துக் கைதியாக்கிக்கொண்டு வந்த அதே இடத்தில்தான் தேவி இருந்தாள்.

மாலை மங்கிவிட்டது. ஓடம் அங்கே இருந்தது. ஆனால் எல்லாம் ஏற்பாடாகவே இல்லை. அந்த ஐம்பது பேர் வீரர்கள் அங்கே இல்லை. ஓடத்திலும் ஒருவனாவது ஆண் பிள்ளை இல்லை. வேலைக்காரர்கள், ரங்கராஜன்—ஒருவரும் இல்லை. ஆனால் ஓடத்தின் கொடிமரம் நிறுத்தப்பட்டிருந்தது. அதில் நாலு கொடிகள் கட்டப்பட்டிருந்தன. ஆனால் காற்றில்லாததால் கொடி துவண்டு விழுந்திருந்தது. ஓடத்திலிருந்து குப்பைகூட அகற்றப்படாமல் இருந்தது. இரண்டு கயிறுகள் கரையிலிருந்த முளைகளில் கட்டப்பட்டிருந்தன.

தேவி எப்பொழுதுமுள்ள ரத்னாபரணங்கள் அணிந்தும் விலையற்ற ஆடை அணிந்தும் இருக்கவில்லை. ஆனால் அப்பொழுதும் அவள் ஒருவிதமான சோபைகொண்டிருந்தாள். நெற்றி, கழுத்து, கைகள், மார்பு—அங்கங்களிலெல்லாம் நல்ல வாசனைச் சந்தனம் பூசிக்கொண்டிருந்தாள். நெற்றியில் ஒரு

பொட்டு. தலையில் ஒரு நறுமலர் மாலை சூடியிருந்தாள். அதனால் அவளுடைய முகம் மிகுந்த சோபை கொண்டிருந்தது. வேறொரு அலங்காரமும் இல்லை.

அன்று தேவி மேல்தட்டில் தனியாக இருக்கவில்லை; கூட இரண்டு பெண்கள் இருந்தார்கள். ஒருத்தி நிசி, மற்றொருத்தி திவா. மூவரும் என்ன பேசிக்கொண்டிருந்தார்கள்?

திவா சொன்னாள்—அவள் படிக்காதவள் என்பது ஞாபக மிருக்கவேண்டும்.

"பரமேசுவரன் நேரில் பிரத்தியக்ஷமாவாரோ?"

"இல்லை, பிரத்தியக்ஷமாக மாட்டார். அதைப்பற்றி நான் சொல்லவில்லை. நான் அவரைக் காணும் முறைகளைப் பற்றி சொல்லிக்கொண்டிருந்தேன். அவை ஆறு விதம்.

"பிரத்தயக்ஷமாவது என்று நீ சொன்னாயே அது கண் பார்க்கும் பிரத்தியக்ஷம். என் குரலை நீ கேட்கிறாயல்லவா? என் குரல் உன் காதிற்குப் பிரத்தியக்ஷம். என் கையிலிருக்கும் பூவின் வாசனை உன் மூக்குக்கு வரவில்லையா?"

"வருகிறது."

"அது உன் நுகர்ச்சிக்குப் பிரத்தியக்ஷம். நான் உன் கழுத்தில் ஒரு அடி அடித்தால் அதிலிருந்து உனக்கு என் கை பிரத்தியக்ஷமாகிறது. அது துவக் பிரத்தியக்ஷம். இன்னும் எப்பொழுதாவது நிசி உன் தலையைக் கொஞ்சம் தின்றுவிட்டால் அதுமுதல் உன் மூளைக்கு அவள் நாக்கு பிரத்தியக்ஷமாகி விடுகிறது.

"மந்த புத்திகளுக்கு பிரத்தியக்ஷமென்பது தெரியாது. ஆனால் பரமேசுவரனைப் பார்க்க முடியாது, கேட்கவும் முடியாது, ருசிக்கவும் முடியாது, நுகரவும் முடியாது, தொடவும் முடியாது."

"பின் அவரைப் பிரதக்ஷியக்ஷமாக அடைவது எப்படி?" என்று கேட்டாள் திவா.

"நான் சொன்னவை ஐந்து விதமான பிரத்தியக்ஷ ரகங்கள். ஆறுவகை உண்டல்லவா? சக்ஷு (பார்வை) கரணம் (காது) நாசிகா (மூக்கு) ரஸனு (நாக்கு) துவக் (ஸ்பரிசம்) இவைபோக, ஞானேந்திரிய மென்று ஆருவது இந்திரியம் ஒன்று இருக்கிறது. தெரியுமா?" என்ருள் தேவி.

"அதென்ன, பல்லா?"

"சீ போ! வேணுமானல் அந்த உன் இந்திரியத்தை உடைத்துக் கையில் கொடுக்கிறேன்" என்ருள் நிசி.

தேவி சிரித்தாள்! சக்ஷு முதலிய ஐந்தும் ஞானேந்திரியங்கள், கை கால் முதலிய ஐந்தும் கர்மேந்திரியங்கள். இந்த இரண்டு வகை இந்திரியங்களுக்கும் அதிபதியான மனஸை இரண்டு விதமாகச் சொல்லலாம்; மனது ஞானேந்திரியமுந்தான், கர்மேந்திரியமுந்தான். மனது ஞானேந்திரியமென்றதால் அதன் மூலமாகப் பிரத்யக்ஷம் உண்டு. அது மானஸ பிரத்தியக்ஷம். ஈசுவரன் மானஸ பிரத்தியக்ஷ விஷயம்" என்று கூறினுள்.

"ईश्वरासिद्धेः प्रमाणाभावात्" என்ருள் நிசி.

ஸாங்கிய பிரவசன சூத்திரத்தையும் பாஷ்யத்தையும் படித்தவர்களுக்கு நிசியின் சூத்திர வார்த்தையின் அர்த்தம் புரியும். அவள் தேவியுடன் ஒரு விதத்தில் கூடப்படித்தவள்.

"सूत्रकारस्योभयेन्द्रियशून्यत्वात्—न तु प्रमाणाभावात्"

என்று தேவி பதில் சொன்னுள்.

"உன் பாவாத், மாவாத்தை ஒருவரியில் சொல்லு— மனத்திற்கு வெளியே நான் பரமேசுவரனை ஒருக்காலும் பார்க்க முடியாது."

"திரும்பவும் பார்! சாக்ஷுஷ பிரத்தியக்ஷமானதைத் தான் பார்க்கமுடியும். வேருென்றையும் பார்க்க முடியாது. மானஸப் பிரத்தியக்ஷத்தைப் பார்க்கவே முடியாது. சாக்ஷுஷ

(கண்) பிரத்தியக்ஷத்தில் விஷயம்—உருவம்—பஹிர் (வெளி) விஷயம்; மானஸ பிரத்தியக்ஷத்தின் விஷயம் அந்தர் (உள்) விஷயம். மனத்தின் மூலமாக ஈசுவரனை பிரத்தியக்ஷமாக்கிக் கொள்ள முடியும். ஈசுவரனைப் பார்க்க முடியாது.''

" ஆனால் நான் ஈசுவரனை மனத்திற்கு வெளியே எந்த வகையிலும் பிரத்தியக்ஷ மாக்கிக்கொள்ள முடியாதே?''

" மனிதர்களின் பிரத்தியக்ஷ சக்தி ஸ்வபாவத்திலேயே கொஞ்சம்; உதவியின்றி எல்லாவற்றையும் நன்றாகப் பிரத்தியக்ஷப் படுத்திக்கொள்ள முடியாது" என்றாள் தேவி.

" ஆமாம், அந்த சகாயம் எப்படிப்பட்டதா யிருக்கவேண்டுமோ?" என்று கேட்டாள் திவா.

" இப்பொழுது இந்த நதி, ஜலம், மரம், நக்ஷத்திரம் — எல்லாவற்றையும் உதவியில்லாமலேயே பார்க்க முடிகிறதே!"

" எல்லாவற்றையும் எங்கே பார்க்கிறாய்? இப்பொழுது ஒரு உதாரணம் கொடுக்கிறேன்" என்று சொல்லி தேவி சிரித்தாள்.

சிரிப்பின் மாதிரியைக் கவனித்துவிட்டு நிசி " என்ன?" என்று கேட்டாள்.

ஆங்கிலேயர்களுடைய சிப்பாய்கள் இன்று நம்மைப் பிடிக்க வந்திருக்கிறார்களே, தெரியுமா உனக்கு?" என்று தேவி கேட்டாள்.

" அது தெரியும்" என்று திவா பெருமூச்சு விட்டுக் கொண்டு சொன்னாள்.

" சிப்பாய்கள் பிரத்தியக்ஷமாகத் தெரிகிறார்களா?"

" இல்லை, தெரியவில்லை, வந்தால் தெரியும்."

" நான் சொல்லுகிறேன்; அவர்கள் வந்தாய்விட்டது. ஆனால் உதவியில்லாமல் அவர்களைப் பார்க்கமுடியாது, இந்தா, இந்த உதவியைப்பெற்றுக்கொள்" என்று சொல்லிக்கொண்டு, தேவி திவாவின் கையில் தூரதிருஷ்டிக் கண்ணாடியைக்

கொடுத்தாள். எந்தத் திக்கில் பார்க்க வேண்டுமோ அந்த திக்கையும் சுட்டிக் காட்டினாள். திவா பார்த்தாள்.

"என்ன தெரிகிறது?" என்று தேவி கேட்டாள்.

"ஒரு படகு தெரிகிறது, அதில் அநேகம் ஆட்கள் இருக்கிறார்கள், தெரிகிறது."

"எவ்வளவு ஆட்கள் இருக்கிறார்கள், மற்றொரு தடவை பார்!" என்றாள் தேவி.

இந்த மாதிரி தேவி ஐந்து படகுகள் பல இடங்களில் இருப்பதை திவாவிற்குக் காண்பித்தாள். நிசியும் பார்த்தாள்.

"படகுகள் கரையோரமாகக் கட்டப்பட்டிருக்கின்றன; தெரிகிறது. நம்மைப் பிடிக்க வந்திருக்கிறார்கள் என்றால் நம்மிடம் வராமல் அங்கேயே ஏன் படகுகள் கரையோரம் இருக்கின்றன?" என்று நிசி கேட்டாள்.

"நிலப்பாதை வழியாக வரும் சிப்பாய்கள் பூராவும் இன்னும் வந்துசேரவில்லை என்று நினைக்கிறேன். படகிலிருக்கும் சிப்பாய்கள் அவர்களை எதிர்பார்த்துக் காத்துக்கொண்டிருக்கிறார்கள். கரைப்பக்கமிருந்து அவர்கள் வருவதற்கு முன்னால் இவர்கள் நம்மை நோக்கி வந்தால் நாம் கரைப்பக்கமாகத் தப்பி யோடிவிடுவோம் என்ற பயத்தால்தான் அவர்கள் நெருங்காமல் இருக்கிறார்கள்."

"ஆனால் நாம்தான் அவர்களைப் பார்த்துவிட்டோமே! நாம் ஓடிவிடுவோம் என்று தெரியாதா?" என்று திவா கேட்டாள்.

"அவர்களுக்குத் தெரியாது. நம்மிடம் தூரதிருஷ்டிக் கண்ணாடி இருக்கிறதென்பது அவர்களுக்குத் தெரியாது" என்றாள் தேவி.

"அம்மா! உயிருடன் இருந்தால், ஒருநாள் இல்லாவிட்டால் ஒருநாள் கணவனைச் சந்திக்கலாம்; இன்று கரைக்குப் போய் உயிரைக் காப்பாற்றிக் கொள்ளுவோம். இங்கேயே

சிப்பாய்கள் கரைப் பக்கம் வந்து சூழ்ந்து கொள்ளாவிட்டால் பிறகு வழியில் எப்படியாவது தப்பித்துக்கொள்ளலாம்."

"எனக்குப் பிராணனைப்பற்றி கவலை யிருந்தால் நான் எதற்காக எல்லாச் செய்திகளையும் அறிந்தும் கேட்டும் இங்கே வருகிறேன்? வந்த பிறகு எல்லோரையும் எதற்காக விட்டுப் பிரிகிறேன்? என் ஆயிரம் போர்வீரர்களை எதற்காக வேரிடத்திற்கு அனுப்புகிறேன்?" என்று தேவி சொன்னாள்.

"எனக்கு முன்பே தெரிந்திருந்தால் இந்த மாதிரி நடக்க விட்டிருக்க மாட்டேன்" என்றாள் திவா.

"உன்னால் என்ன முடியும்? நான் எதை ஸ்திரம் செய்கிறேனோ அது நடந்தே தீரவேண்டும். இன்று புருஷனைச் சந்திக்கவேண்டும்; அவருடைய தரிசனம் பெறவேண்டும். அவருடைய அனுமதிபெற்று மறு ஜன்மத்திலும் அவருடைய அன்பைப்பெற பிரார்த்தனை செய்துகொண்டு பிராணனை விடவேண்டும். நீங்கள் நான் சொன்னதைக் கேட்பீர்களா? என் புருஷன் திரும்பி இங்கே வந்ததும், நீங்கள் அவருடைய கப்பலில் ஏறிக்கொண்டு அவருடன் சென்றுவிடுங்கள். நான் தனியாகப் பிடிபடுகிறேன்; தனியாக அழிகிறேன். அதற்காகத்தான் எல்லோரையும் போகச் சொல்லிவிட்டேன். நீங்கள் அப்பொழுது போகவில்லை. இப்பொழுது நான் சொல்லுவதைக் கேட்டுவிடுங்கள்—என் புருஷன் கப்பலில் ஏறி ஓடிப்போய்விடுங்கள்."

"என் பிராணன் இருக்கிறவரையில் உன்னை விட்டுப் போக மாட்டேன். சாகவேண்டுமானால் சேர்ந்தாற்போல் சாவோம்" என்று நிசி கூறினாள்.

"அதெல்லாம் இருக்கட்டும், நான் சொல்லவேண்டியதைச் சொல்லி முடித்து விடுகிறேன். கண்ணுக்குப் படாமல் இருந்தது எப்படி? தூர்திருஷ்டிக் கண்ணாடியின் உதவி

யால் கண்ணுக்குப் பட்டதோ அதேமாதிரி ஈசுவரனை பிரத்தி யக்ஷமாக்கும் ஒரு கருவியை நாடுகிறேன்."

"அப்படிப்பட்ட மனித தூரதிருஷ்டிக் கண்ணாடி எது?" என்று திவா கேட்டாள்.

"யோகம்" என்று தேவி பதில் சொன்னாள்.

"எது? அங்கந்யாஸம், கரன்யாஸம், பிராணாயாமம், கும்பகம்—முதலியனவா?" என்று திவா கேட்டாள் மறுபடியும்.

"அதை நான் யோகம் என்று கருதவில்லை. யோகம் வெறும் அப்பியாஸம். ஆனால் அப்பியாஸமெல்லாம் யோகம் ஆகிவிடாது. நீ நெய், வெண்ணெய் சாப்பிடுவதற்கு அப்பியாஸம் செய்துகொண்டால் அது யோகமாகாது. மூன்று விதமான அப்பியாஸங்களைத்தான் யோகம் என்று கூறுவார்கள்."

"அவை மூன்றும் யாவை?"

"ஞானம், கர்மம், பக்தி—ஞானயோகம், கர்மயோகம், பக்தியோகம்."

அப்பொழுது நிசி தூரதிருஷ்டிக் கண்ணாடியைக் கொண்டு அங்குமிங்கும் பார்த்தாள். பார்த்துக்கொண்டே, "இப்பொழுது சண்டையோகம் நெருங்கிவிட்டது" என்றாள்.

"அதென்ன? சண்டை யோகம் என்றால் என்ன?" என்று தேவி ஒன்றும் அறியாதவள்போலக் கேட்டாள்.

"ஒரு சின்னப்படகு வருகிறது. அதில் ஆங்கில ஒற்றர்கள் இருக்கலாம்" என்றாள் நிசி.

நிசியின் கையிலிருந்து தூரதிருஷ்டிக் கண்ணாடியை வாங்கிக் கண்ணில் வைத்துக்கொண்டு தேவி அந்த சின்னப் படகை உற்று நோக்கினாள்.

"இதுதான் என்னுடைய யோக காலம். அவர்தான் வருகிறார், நீங்கள் கீழே போங்கள்" என்றாள்.

திவாவும் நிசியும் மேல் தட்டை விட்டு இறங்கிக் கீழே அறைக்குச் சென்றார்கள். அந்த சின்னப்படகு மெள்ள அருகில் வந்தது. அதிலிருந்து விரஜேசுவரன் வந்தான். ஓடத்தில் ஏறிக்கொண்டு படகைக் கட்டச்சொல்லி உத்தரவிட்டான்; படகோட்டிகள் அம்மாதிரியே செய்தார்கள்.

விரஜேசுவரன் வந்ததும் தேவி எழுந்திருந்து வணங்கி அவன் பாத தூளியைத் தொட்டு நின்றாள். பிறகு இருவரும் உட்கார்ந்துகொண்டார்கள்.

"இன்று பணம் கொண்டுவர முடியவில்லை. இன்னும் இரண்டு மூன்று நாட்களில் கொடுத்துவிட முடியும் என்று நினைக்கிறேன். இரண்டு மூன்று நாட்கள் கழித்து உங்களை எங்கே சந்திக்கலாம் என்பதைத் தெரிவிக்கவேண்டும்" என்று விரஜேசுவரன் சொன்னான்.

என்ன வெட்கக்கேடு! பத்து வருஷங்கள்தான்! பிரபுல்லாவிடம் அவன் இந்தமாதிரிப் பேசினான்.

"என்னை மறுபடியும் பார்க்க முடியாது" என்று தேவி பேச ஆரம்பித்தபொழுது அவள் நெஞ்சு அடைத்துக்கொண்டது. ஒருதடவை கண்களைத் துடைத்துக்கொண்டாள்.

"இனிமேல் என்னை மறுபடி பார்க்கமுடியாது. ஆனால், என் கடனைத் தீர்ப்பதற்கு வேறுவழி இருக்கிறது. கொடுக்க முடியும்பொழுது, பணத்தை ரொம்ப கஷ்டப்படுகிறவர்களுக்குக் கொடுத்து வினியோகம் செய்துவிடுங்கள். அப்படிச் செய்துவிட்டால் அது என்னைச் சேர்ந்துவிடும்" என்றாள் தேவி சௌதுராணி.

விரஜேசுவரன் அவள் கையைப் பற்றிக்கொண்டான்.

"பிரபுல்லா! உனது பணம்—" என்று விரஜேசுவரன் ஆரம்பித்தான், பேசமுடியவில்லை. வாய்வார்த்தை வாயிலேயே இருந்தது.

விரஜேசுவரன், "பிரபுல்லா!" என்று அலறி அவள் கையைப் பற்றியதுதான் தாமதம். தேவி பத்து வருஷங்கள் தடைபோட்டு நிறுத்திவைத்திருந்த கண்ணீர் குபீலென்று பெருகிற்று. விரஜேசுவரன் பணப்பேச்சு அந்த வெள்ளத்தில் எங்கோ போய்விட்டது. மகா தேஜஸ்வினியான தேவி சௌதுராணி குழந்தைபோல விம்மி விம்மி அழுதாள்.

விரஜேசுவரன் பெருத்த கலவரமடைந்தான். கொள்ளையடித்துப் பிழைக்கும் ஒரு பெண்ணுக்குக் கண்ணில் ஜலம் கூட வருமா என்று ஆச்சரியப்பட்டான். ஆனால் கண்ணீருக்கு விதிவிவஸ்தை எங்காவது உண்டா? எனவே, விரஜேசுவரன் கண்களில்கூட அவனைக் கேட்காமலேயே, (அவன் கூப்பிடாமலேயே!) கண்ணீர் நிரம்பிற்று. கண்களைக் கசக்கிக் கண்ணீரை அடக்கி விடுவதென்று எண்ணினான். ஆனால் காரியத்தில் அது நடக்கவில்லை. அவ்வளவுதான்; கண்ணீர் மலமலவென்று பெருகி பிரபுல்லாவின் கையில் விழுந்தது.

அப்பொழுது மடை திறந்துவிட்டது. கொள்ளைக்காரி என்று அவளைக் குற்றம் சாட்டி பிரபுல்லாவைத் திரஸ்காரம் செய்துவிட்டுப் போய்விடுவதென்றே அவன் அங்கே வந்தான். பாப காரியம் செய்கிறவள் என்றும் இன்னும் பலவிதமாகக் கொஞ்சம் கதை விட்டு விட்டு ஒரே அடியாகத் தியாகம் செய்துவிட்டு வந்துவிடுவதாகவே எண்ணியிருந்தான். ஆனால், அவள் கண்ணீர் அவன் கையை நனைத்தபிறகு அவளுடன் அட்டகாசமாக வார்த்தைகள் பேசுவதெப்படி? அவனால் அப்பொழுது எப்படி முடியும்?

பிறகு விரஜேசுவரன் கண்களைத் துடைத்துக்கொண்டு, "இதோ பார், பிரபுல்லா! உன் பணம் என் பணம். அதைக் கொடுப்பதில் எனக்கேன் கவலை? ஆனால் கடனைத் தீர்ப்பதில் நான் மிகவும் கவலையாக இருக்கிறேன். இந்தப் பத்து வருஷ காலமாக நான் உன்னைப்பற்றித்தான் எண்ணிக்கொண்டிருந்

திருக்கிறேன். எனக்கு இன்னும் இரண்டு பெண்சாதிகள் இருக்கிறார்கள். அவர்கள் இருவரையும் இந்தப் பத்து வருஷங்களும் நான் என் பத்தினிகளாகவே எண்ணவில்லை. உன்னைத்தான் பத்தினி என நினைத்தேன். எதற்காக என் பதை என்றால் விவரித்து எடுத்துச் சொல்ல சாத்தியமில்லை. நீ இறந்து விட்டாய் என்று எனக்குக் கேள்வியுண்டு; ஆனால் எனக்கு நீ இருக்கத்தான் இருந்தாய். நீதான் என் மனைவி என்று மனதில் தீர்மானித்தேன். வேறு ஒருவருக்கும் நான் அங்கே இடம் தரவில்லை. நீ இறந்துவிட்டாய் என்று கேள்விப்பட்டதும் நானும் இறந்துவிடுவதாகத் தீர்மானித்தேன். இப்பொழுது தோன்றுகிறது, இறந்திருந்தால் நல்லதென்று. நீ இறந்திருந்தாலும் நல்லது;—நான் இறந்திருந்தாலும் நல்லது. இப்பொழுது பேசுவதும் கேட்பதும் இல்லாமல் இருந்திருக்கும். பத்து வருஷங்களுக்குப் பிறகு இன்று என் காணமற்போன செல்வத்தைக் கண்டேன். அது எனக்கு ஸ்வர்க்க சுகத்தைக் காட்டிலும் மேலாக இருக்க வேண்டியது. ஆனால் — பிரபுல்லா! — அது அப்படி இல்லை! இன்று உன்னை அடைந்தது எனக்கு ஹிருதயத்தைத் துளைக்கும் வேதனைதான்!"

இவ்வாறு பேசிவிட்டு, விரஜேசுவரன் சற்று மௌனமானான்; உணர்ச்சி மேலீட்டால் பிறகு ஒரு வாய் ஜலம் குடித்தான்.

"மனத்தின் மர்மக்கோவிலில் தங்கப்பதுமை யொன்றை வைத்து ஆராதனை செய்தேன். — என் பிரபுல்லா அவள் — அந்தப் பிரபுல்லா இன்று இந்தத் தொழில் செய்துகொண்டிருக்கிறாள்" என்று சொல்லிவிட்டு விரஜன் தலையைப் பிடித்துக்கொண்டான்.

"எது? கொள்ளைத் தொழிலா செய்கிறேன்?" என்று பிரபுல்லா கேட்டாள்.

"செய்யவில்லையா, பின்?"

இதற்குப் பதிலாக பிரபுல்லா ஒரு வார்த்தை பதில் சொல்ல முடியும். விரஜேசுவரனின் தகப்பனுர் பிரபுல்லாவை வெளியே போகும்படி சொன்னபொழுது பிரபுல்லா கோபத்துடன், "எனக்கு சோற்றுக்குக்கூட வழி இல்லையே, நான் என்ன செய்வது?" என்று கேட்டாளல்லவா? அவர் அதற்கு என்ன பதில் சொன்னுர்? "திருடிக் கொள்ளையடித்துச் சாப்பிடேன்!" என்றுர். பிரபுல்லா அதை மறக்க முடியுமா? மறக்கக்கூடிய வார்த்தையா அது? இன்று விரஜேசுவரன் பிரபுல்லாவைப் பார்த்து, "நீ கொள்ளைக்காரி யல்லவா?" என்று அதட்டினுன். இன்று பிரபுல்லாவிற்கும் சரியான பதில் சொல்ல வாய் இருந்தது. "ஆமாம், நான் கொள்ளைக்காரிதான்! அதற்காக இங்கே இந்த மிரட்டல் எதற்காக? நீங்கள்தான் என்னைத் திருடியோ கொள்ளையடித்தோ பிழைக்கச் சொன்னீர்களே. நான் பெரியோர்களின் ஆக்ஞைப்படி செய்துகொண்டு வருகிறேன்" என்று பிரபுல்லா பதில் சொல்ல முடியும். இந்தப் பதிலை சொல்லாமலிருப்பது எவ்வளவு மகத்தான விஷயம்? பிரபுல்லா இந்தப் பதிலைச் சொல்லாமல் இருந்தாள்; அது அவள் நினைப்பில்கூட இல்லை.

பிரபுல்லா கணவன் முன்பு கை கூப்பிக்கொண்டு, "நான் கொள்ளைக்காரி யல்ல. நான் கொள்ளைக்காரி யல்லவென்று உங்கள் முன்பு சத்தியம் செய்கிறேன். நீங்கள் என் தெய்வம். நான் வேறு தெய்வங்களை ஆராதனை செய்யக் கற்றுக்கொண்டேன், ஆனுல் முடியவில்லை. நீங்கள் எல்லா தெய்வங்களின் இடத்தையும் ஆக்கிரமித்துக்கொண்டு என் ஹிருதயத்தில் நிற்கிறீர்கள். நீங்கள்தான் என் தெய்வம், நான் கொள்ளையடிப்பவள் அல்லவென்று மறுபடியும் உங்களுக்கு உறுதி கூறுகிறேன்.

"ஆனால், லோகத்தில் எல்லோரும் என்னைக் கொள்ளைக்காரி என்று சொல்லுவது எனக்குத் தெரியும். யார், எதற்காகச் சொல்லுகிறார்கள் என்றும் தெரியும்; அந்தக் கதையை நீங்கள் என்னிடமிருந்து தெரிந்து கொள்ள வேண்டும்; அதை உங்களிடம் சொல்லுவதற்காகவே நான் இங்கே இன்று உங்களைச் சந்தித்திருக்கிறேன். இன்று சொல்லவில்லை யென்றால் இனிமேல் சொல்ல முடியாது; நீங்களும் கேட்க முடியாது, கேளுங்கள் சொல்லுகிறேன்" என்றாள்.

பிறகு, தான் மாமனார் வீட்டிலிருந்து வெளியேறினது முதல், நாளது வரை, தன் கதை பூராவையும் ஒன்று விடாமல் சொன்னாள். அதைக்கேட்டு விரஜேசுவரன், ஆச்சரியமும், லஜ்ஜையும், அதிசயமும், ஆனந்தமும் அடைந்தான்.

பிரபுல்லா கதையை முடித்துவிட்டு, "நான் சொன்னதை நம்புகிறீர்களல்லவா?" என்று கேட்டாள்.

அவநம்பிக்கைக்கு இடமில்லை — பிரபுல்லாவின் கதை அவன் உள்ளத்தில் பதிந்து விட்டது. அவனால் பதில் சொல்ல முடியவில்லை. ஆனால் ஆனந்தத்தால் பூரிப்புக் கொண்ட அவன் முக காந்தியைக் கண்டே அவனுக்கு நம்பிக்கை பரிபூரணமாக ஏற்பட்டுவிட்டதென்று தெரிந்து கொண்டாள் பிரபுல்லா.

"இப்பொழுது எனக்கு உங்கள் பாததூளியை அனுக்கிரகம் செய்துவிட்டு இந்த ஜன்மத்தில் என்னிடமிருந்து விடைபெற்றுக் கொள்ளுங்கள். இனிமேல் இங்கே கால தாமதம் செய்யவேண்டாம்: சீக்கிரத்தில் ஒரு ஆபத்து நேரிடப்போகிறது. அது உங்களுக்குத் தடையாக இருக்கும். பத்து வருஷங்களுக்குப் பிறகு கண்டு, உங்களை இப்பொழுதே பிரிந்துபோகும்படி சொல்லுகிறேன். அதிலிருந்தே ஆபத்து சாமானியமானதன்று என்று நீங்கள் தெரிந்துகொள்ளலாம்.

இந்த ஓடத்தில் என் சகிகள் இருவர் இருக்கிறார்கள். அவர்கள் ரொம்ப நல்லவர்கள். அவர்களிடம் எனக்கு மிகுந்த அன்பு. உங்கள் படகில் அவர்களைக் கூட்டிக்கொண்டு போங்கள். வீடு திரும்பினதும் அவர்கள் எங்கே போக விரும்புகிறார்களோ அங்கே அனுப்பிவிடுங்கள். நான் எப்படி உங்களைப் பற்றி நினைவு கொண்டிருக்கிறேனோ அப்படியே நீங்களும் இருங்கள். ஸாகராவும் நினைவிலிருக்கட்டும்.''

இவ்வாறு பிரபுல்லா சொன்னதற்கு ஒரு பதிலும் சொல்லாமல் விரஜன் சிறிது நேரம் சும்மா இருந்தான்.

"எனக்கு ஒன்றும் விளங்கவில்லை. எனக்கு விளங்கச் செய்யேன், பிரபுல்லா! உன் ஆட்கள் எல்லாம் எங்கே? ஒருவரும் காணோமே; இரண்டு ஸ்திரிகள் தானே இருக்கிறார்கள். அவர்களையும் அனுப்பிவிடுவதாகச் சொல்லுகிறாய், ஏதோ ஆபத்து வரப்போகிறது என்கிறாய், நான் இங்கே இருக்கக் கூடாது என்கிறாய். இனிமேல் இந்த ஜன்மத்தில் சந்திப்பு இல்லை என்கிறாய். இதெல்லாம் என்ன? என்ன ஆபத்து நேரப்போகிறது? நீ என்னிடம் சொல்லாவிட்டால் நான் போகமாட்டேன்'' என்றான் கடைசியாக.

"நீங்கள் கேட்கக்கூடியதல்ல அது.''

"அப்படியானால் நான் — உனக்கு — ஒன்றுமே இல்லையா?''

அந்த சமயம் "டும்'' என்று துப்பாக்கி சுட்ட சத்தம் கேட்டது.

---

மூன்றும் அத்தியாயம்

## விரஜன் உறுதி

'டும்' என்று துப்பாக்கி சத்தம் கேட்டது. விரஜேசுவரன் வார்த்தை வாயிலிருந்தது. இருவரும் திடுக்கிட்டுத் திரும்பி எதிரே பார்த்தார்கள். தூரத்தில் ஐந்து படகுகள் வருவதைக் கண்டார்கள். துடுப்புகளால் அடிபட்ட நதிஜலம் நிலவில் ஜொலித்தது. உற்று நோக்கினபொழுது ஐந்திலும் சிப்பாய்கள் நிறைந்திருந்தது தெரிந்தது. கரைப்பக்கமாக ஆட்கள் வந்து சூழ்ந்துகொண்டாகிவிட்ட தென்பதற்கு அந்த குண்டு சத்தம் சங்கேதம். அதைக் கேட்டதும் ஐந்து படகுகளும் விரைந்து வந்தன.

அதைப் பார்த்ததும் தேவி, "இனி நிமிஷ நேரங்கூட தாமதம் செய்யக்கூடாது. சீக்கிரமாக உங்கள் படகில் ஏறிக்கொண்டு போய்விடுங்கள்" என்றாள்.

"இதென்ன? படகுகள் யாருடையவை? துப்பாக்கி ஏது?"

"தெரியாதா உங்களுக்கு?"

"தெரியாது."

"அவற்றில் கம்பெனி (கும்பினி)யின் சிப்பாய்கள் இருக்கிறார்கள். கரையிலிருக்கும் துருப்புக்களில் ஒருவன்தான் அந்தத் துப்பாக்கியை சங்கேதமாகச் சுட்டது."

"எதற்காக இவ்வளவு சிப்பாய்கள் இங்கே வந்திருக்கிறார்கள்? உன்னைப் பிடிக்கவா?"

பிரபுல்லா மௌனமாக இருந்தாள்.

"நீ பேசுவதிலிருந்து நீ இதையெல்லாம் முன்பே அறிந்திருக்கிறாய் போலிருக்கிறதே?"

"தெரியும் — என் ஒற்றர்கள்தான் எங்கே பார்த்தாலும் இருக்கிறார்களே!"

"இங்கே வந்த பிறகுதான் தெரியுமோ, முன்பே தெரியுமோ?"

"முதலிலேயே தெரியும்."

"பின் — எல்லாம் அறிந்திருந்தும் — இங்கே ஏன் வந்தாய்?"

"உங்களை மற்றொரு முறை பார்க்க வேண்டுமென்றுதான்!"

"உன் ஆட்கள் எல்லாம் எங்கே?"

"எல்லோரையும் போகச் சொல்லிவிட்டேன். அவர்கள் ஏன் என்னுடன்கூடச் சாகவேண்டும்?"

"நிச்சயம் கைதியாவதாகத் தீர்மானித்துவிட்டாயா?"

"இன்னும் இருந்து என்ன பயன்? உங்களைப் பார்த்தாய்விட்டது. என் மனத்திலிருந்ததையும் உங்களுக்குச் சொல்லிவிட்டேன். நீங்களும் என்னிடம் பற்றுகொண்டிருக்கிறீர்கள் என்பதை உங்கள் வாய் மூலமாகவே கேட்டுவிட்டேன். என்னிடமிருந்த பணத்தையும் விலேவாரி செய்துவிட்டேன். இன்னும் உயிர் வாழ்ந்து நான் என்ன சாதிக்கப்போகிறேன்? எதற்காக இருக்கவேண்டும்?"

"ஏன்! தப்பிவந்து என் வீட்டில் இருந்து என் வீட்டை வீடாக்கவேண்டும்."

"உண்மையாகவா?"

"நீ என்னிடம் சத்தியம் செய்தாய். நானும் உன்னிடம் சத்தியம் செய்து சொல்லுகிறேன். நீ இன்று தப்பிப் பிழைத்தால் நான் உன்னைக் கட்டாயம் என் வீட்டுக்காரியாக ஏற்றுக்கொள்ளுகிறேன்."

"என் மாமனார் என்ன சொல்லுவார்?"

"அவரை நான் திருப்திசெய்து விடுகிறேன்."

"ஹா! இந்தச் செய்தியை நான் நேற்றே கேட்டிருந்தால்?"

"நேற்று கேட்டிருந்தால் என்ன ஆயிருக்கும்?"

"இன்று என்னை யாரால் பிடிக்க முடியும்?"

"இப்பொழுது?"

"இப்பொழுது ஒரு வழியும் இல்லை. நீங்கள் உங்கள் படகில் நிசியையும் திவாவையும் கூட்டிக்கொண்டு சீக்கிரம் போங்கள்!"

விரஜன் தன் படகோட்டிகளைக் கூப்பிட்டான். அவர்கள் வந்ததும், "நீங்கள் சீக்கிரம் தப்பி ஓடுங்கள். கம்பெனி சிப்பாய்கள் வருகிறார்கள். அவர்கள் பார்த்தால் உங்களைப் பிடித்துக்கொண்டு விடுவார்கள். சீக்கிரம் போங்கள். நான் வரவில்லை. இங்கேயே இருக்கவேண்டியிருக்கிறது" என்றான்.

அந்த மகாத்மாக்கள் மறுதடவை சொல்ல வேண்டுமென்று காத்திருக்கவில்லை; அந்த க்ஷணமே படகைத் தள்ளிக்கொண்டு கிளம்பிவிட்டார்கள்.

படகும் ஆள்களும் போவதைப் பார்த்து, பிரபுல்லா "நீங்கள் போகவில்லையா?" என்று கேட்டாள்.

"எதற்காக? உனக்குத்தான் சாகத்தெரியுமா? எனக்குத் தெரியாதோ? நீ என் மனைவி. உன்னை நான் நூறு தடவை வேண்டுமானாலும் தியாகம் செய்து விடலாம். ஆனால் நான் உன் புருஷன். ஆபத்தில் என் தருமப்படி உன்னைக் காப்பாற்றக் கடமைப்பட்டிருக்கிறேன்.

ஆனால் உன்னைப் பாதுகாக்க இப்பொழுது சக்தியற்று இருக்கிறேன். அதற்காக உன்னை ஆபத்துக் காலத்தில் விட்டுவிட்டுப் போகமாட்டேன்."

"உங்கள் ஆதரவை நான் ஏற்றுக்கொள்ளுகிறேன். தப்பித்துக்கொள்ள ஏதாவது வழியிருந்தால் அதை நான் செய்கிறேன்" என்று சொல்லிக்கொண்டு பிரபுல்லா ஆகாயத்தை அண்ணாந்து பார்த்தபொழுது அவளுக்குக் கொஞ்சம் தேறுதல் உண்டாயிற்று. ஆனால் மறுபடியும் மனம் தளர்ந்து, "ஆனால் என் உயிர் தப்புவதற்கு மற்றொரு வில்லங்கம் இருக்கிறதே!" என்றாள்.

"என்ன?" என்று விரஜன் ஆவலுடன் கேட்டான்.

"இதை உங்களுக்குச் சொல்லுவதில்லை என்று எண்ணியிருந்தேன். ஆனால் இப்பொழுது சொல்லித்தான் ஆகவேண்டும். இந்தச் சிப்பாய்களுடன் என் மாமனார் இருக்கிறார். நான் பிடிபடாவிட்டால் அவருக்கு ஆபத்து நேரிடும்."

விரஜன் அதைக் கேட்டு பதைபதைத்தான். தலையில் ஓங்கி அடித்துக்கொண்டான்.

"அவரா! அவரா!" என்று கத்தினான்.

பிரபுல்லா ஒன்றும் பேசாமல் நின்றாள். விரஜனுக்கு விஷயம் பூராவும் அர்த்தமாகிவிட்டது. அன்று அந்த சமயம் அந்த இடத்தில் தேவி செளதுராணியைக் காணலாம் என்று ஹரவல்லபருக்கு விரஜன்தான் சொன்னது. அவனிடந்தான் அவர் அந்தத் தகவலை அறிந்தது. அவன் அதை வேறு யாரிடமும் சொல்லவில்லை. தேவியின் உத்தேசங்களும் போக்கும் வெகு ரகசியமானவை; அவை வேறு யாருக்குமே தெரிய வழியில்லை. விசேஷமென்னவென்றால் தேவி வந்து சேருவதற்கு முன்பே கம்பெனிச் சிப்பாய்கள் ரங்கபுரத்திலிருந்து புறப்பட்டிருக்கவேண்டும். சந்தேகமில்லை; இல்லாவிட்டால் அங்கே வந்திருக்க முடியாது. கொஞ்ச நாள் முன்ன

தாகவே ஹரவல்லபர் எங்கேயோ போய்விட்டார். யாரிடமும் சொல்லாமல் தூர யாத்திரை போனர். அன்றும் திரும்பி வரவில்லை. ஹரவல்லபர் தேவியின் பணத்தைத் திருப்பிக்கொடுக்க யாதொரு பிரயத்தினமும் செய்யவில்லை. ஆனல் அப்பொழுது விரஜன் இதை மறக்கவில்லை:

पितास्वर्गः पिताधर्मः पिताहि परमं तपः।
पितरि प्रीतिमापन्ने प्रीयन्ते सर्वदेवताः॥

"நான் சாகிறேன், நான் தயங்கவில்லை. நீ சாவது என் சாவைக் காட்டிலும் அதிக கஷ்டம்; ஆனல் நான் அதைப் பார்க்கமாட்டேன். உன்னைக் காப்பாற்றுவதற்கு முன், என் பிராணன் போகுமுன், என் தகப்பனரைக் காப்பாற்றுவது அவசியம்."

"அதைப்பற்றி கவலை வேண்டாம். என்னைக் காப்பாற்ற முடியாது. ஆகையால் அவருக்கு ஒன்றும் பயமே இல்லை. அவர் உங்களைக் காப்பாற்றக்கூடும், ஆனல் இதைமட்டும் சொல்லுகிறேன். அவர் இந்த மாதிரி அமங்களமான சதி செய்ததால்தான் நான் என்னைப் பாதுகாத்துக்கொள்ள உபாயம் செய்யவில்லை. அவருக்கு ஆபத்து வரக்கூடாதென்பதற்கு இதை நீங்கள் சொன்னலும் சொல்லாவிட்டாலும் நான் செய்வேன்; ஆகையால் அது விஷயமாகக் கவலை வேண்டாம்."

பிரபுல்லா இதைத் தனக்கும் சொல்லிக்கொண்டாள். ஹரவல்லபர் பிரபுல்லாவை நாசம் செய்தார்; தேவியையும் நாசம் செய்ய முனைந்திருந்தால்! ஆனலும் தேவி எல்லோருக்கும் நல்லதை விரும்புவாள்; அவள் நிஷ்காமகர்மா செய்பவள்; அவள் தர்மம் நிஷ்காமமானது.

அப்பொழுது கரைப்பக்கத்துக் காட்டிலிருந்து சங்கநாதம் கேட்டது. இருவரும் துடித்துக்கொண்டு எழுந்தார்கள்.

## நான்காம் அத்தியாயம்

# தேவியின் தியாகம்

"நிசி!" என்று தேவி கூப்பிட்டாள்.

நிசி மேடைக்கு வந்தாள்.

"யாருடைய பேரிகை அது?"

"தாடி அண்ணாவுடையது போலிருக்கிறது!"

"ரங்கராஜனுடையதா?"

"அதே மாதிரிதான் இருக்கிறது".

"அதெப்படி? நான் ரங்கராஜனை, காலையில் தேவிக் கோட்டைக்கல்லவா அனுப்பினேன்?"

"தெரியும், வழியில் திரும்பிவிட்டார்!"

"அவனைக் கூப்பிடு!"

"பேரிகை சத்தம் ரொம்ப தூரத்திலல்லவா இருக்கிறது? இங்கிருந்து கூப்பிட்டால் கேட்குமா? நான் இறங்கிப் போய் பேரிகை நாதத்தை நிறுத்திவிட்டு வரட்டுமா?" என்றான் விரஜன்.

"ஒன்றும் செய்யவேண்டாம்; கீழேபோய்க் கொஞ்சம் நிசியின் சாமர்த்தியத்தைப் பாருங்கள்" என்றாள் தேவி.

நிசியும் விரஜனும் கீழே சென்றார்கள். நிசி ஒரு புல்லாங்குழலை எடுத்தாள். அவள் கீத வாத்தியங்களில் கை தேர்ந்த

வள். அவள்தான் தேவியின் வீணை வஸ்தாத். நிசி புல்லாங் குழலை ஊதி மல்லாரி ராகத்தை வாசித்தாள். சிறிது நேரத் தில் ரங்கராஜன் தேவியண்டை வந்துசேர்ந்தான்.

அதே சமயம் விரஜன் நிசியைப் பார்த்து, "அதோ காட்டிலிருந்து வருகிறார்களே அவர்கள் யார்?" என்று கேட்டான்.

"அவர்கள் 'வரகந்தாஜ்' சிப்பாய்கள் என்று நினைக் கிறேன். ரங்கராஜன் கூட்டிக்கொண்டு வந்திருக்கவேண்டும்."

தேவியும் அந்த மனிதக் கூட்டத்தைப் பார்த்தபொழுது தான் ரங்கராஜன் வந்தான்.

"நீ இங்கே எப்படி இருக்கிறாய்?" என்று தேவி அவனைக் கேட்டாள்.

ரங்கராஜன் முதலில் யாதொரு பதிலும் சொல்லவில்லை.

"நான் உன்னைக்காலையில் தேவிக்கோட்டைக்கு அனுப்பி னேனே. அங்கே ஏன் போகவில்லை? என் கட்டளையை ஏன் மீறினாய்?" என்று தேவி மறுபடியும் அவனைக் கேட்டாள்.

"நான் தேவிக்கோட்டைக்குப் போய்க்கொண்டிருந் தேன். வழியில் டாகுர்ஜியைச் சந்தித்தேன்."

"பவானி டாகுரையா?"

"ஆமாம்! கம்பெனிச் சிப்பாய்கள் உங்களைப் பிடிக்க வருகிறார்கள் என்று அவரிடம் கேள்விப்பட்டேன். ஆகையால் நான் 'வரகந்தாஜ்' சைனியத்தைக் கூட்டிக்கொண்டு வந்திருக் கிறேன். அவர்களைக் காட்டில் மறைத்து வைத்துவிட்டு நான் கரைக்கு வந்தேன். படகுகள் வருவதைப் பார்த்து நான் பேரிகை நாதம் செய்து சங்கேதம் கொடுத்தேன்."

"காட்டிலா சிப்பாய்கள் இருக்கிறார்கள்?"

"அவர்கள் நம்மைச் சூழ்ந்துகொண்டு விட்டார்கள்."

"டாகுர்ஜி எங்கே?"

"இந்த சைனியத்துடன் இருக்கிறார்."

"எவ்வளவு பேரைக் கூட்டிக்கொண்டு வந்திருக்கிறாய் நீ?"

"சுமார் ஆயிரம் பேர்."

"சிப்பாய்கள் எத்தனை பேர்?"

"ஐந்நூறு பேர் என்று தெரிகிறது."

"சண்டை ஏற்பட்டால் எவ்வளவு சேதம் ஏற்படும்?"

"இருநூறு முன்னூறு பேர் உயிர் துறக்கலாம்!"

"டாகுர்ஜியிடமும் போய்ச் சொல்; நீயும் அறி. இன்று நீங்கள் செய்த காரியம் என்னைத் துன்பத்துக்குள்ளாக்கி விட்டது."

"ஏன் அம்மா?"

"ஒரே ஒரு பெண்ணின் உயிரைக் காப்பாற்றுவதற்காக நீங்கள் இவ்வளவு பேரை ஹதம் செய்யத் தீர்மானித்துவிட்டீர்களே! உங்களுக்கு தர்மஞானம் கொஞ்சமாவது இல்லையே? நான் ஒருத்தி மடிந்தாலென்ன? எனக்காக ஏன் இவ்வளவு பேரை உயிர் துறக்கச் செய்ய வேண்டும்? என்னை என்ன அவ்வளவு கேவலமாகவா எண்ணிவிட்டீர்கள்?—என் உயிரைக் காப்பாற்றிக்கொள்ள இவ்வளவு பேரைச் சாக அடிப்பேன் என்று?" என்று ராணி வெகு கோபமாகப் பேசினாள்.

"நீங்கள் உயிர்தப்பினால் உலகத்தில் எவ்வளவு பேர் சுகமடைந்து கவலையற்று வாழ்வார்கள், அதைப் பார்க்கவேண்டாமா?" என்று ரங்கராஜன் கேட்டான்.

ராணிக்கு வந்த கோபத்தில் அவள் உடல் நடுங்கிற்று, அவள் மெய்ம்மறந்தாள். ரங்கராஜனைப் பார்த்து, "சீ!" என்றாள்.

அந்த திக்கார வார்த்தையைக் கேட்டு ரங்கராஜன் தலைகுனிந்து கொண்டான். அவ்விடத்திலேயே பூமி பிளந்து, தான் அதற்குள் போய்விடக் கூடாதா என்று எண்ணினான்.

கண்களில் ஆவேச ஜொலி விளங்க, பதட்டத்துடன் ராணி ரங்கராஜனைப் பார்த்து, "டாகுர்ஜியிடம் போய் நான் சொன்னதாகச் சொல்! நீயும் அதன்படி நட. இந்த நிமிஷம் 'வரகந்தாஜ்' சைனியம் வந்த வழியே திரும்பிப் போய்விட வேண்டும். ஒரு நிமிஷங்கூட தாமதம் ஏற்படக்கூடாது, தெரிகிறதா? ஏற்பட்டால் நான் இந்த ஜலத்தில் குதித்துப் பிராணனை விடுவேன். நீங்கள் அப்பொழுது யாரையும் காப்பாற்றமுடியாது" என்றாள்.

"நான் போய்ச் சொல்லுகிறேன், தாயே! டாகுர்ஜியிடம் நீங்கள் சொன்னதைப் பூராவும் தெரிவிக்கவும் தெரிவிக்கிறேன். அவர் எப்படி செய்யச் சொல்லுகிறாரோ அந்தப்படி செய்கிறேன். நான் உங்கள் இருவருக்கும் கீழ்ப்படிந்து நடக்கவேண்டியவன்" என்று சொல்லிவிட்டு ரங்கராஜன் போய்விட்டான்.

நிசி மேல்தட்டில் உட்கார்ந்துகொண்டு சகலத்தையும் கேட்டுக்கொண்டிருந்தாள். ரங்கராஜன் போனதும் அவள் தேவியை அணுகி, "நல்லது, உன் உயிரைப்பற்றி நீ இஷ்டப்படி செய்ய உனக்கு உரிமையுண்டு. உன்னைத் தடுக்க யாருக்கு என்ன அதிகாரம்? ஆனால் இன்று உன்னுடன்கூட உன் புருஷனும் இருக்கிறார். அவரைப்பற்றி நீ நினைக்கவில்லையே' என்றாள்.

"நினைக்காமல் என்ன? நினைத்தேன். நினைத்து என்ன பண்ணுகிறது? ஒன்றும் செய்ய சாத்தியமில்லை. ஈசுவரன் தான் காப்பாற்றவேண்டும். எது நடக்கவேண்டுமோ நடந்தே தீரும். எது எப்படியானாலும் இதுதான் விஷயம்—என் கணவர் உயிரைக் காப்பாற்றுவதற்காக இவ்வளவு பேர் உயிரையும் போக்க எனக்கு உரிமை இல்லை. என் கணவர் எனக்கு நிகரற்ற—அதற்கென்ன செய்கிறது நிசி?"

நிசி தனக்குள் தேவியின் பெருந்தன்மையைக் கண்டு பூரித்துப் பூரித்துப் போற்றினுள். "இவள் உண்மையான நிஷ்காம தர்மத்தை அறிந்துதான் இருக்கிறுள். இவளுடன் கூட சாவதே ஒரு புண்ணியம்" என்று நிசி தனக்குள் எண்ணிக்கொண்டாள்.

நிசி விரஜேசுவரனிடம் போய் விஷயம் பூராவையும் சொன்னுள். அதைக்கேட்டு விரஜேசுவரனுக்கு பிரபுல்லாவைத் தன் மனைவி என்று எண்ணக்கூட முடியவில்லை. அவள் உண்மையில் ஜகதீசுவரிதான் என்று எண்ணினுன். "நான் அல்பன், இந்த மகா உத்தமியை கொள்ளைக்காரி என்று முகத்திற்குமுன் சொல்லித் திட்டினேனே!" என்று தனக்குள் சொல்லிக்கொண்டான்.

அப்பொழுது ஐந்து பக்கங்களிலிருந்து ஐந்து சிறு படகுகள் ஓடத்தின் அருகே வந்தன. பிரபுல்லா அந்தப் பக்கம் திரும்பக்கூட இல்லை. கற்சிலைபோல அசையாமல் ஓடத்தின் மேல்தட்டில் உட்கார்ந்துகொண்டிருந்தாள். அவள் படகுகளையும் பார்க்கவில்லை. தன் சேனையையும் பார்க்கவில்லை. தூரத்து ஆகாயத்தைப் பார்த்தாள். அங்கே ஒரு சிறு மேகம் வெகு நேரமாகத் தென்பட்டுக் கொண்டிருந்தது. பிரபுல்லா அதைத்தான் பார்த்தாள். பார்க்கப் பார்க்க அது பெரிதாகிக் கொண்டு வந்தது தெரிந்தது.

"ஜகதீசுவரா, உன் ஆக்ஞை!" என்று சொல்லிக் கொண்டு பிரபுல்லா மேல் தட்டை விட்டுக் கீழே இறங்கினுள்.

பிரபுல்லா உள்ளே போவதைக் கண்டு நிசி, "உள்ளே என்ன காரியம்?" என்று கேட்டாள்.

"என் புருஷனைத் தப்புவிக்கவேண்டும்" என்று பிரபுல்லா பதில் சொன்னுள்.

"நீ?"

"என் விஷயத்தைப் பற்றி கேட்காதே! நான் செல்வதையும் சொல்வதையும் கொஞ்சம் உற்றுக் கவனித்து வா. நீயும் நானும் எதிர்பாராமல் ஏதாவது நடந்தால் என் புருஷன் தப்பலாம், திவா தப்பலாம், என் மாமனார் தப்பலாம்" என்று சொல்லி பிரபுல்லா ஒரு சங்கை எடுத்து ஊதினாள்.

"அதுதான் சரி" என்றாள் நிசி.

நல்லதா கெட்டதா என்று யோசனை செய்து பார்! என்னென்ன செய்யவேண்டுமோ, உன்னிடம் சொல்லுகிறேன், எல்லா பாரமும் உன் தலையில்தான்.

## ஐந்தாம் அத்தியாயம்

## சண்டை

கட்டெறும்பு சாரிபோல 'வரகந்தாஜ்' சைனியம் கங்கைக்கரை வனத்திலிருந்து வெளியே வந்தது. தலையில் சிகப்புப் பாகை யணிந்து, துணியை வரிந்து கட்டிக்கொண் டிருந்தார்கள். காலில் ஒன்றுமில்லை,—ஜலத்தில் சண்டை போடவேண்டியதா யிருக்குமென்று ஒருவரும் ஜோடு அணிய வில்லை—கையில் கத்தியும் கேடயமும்—சிலர் கைகளில் துப் பாக்கிகளும் இருந்தன. ஆனல் துப்பாக்கிகள் மிகக் குறைவு. எல்லோருக்கும் முதுகில் கைத்தடி கட்டப்பட்டிருந்தது.

அந்தச் சிறு படகு இன்னும் மேன்மேலும் நெருங்கி ஓடத்தைச் சூழ்ந்து கொள்ள வருவதை, 'வரகந்தாஜ்' வீரர்கள் கண்டார்கள். "ராணி - கி ஜய்" என்று கோஷித்துக் கொண்டு அவர்களும் ஓடி ஓடத்தைச் சூழ்ந்துகொண்டார் கள். அவர்கள்தான் ஓடத்தை முதலில் சூழ்ந்துகொண்டது. பிறகு படகுகள் வந்து அவர்களைச் சூழ்ந்துகொண்டன. சங்கு சத்தம் கேட்டதும், சில 'வர்கந்தாஜ்' வீரர்கள் வந்து தேவி யின் ஓடத்தில் ஏறினர்கள். அவர்கள், ஓடத்தை ஓட்டுவார் கள், சண்டை செய்வார்கள், தேவையிருந்தால் சிலம்பக் கம்பும் வீசுவார்கள். இருவருக்கும் சண்டை ஏற்படுவதாக ஒருவித மான சின்னமும் காணேம். அவர்வர்கள் தயாராக அவ

ரவர்கள் ஸ்தானங்களில் இருந்தார்கள். மேலும் பல யுத்த வீரர்களும் பிறகு ஓடத்தில் ஏறினார்கள். முன்னூறு நானூறு வீரர்கள், கரையில் இருந்தார்கள். சில ஆங்கிலேய சிப்பாய்கள் படகுகளிலிருந்து இறங்கி, துப்பாக்கிகளுடன் அவர்களை எதிர்த்துத் தாக்கினார்கள். எங்கும் நெருங்கிய கைச்சண்டை ஆரம்பமாயிற்று. தடியடி, துப்பாக்கிக் குத்து, கைக்குத்து இந்த மாதிரி ஒரே ரகளை யாகிவிட்டது. ஒருவரும் அவரவர் இருப்பிடத்தில் இருக்க முடியவில்லை.

சண்டை தூரத்திலிருந்து நடந்திருந்தால், 'வரகந்தாஜ்' ஆட்களால் சிப்பாய்களை எதிர்த்துப் போராட முடியாது; ஏனெனில் தூர நின்று தடிகளைப் பிரயோகம் செய்ய முடியாது. படகுகள் அருகில் இருந்ததால் ஆங்கில சிப்பாய்களுக்கு ஒன்றும் ஓடவில்லை.

பிரபுல்லா கீழே இறங்கி வந்தவுடனேயே இந்த ரகளை ஆரம்பமாகிவிட்டது. "பவானி டாகுருக்கு நான் சொல்லியனுப்பிய தகவல் போய்ச் சேர்ந்திருக்காது; அல்லது அவர் என் வார்த்தையை மீறியிருக்கிறார். நான் சாகக்கூடாது என்று தீர்மானித்திருக்கிறார். நல்லது! நான் என்னசெய்கிறேனென்று பார்க்கட்டும்" என்று பிரபுல்லா தனக்குள் சொல்லிக்கொண்டாள்.

அவள் கையில் ஒரு சமாதானக் கொடி இருந்தது. அதை அவள் கையில் உயர்த்திப் பிடித்துக்கொண்டிருந்தாள்.

அதைக் கண்டவுடனேயே இரு பக்கத்தினரும் திடீரென்று போரை நிறுத்தினார்கள். ஒரு பெரிய புயல் திடீரென்று நின்றது போலவும், அலைகடல் திடீரென்று அமர்ந்தது போலவும் ஒரு நிசப்தம் ஏற்பட்டது.

தேவி திரும்பிப் பார்த்தாள். பக்கத்தில் விரஜன் நின்றான். யுத்தம் நடந்துகொண்டிருந்தபொழுது தேவி வெளியே

வந்ததைக் கண்ட விரஜன் அவள் கூடவே போய்க்கொண்டிருந்தான்.

"இந்தக் கொடியை நீங்கள் இப்படியே பிடித்துக்கொண்டு நில்லுங்கள். நான் உள்ளே போய், திவாவுடனும் நிசியுடனும் ஒரு விஷயம் பேசவேண்டி யிருக்கிறது. ரங்கராஜன் இங்கே வந்தால் நான்தான் இந்த மாதிரி உத்தரவிட்டதாகச் சொல்லுங்கள்" என்று விரஜனிடம் சொல்லி தேவி அவன் கையில் கொடியைக் கொடுத்துவிட்டுப் போனாள். விரஜன் அதைப் பிடித்துக்கொண்டு அங்கேயே நின்றுகொண்டிருந்தான். ரங்கராஜன் வந்தான். விரஜன் கையிலிருக்கும் கொடியைக் கண்டதும் அவன் கண்கள் சிவந்தன.

"யார் உத்தரவின்பேரில் நீ இதைப் பிடித்துக்கொண்டு இங்கே நிற்கிறாய்?" என்று விரஜனை அதட்டிக்கேட்டான்.

"ராணிஜியின் உத்தரவு" என்று விரஜன் சாவதானமாகப் பதில் சொன்னான்.

"ராணிஜியின் உத்தரவு? நீ யாருங்காணும்?"

"உனக்குத் தெரியாதா?"

ரங்கராஜன் ஒரு தரம் அவனை உற்றுப் பார்த்துவிட்டு, "ஓகோ, நீரா! நீர் விரஜேசுவர பிரபுவல்லவா? இங்கே இருப்பதில் உமது நோக்கம் என்ன? அப்பனுக்கும் மகனுக்கும் ஒரே நோக்கந்தான் இருக்கக்கூடும்" என்றான்.

தேவியை, தன் தகப்பனைப்போல, மகனும் பிடித்துக்கொடுக்கத்தான் அங்கே ஓடத்திற்கு வந்திருந்தான் என்பது ரங்கராஜனுடைய எண்ணம். எனவே அவனைக் கட்டிப்போடும்படி இரண்டு ஆட்களுக்கு உத்தரவிட்டான். விரஜன் ஒருவிதமான ஆட்சேபணையும் செய்யவில்லை.

"என்னைக் கட்டுங்கள், அதனால் பாதகமில்லை. ஆனால் ஒரு விஷயம் சற்றுச் சொல்லுங்கள்: இந்தக் கொடியைப் பார்த்ததும் ஏன் இரு கட்சியினரும் போரை நிறுத்திவிட்டார்கள்?"

"அது தெரியாதா? கொடியைத் தாழ்த்திக் காட்டினால் ஆங்கிலேயர்கள் சண்டை போடமாட்டார்கள்."

"அது எனக்குத் தெரியாது. ராணிஜியின் உத்தரவின் பேரில்தான் செய்தேன் என்பதை நீ அறிவாய். உனக்கென்ன உத்தரவென்றால், நீ ராணியின் அறைக்குச் சென்று அங்கே உத்தரவு பெற்றுக்கொள்ள வேண்டியது."

ரங்கராஜன் உள்ளே சென்றான். கதவு தாளிடப்பட்டிருந்தது.

வெளியிலிருந்தே, "ராணியம்மா!" என்று கூப்பிட்டான் ரங்கராஜன்.

"யார், ரங்கராஜனா?" என்று உள்ளேயிருந்து பதில் வந்தது.

"ஆமாம், நமது ஓடத்திலிருந்து காட்டப்பட்ட கொடியால் சண்டை நின்றுவிட்டது."

"அது என்னுடைய உத்தரவுதான். இப்பொழுது நீ அதை எடுத்துக்கொண்டு லெப்டினன்ட் துரையிடம் போ! சண்டையால் உபயோகமில்லை. நான் கைதியாகத் தயாராய் இருக்கிறேன் என்று தெரிவி."

"என் சரீரம் இருக்கும் வரையில் அது நடக்காத காரியம் அம்மா!"

"உன் சரீரத்தை நீ கொடுத்தாலும் நீ என்னைக் காப்பாற்ற முடியாது, ரங்கராஜ்!"

"இருந்தாலும் நான் சும்மா இருக்கமாட்டேன், தாயே!"

"கேள், முட்டாள் மாதிரி பிடிவாதம் செய்யாதே! நீ உயிர்விட்டாலும் என்னைப் பாதுகாக்க முடியுமா? இந்தத் துப்பாக்கிகளின்முன் நமது தடிகள் என்ன செய்ய முடியும்?"

"ஏன் முடியாது?"

"செய்யலாம். ஆனால் ஒரு சொட்டு ரத்தம் சிந்துவதற்குள் நான் பிராணனை விட்டுவிடுவேன். ஆனால் நீங்கள் இன்னுமொன்று செய்யலாம். நான் தப்பியோடுவதற்கு ஏதாவது வழி தேடுங்கள், பார்ப்போம். என்னிடம் பணம் யதேஷ்டமாக இருக்கிறது. கம்பெனி ஆட்கள் எல்லாம் பணம் என்றால் வாயைத் திறப்பார்கள். எப்படி, என் யோசனை?"

பணம் கொடுத்துத் தப்பியோடுவது என்ற எண்ணம் ராணிக்கு எப்பொழுதும் கிடையாது. ரங்கராஜனை ஏமாற்றத்தான் அவள் அப்படிப் பேசினாள். தன்னுடைய ஆழ்ந்த கருத்துக்கொண்ட யோசனை ரங்கராஜனுக்கு அர்த்தமாகாது என்று அவளுக்குத் தெரியும். அதை அவன் புரிந்துகொள்ளவே முடியாது.

"என்னை முதலில் பிடித்துக்கொள்ளட்டும். நீங்கள் எல்லோரும் தப்பிப்போன பிறகு என்னைப் பணம் கொடுத்து மீட்கலாம்."

"கம்பெனி ஆட்களுக்குக் கொடுக்கப் பணம் ஓடத்திலேயே இருக்கிறது. நீங்கள் கைதியானால் ஓடத்தையே ஆங்கிலேயர்கள் கைப்பற்றிக்கொண்டு விடுவார்களே?

"அது கூடாதென்று சொல்லிவிடு. நான் கைதியாவேன். ஓடத்தை அவர்களிடம் ஒப்படைக்க முடியாது என்று சொல்லிவிடு. ஓடத்திலிருப்பதில் ஒரு துரும்புகூட அவர்களுக்குச் சொந்தமில்லை. ஓடத்திலிருக்கும் வேறு யாரையும் பிடிக்கக்கூடாதென்றும் சொல்லிவிடு. இந்த ஒப்பந்தத்தின்பேரில் நான் கைதியாகத் தயார் என்று சொல்."

"அவர்கள் கேட்காமல், ஓடத்தைக் கொள்ளையடிக்க வந்தால்?"

"தடுத்துவிடு! ஓடத்தை நெருங்கக்கூடாது, தொடக்கூடாது! நெருங்கினால் ஆங்கிலேயர்களுக்கு வந்தது ஆபத்து என்றும் எச்சரிக்கை செய்துவிடு. ஓடத்தின் அருகே வந்தால்

என்னை அவர்கள் பெற முடியாது. எந்த நிமிஷம், ஆங்கிலேயர் ஓடத்தில் ஏறுகிறார்களோ அந்த நிமிஷம் மறுபடியும் சண்டை தொடங்கும். அவர் ஒப்புக்கொண்டால் நானே அவர்கள் படகிற்குப் போகிறேன்."

உடனே ரங்கராஜனுக்கு விளங்கிவிட்டது. அடியில் ஏதோ ஆழ்ந்த தந்திரம் இருக்கிறதென்று உத்தரவை உடனே ஏற்றுக்கொண்டான்.

"பவானி டாகுர் எங்கே இருக்கிறார்?" என்று ராணி அவனைக் கேட்டாள்.

"அவர் கரையில் 'வரகந்தாஜ்' வீரர்களைக்கொண்டு சண்டை புரிந்துகொண்டிருந்தார். நான் சொன்னதை அவர் கேட்கவில்லை. இன்னும் அங்கேயேதான் இருப்பார் என்று நினைக்கிறேன்."

"முதலில் அவரிடம் போ! பூரா ஆட்களையும் கூட்டிக் கொண்டு பின் வாங்கச்சொல். என்னைக் காப்பாற்ற யுத்தம் செய்து பிரயோஜனமில்லையென்று சொல். நம்மைக் காக்க பகவான் உபாயம் செய்கிறார். மேலும் அவர் ஏதாவது ஆட்சேபித்தால் ஆகாயத்தைச் சுட்டிக்காட்டிச் சொல்—அவருக்கு உடனே அர்த்தமாகிவிடும்."

ரங்கராஜன் உடனேதான் பார்த்தான் ஆகாயத்தை. வைகாசி மாதத்துக் கருமேகங்கள் திரண்டுகொண்டிருந்தன.

"அம்மா! இன்னுமோர் விக்ஞாபனம். இதற்கெல்லாம் காரணமான ஹரவல்லபரின் மகன் விரஜேசுவர ராயை நான் இங்கே கண்டேன். கெட்ட எண்ணத்துடன்தான் இங்கே இருக்கிறார் என்பது நிச்சயம். அவரைக் கட்டிப்போட்டு விட்டேன்."

அதைக் கேட்டு நிசியும் திவாவும் கலகலவென்று சிரித்தார்கள்.

"அவரைக் கட்டாதே! இங்கேயே ரகசியமாக ஓரிடத்தில் இருக்கச்சொல். பிறகு கீழே இறங்கிவரும்படி திவா சொல்லும்போது வரட்டும்" என்றாள் தேவி.

உத்தரவுப்படி ரங்கராஜன் முதலில் விரஜேனை விடுதலை செய்து மேல்தட்டில் இருக்கச்செய்தான். பிறகு பவானி டாகுரிடம் சென்று தேவி சொன்னது யாவற்றையும் சொன்னான். ரங்கராஜன் மேகங்களைக் காண்பித்தான். டாகுர் பார்த்தார். உடனே மறு பேச்சின்றி அவர் சேனையைப் பின் வாங்கச்சொல்லி கடைசியில் முன்போல இருக்க உத்தரவிட்டார்.

அப்பொழுது திவாவும் நிசியும் படகோட்டிகளாக இருந்த வீரர்களிடம் ஏதோ ரகசியமாகச் சொல்லிவிட்டுப் போனார்கள்.

## ஆறும் அத்தியாயம்

## மகா அஸ்திரம்

பவானி டாதரிடம் விடைபெற்றுக்கொண்டு ரங்க ராஜன் கொடியைக் கையில் ஏந்தியவனாய் லெப்டினன்ட் துரையிடம் போய்ச்சேர்ந்தான். கையில் கொடி இருந்த தால் யாரும் ஒன்றும் சொல்லவில்லை. அவன் படகில் ஏறின தும் துரை அவனைப்பார்த்து, "நீ கொடியைக் காட்டுகிறாயே உன்னைக் கைதுசெய்யலாமா?" என்று கேட்டான்.

"என்னைப் பிடித்து என்ன செய்கிறது? யாரைப் பிடிக்க வந்திருக்கிறீர்களோ அவர்களைப் பிடித்துக்கொள்ளுங்கள். தகவலைச் சொல்லத்தான் வந்தேன்."

"என்ன, தேவி சௌதுராணி பிடிபடுகிறாளா தானாகவே?" என்று துரை ஆச்சரியத்துடன் கேட்டான்.

"ஆகா! அதைச் சொல்லத்தான் வந்தேன்."

"நீங்கள்?"

"நாங்கள் என்றால் யார்?"

"நீங்கள்தான். அவள் ஆட்கள்."

"எங்களை நீங்கள் ஒன்றும் செய்யக்கூடாது."

"உங்கள் எல்லோரையும் பிடிக்கவல்லவா நான் வந் திருக்கிறேன்!"

"யாரை? தேவியின் ஆட்களையா? இந்த ஆயிரம்பேர் கூட்டத்தில் யார் என்று கண்டுபிடிப்பீர்கள்?"

இப்படி ரங்கராஜன் சொல்லிக்கொண்டிருந்த பொழுது பவானி டாகுர் சைனியங்களைத் திருப்பிக்கொண்டுபோக பிரயத்தினம் செய்துகொண்டிருந்தார்.

"இந்த எல்லா ஆட்களுந்தான் கொள்ளைக்காரர்கள். எல்லோருமாகத்தானே சர்க்காருடன் சண்டை செய்கிறார்கள்?" என்றான் துரை.

"அவர்கள் யுத்தம் செய்யவில்லையே! திரும்பியல்லவா போய்க்கொண்டிருக்கிறார்கள்; பாருங்கள்?" என்றான் ரங்கராஜன்.

வரகந்தாஜ் சைனியம் ஓட முயலுகிறது என்று தோன்றிற்று துரைக்கு.

"என்ன! சமாதானம் செய்யும் பாவனையாக எல்லோரும் தப்பியோடப்பார்க்கிறீர்களா?" என்று கர்ஜித்தான்.

"வேண்டுமானால் எல்லோரையும் பிடித்துக்கொள்ளுங்கள். இதோ சமாதானக்கொடியை விட்டெறிந்து விடுகிறேன்" என்று சொல்லிவிட்டு ரங்கராஜன் அதை விட்டெறிந்துவிட்டான்.

ஆனால் சிப்பாய்கள் உத்தரவு ஒன்றும் இல்லாததால் 'வாயை மூடிக்கொண்டு' இருந்தார்கள்.

"இதேதடா சனியனாகப் போய்விட்டது. இவர்களைப் பின்னால் துரத்திக்கொண்டு போவது வீண். போக்கு காட்டிக்காட்டி அவர்கள் அடர்ந்த காட்டில் நுழைந்துவிடுவார்கள். இரவு ஒருபக்கம்; மேகங்களின் ஆர்ப்பாட்டம் ஒருபுறம். காட்டிற்குள் ஒரே இருட்டாக இருக்கும்; சந்தேகமில்லை. நமது சிப்பாய்களுக்கு வழிதெரியாது, புதிசு; அந்தப் பசங்களுக்கோ ரொம்ப நன்றாகத்தெரியும். அவர்களைப் பிடிப்பது என்பது சிப்பாய்களால் ஆகாத காரியம்" என்ற பல யோசனைகள் செய்து துரை அவர்களைத் துரத்திக்கொண்டு போகும் யோசனையைக் கைவிட்டான்.

"போகட்டும்; அவர்கள் தொலைபட்டும். நீர் சொன்ன படி நீங்கள் எல்லோரும் பிடிபடுகிறீர்களா?" என்று ரங்கராஜனைப் பார்த்துக் கேட்டான்.

"யாருமில்லையே! தேவி ஒருத்திதான் இருக்கிறாள்!"

"தேவி ஒருத்திதானா?"

"ஆமாம். உத்தரவானதை இங்கே தெரிவிக்கிறேன். நீங்கள் ஓடத்தை அண்டக்கூடாது. அதிலிருக்கும் சொத்து ஒன்றையும் தொடக்கூடாது. எங்கள் ஒருவரையுங்கூடப் பிடிக்கக்கூடாது. தேவி ராணியைமட்டுந்தான் பிடித்துக் கொள்ளவேண்டும்."

"எதற்காக?"

"எனக்கென்ன தெரியும்?"

"உனக்குத் தெரியுமோ தெரியாதோ; ஓடம் என்னுடையது இப்பொழுது. அதைச் சோதனை போடுகிறேன்."

"துரைவாள்! ஓடத்திற்குப் போகாதேயுங்கள். போனால் ஆபத்துத்தான்."

"என்ன ரொம்பப் பயப்படுத்துகிறாயே! ஐந்நூறு பேரைக் கையில் வைத்துக் கொண்டிருக்கும்பொழுது உங்கள் ஐந்தாறு பேரிடமிருந்து எனக்கு ஆபத்தோ!"

இவ்வாறு கூறியவண்ணம் துரை ஓடத்தைச் சூழ்ந்து சென்று அடையும்படி தன் ஆட்களுக்கு உத்தரவு கொடுத்தான்.

"ஓடத்தில் ஏறி அங்கிருக்கும் ஆயுதங்களையெல்லாம் பிடுங்கிக்கொண்டு வாருங்கள்" என்று துரை உரக்கக் கத்தினான்.

அது தேவியின் காதிற்கு எட்டிற்று.

உடனே தேவியும் உரக்க, "யாரிடம் ஆயுதங்கள் இருக்கின்றனவோ அவர்களெல்லாம் உடனே ஆயுதங்களை ஜலத்தில் போட்டுவிடுங்கள்!" என்று உத்தரவிட்டாள்.

அவ்வளவுதான்! ஓடத்திலிருந்த ஆயுதங்கள் எல்லாம் தண்ணீரில் மறைந்தன. ரங்கராஜனும் தன் ஆயுதங்களை எறிந்துவிட்டான்."

அதைக்கண்டு துரைக்கு சந்தோஷம் வந்துவிட்டது. "சரி போங்கள், நானும்வந்து ஓடத்தைப் பார்க்கிறேன், என்ன இருக்கிறதென்று" என்றான்.

"துரையே! நீங்கள் ரொம்ப தைரியமாகப் போகிறீர்கள், பிறகு என்னைக் குறை சொல்லவேண்டாம்."

"உன்னை என்ன சொல்லுவது?" என்று சொல்லிக்கொண்டு ஒரே ஒரு சிப்பாயைமட்டும் கூடக் கூட்டிக்கொண்டு ஓடத்தில் ஏறினான் துரை. ஓடத்தில்தான் ஒரு ஆயுதங்கூட இல்லையே என்று எண்ணினான். ஆனால் தேவியின் திடமான புத்தியே ஒரு மகா அஸ்திரம் என்பது அவனுக்குத் தெரியாது. அதன்முன் வேறு எந்த அஸ்திரமும் உபயோகமில்லை. தேவிக்கும் அதைத் தவிர வேறு அஸ்திரம் கிடையாது.

ரங்கராஜனுடன் துரை அறையின் கதவண்டைவந்தான். அந்த க்ஷணம் அறைக்கதவு திறந்தது. இருவரும் உள்ளே நுழைந்தார்கள். உள்ளே இருந்ததைக்கண்டு இருவருமே திகைத்துப் போனார்கள்.

விரஜன் கைதியாகி வந்த அன்று, எவ்வளவு அழகாக அறை அலங்காரம் செய்யப்பட்டிருந்ததோ அவ்வளவு திவ்வியமாக, இப்பொழுதும் இருந்தது. அதே சித்திரங்கள்; அதே அழகிய கம்பளங்கள். ஆனால் இன்று சிம்மாஸனத்தில் இருவர் உட்கார்ந்திருந்தார்கள். இருவரும் தங்கமயமான உடை தரித்திருந்தார்கள். மேலே இருந்த ஆபரணங்கள் மதிப்பற்றவை. துரைக்கு அவர்கள் யாரென்று தெரியவில்லை; ரங்கராஜனுக்குத் தெரிந்தது. ஒருத்தி நிசி, மற்றொருத்தி திவா.

துரைக்காக ஒரு வெள்ளி நாற்காலி போடப்பட்டிருந்தது. அதில் அவன் உட்கார்ந்தான். ரங்கராஜன் தேவி எங்கே என்று சுற்றுமுற்றும் பார்த்தான். ஒரு மூலையில் சாதாரண உடையில் தேவி நின்றுகொண்டிருந்தாள்.

"தேவி சௌதுராணி யார்? யாருடன் நான் பேச வேண்டியது?" என்று துரை கேட்டான்.

"என்னுடன் பேசும். நான்தான் தேவி" என்றாள் நிசி.

"ஆங்கிலேயர் முன்பும் விளையாடுகிறாயே! விளையாடுவதற்கு இதுவா சமயம்? லெப்டினன்ட் துரைவாள்! என் சகோதரி கொஞ்சம் தமாஷில் பிரியம் கொண்டவள். என்ன விசேஷம்? சொல்லும். நான்தான் தேவி சௌதுராணி!" என்றாள் திவா.

நிசி ரகசியமாக திவாவிடம், "ஐயையோ! உன்னால் எங்களைப்போல சாமர்த்தியமாக தப்பித்துக்கொண்டுவர முடியுமா?" என்று கோபித்துக் கொண்டுவிட்டு துரையைப் பார்த்து, "அவள் என் சகோதரி — தெரிகிறதா? — உடன் பிறந்த பாசத்தால் கட்டுண்டவளாய் என்னைக் காப்பாற்ற எண்ணி உங்களிடம் இப்படிப் பேசுகிறாள். என் கூடப்பிறந்தவளை ஆபத்திற்குள்ளாக்கிவிட்டு நான் எதற்காக இருக்க வேண்டும்? வங்காளிப் பெண்கள் உயிரைத் துச்சமாகக் கருதுபவர்கள். துக்கமின்றி உயிரைக் கொடுப்போம். போவோமா? நீங்கள் எங்கு கூட்டிக்கொண்டு போகிறீர்களோ அங்கே வரத் தயார்! நான்தான் தேவி சௌதுராணி!" என்றாள்.

"துரையே! இயேசு கிறிஸ்து ஆணையாக அவள் குற்றமற்றவள். நான்தான் தேவி, வேண்டுமானால் பிடித்துக் கொண்டுபோங்கள். உங்கள் இஷ்டம்" என்றாள் திவா.

துரைக்கு அசாத்தியக் கோபம் வந்துவிட்டது. "என்னிடம் என்ன விளையாட்டா செய்கிறீர்கள் நீங்கள்? ஓய்,

இவர்களில் யார் தேவி சௌதுராணி, நீர் உண்மையைச் சொல்லும்" என்று ரங்கராஜனைப்பார்த்து துரை கேட்டான்.

ரங்கராஜனுக்கு ஒன்றும் புரியவில்லை. ஆனால் ஏதோ உள் வேலை நடக்கிறது என்றுமட்டும் ஊகித்துக்கொண்டான். எனவே ஒருவிதமாக யோசனை செய்துகொண்டு கைகூப்பிய வண்ணம், "யஜமான்! இவர்தான் தேவி!" என்று நிசியைக் காட்டினான்.

அப்பொழுது தேவி முதல் முதலாக வாயைத் திறந்து பேசினாள்.

"நான் இப்பொழுது பேசுவது ரொம்ப தப்பு. ஆனால் இந்த வார்த்தை பொய். எனக்குத் தெரிந்து எல்லோரும் சாவதைத் தடுக்கவேண்டிப் பேசுகிறேன். அவர் சொல்வது பொய்; அவள் தேவியல்ல. தேவியை அவள் தாய்போல நேசிக்கிறாள். அதனால்தான் அப்படிச் சொல்லுகிறாள்."

"பின் தேவி யார்?" என்று துரை தேவியைக் கேட்டான்.

"நான்தான் தேவி!" என்று தேவி சொன்னாள்.

இதைக் கேட்டதும் அங்கே ஒரே ரகளையாய்ப் போய் விட்டது. நிசி, "நான் தேவி" என்றாள். திவா, "நான் தேவி" என்றாள். தேவியே, "நான் தேவி" என்றாள். ரங்கராஜன் நிசியைக் காட்டி, "அவள் தேவி!" என்றான். ஒரே களேபரமாகிவிட்டது.

"சரி, உங்கள் இருவரில் ஒருத்தி ராணியாக இருக்க வேண்டும். இப்பொழுது எனக்கு யார் தேவி என்று சொல்ல மறுக்கிறீர்கள்? நான் இருவரையும் கைது செய்து கொண்டு போகிறேன்" என்றான் துரை.

"இந்தத் தொந்தரவு எதற்கு? உங்கள்கூட ஹரவல்லபர் இருக்கிறாரல்லவா? அவர் வந்தால் யார் உண்மையாக தேவி என்று சொல்லிவிடுவார்" என்று நிசி சொன்னாள்.

ஹரவல்லபரை அங்கே வரவழைக்கவேண்டு மென்பது தேவியின் உத்தேசம். ஹரவல்லபரைக் காப்பாற்றாமல் தன்னை மீட்டுக்கொள்ள தேவிக்கு இஷ்டமில்லை. அவரை அங்கே வரவழைத்துவிட்டுப் பிறகு எல்லாம் செய்யவேண்டு மென்பது அவள் தீர்மானம்.

"பேஷ்! அது சரியான யோசனைதான்" என்று துரைக்குப் பட்டது. உடனே கூடவந்திருந்த சிப்பாயைப் பார்த்து, "ஹரவல்லபரைக் கூப்பிடு!" என்று உத்தரவிட்டான்.

அவன் ஒரு படகிலிருந்த ஆள்களைக் கூப்பிட்டு துரையின் உத்தரவைத் தெரிவித்தான். அவ்வளவுதான். எங்கே பார்த்தாலும் ஒரே கூச்சல். "ஹரவல்லபர் யார்? அவர் எங்கே?" "ஓய் ஹரவல்லபரே!" என்று ஒரே கூப்பாடு.

## ஏழாம் அத்தியாயம்

## ஹரவல்லபர் திணறல்

ஹரவல்லப ராய் யுத்தம் நடந்த இடத்திற்கே வந்திருந்தார்; அவர் இஷ்டப்பட்டு அல்ல, எதிர்பாராமல். அவர் சிப்பாய்களுடன் வரவில்லை. ராணியின் ஓடத்தை தூர இருந்தே காட்டிவிட்டுப் போய்விட்டார். அதன் பிறகு, ஆகாயத்தில் மேகங்கள் கவிந்திருப்பதைக் கண்டார். மழை பிடித்துக்கொண்டால் தனது சின்னத்தோணி முழுகிப் போகுமோ என்று திகில் பிடித்துக்கொண்டது.

ஆகையால் ஹரவல்லபராய் அவர்கள் தோணியிலிருந்து கரைக்குப் போனார். ஆனால் கரையில் எங்கும் யாரையும் காணோம். ஸ்வாமிக்குக் குடல் நடுக்க மெடுத்துவிட்டது தனியாக இருந்ததில். பாம்பு, புலி, திருடர், பிசாசு—எல்லா பயமும் ஒருங்கே சேர்ந்துவந்து அவரைப் பிடித்துக்கொண்டது. "இதேதடா சனியனில் வந்து அகப்பட்டுக்கொண்டோமே!" என்று விழித்தார். அழுகைகூட வந்துவிட்டது அவருக்கு.

துப்பாக்கி குண்டு சத்தம், சைனியங்கள் கூச்சலிடும் சத்தம் எல்லாம் அவர் காதில் விழுந்து கொண்டே இருந்தது அப்பொழுது திடீரென்று நின்றுவிட்டது. "சரி சிப்பாய்கள் ஜயித்துவிட்டார்கள். கொள்ளைக்காரர்கள் தோற்றுத்தான் போயிருக்கவேண்டும். இல்லாவிட்டால்

திடீரென்று சண்டை ஏன் நிற்கிறது?" என்று மனத்தில் ஒருவிதமான தீர்மானத்திற்கு வந்தார். உடனே மனதை திடப்படுத்திக்கொண்டு மறுபடியும் தோணியில் ஏறி யுத்தம் நடைபெறும் இடத்திற்கே வந்துவிட்டார்.

அங்கே, "ஹரவல்லபர், ஹரவல்லபர்!" என்று ஒரே சத்தமாக இருந்தது. அவர் உடனே ராணியின் ஓடத்தில் ஏறினார். சிப்பாயிடம் போய், "எதற்காகக் கத்துகிறீர்கள்? நான்தான் ஹரவல்லபர்!" என்றார்.

"உம்மை காப்டன் துரை கூப்பிடுகிறார்."

"அவர் எங்கே இருக்கிறார்?

"அறைக்குள்ளே இருக்கிறார். உள்ளே போம்!"

ஹரவல்லபர் வந்ததை அறிந்த ராணி தான் உள்ளே போகப் புறப்பட்டாள். காப்டன் துரைக்குக் கொஞ்சம் சிற்றுண்டி ஏற்பாடு செய்யுங்கள்" என்று சொல்லிவிட்டு உள்ளே போய்விட்டாள்.

ஹரவல்லபர் உள்ளே நுழைந்தார். வாசற்படியில் நின்றபடியே அறையின் அலங்காரத்தையும் செல்வத்தையும் பார்த்தார். திவா, நிசி—இவர்களுடைய அழகையும் அலங்காரத்தையும் பார்த்தார். பிரமித்துப்போனார் பேர்வழி. துரைக்கு சலாம்செய்ய மறந்துபோய் நிசிக்கு சலாம்செய்தார்.

"சௌக்கியமா கான்சாகேப்!" என்று நிசி சிரித்துக் கொண்டே கேட்டாள்.

"சலாம் சாகேப்!" என்றாள் திவாவும்.

"ஓய்! இவர்கள் இரண்டுபேரும் 'நான் தேவி' 'நான் தேவி' என்கிறார்கள். உண்மையில் யார் தேவி சௌதுராணி சொல்லும் சீக்கிரம். இல்லாதபோனால் உம்மைக் கட்டி வைத்து அடிப்பேன்!" என்றான் துரை.

ஹரவல்லபருக்குத் தூக்கிவாரிப் போட்டுவிட்டது. "ஐயையோ! இதென்னடா எழவு! இதில் வந்து மாட்டிக்

கொண்டோமே!" என்று கலங்கினர். தேவி சௌதுராணியை அவர் ஜன்மத்தில் பார்த்ததில்லை. நிசி கலகலவென்று சிரிக்க ஆரம்பித்தாள். ஒன்றும் சொல்லத் தெரியாமல், "மறந்து போய்விட்டேனே!" என்று சொல்லி ஹரவல்லபர் திவாவைக் காண்பித்தார். திவா மெய்ம்மறந்து சிரித்தாள். திகிலடைந்துபோய் ஹரவல்லபர் நிசியைச் சுட்டிக்காட்டினர். துரைக்குக் கோபம் பொங்கிவிட்டது.

"டாம், பிளட்டி! என்ன ஐயா பிதற்றுகிறாய்?" என்று அதட்டினன்.

"துரைகளே, கோபிக்கவேண்டாம். அவருக்குத் தெரியாது. அவர் மகனுக்குத் தெரியும். அவர் மகன் ஓடத்தின் மேல்தட்டில் இருக்கிறார். அவரை வரவழியுங்கள். அவர் சொல்லிவிடுவார்" என்றாள் திவா.

ஹரவல்லபர் ஆச்சரியத்தில் தாவிக் குதித்தார்.

"என் மகனா?" என்று கத்தினர்.

"அப்படித்தான் கேள்வி" என்றாள் திவா சாவதானமாக.

"விரஜேசுவரனா?"

"அவரேதான்!"

"எங்கே?"

"மேல்தட்டில்."

"இங்கே எதற்காக இருக்கிறான்?"

"அவருக்குத்தான் தெரியும்."

"அவரைக் கொண்டுவா!" என்று அதற்குள் துரை உத்தரவிட்டான்.

திவா ரங்கராஜனுக்கு ஜாடை செய்தாள். அவன் மேல் தட்டிற்குப் போய், "ஐயா வாரும், ஜல்தி வர உத்தரவு" என்றான்.

விரஜன் கீழே இறங்கிவந்தான். தேவி முதலிலேயே அவனுக்குத் தெரிவித்திருந்தாள் எல்லாவற்றையும். அதனல்

தான் அவன் உடனே இறங்கிவந்தான். அவ்வளவு முன் ஏற்பாடு அவள் காரியங்களில்!

துரை அவனைப் பார்த்து "உனக்கு தேவி சௌதுராணி யார் என்று தெரியுமா?" என்று கேட்டான்.

"தெரியும்."

"இங்கே தேவி இருக்கிறாளா?"

"இல்லை."

துரைக்குக் கோபம் தலைக்குமேலே வந்தது. "என்ன, இந்த இரண்டுபேரில் ஒருத்தி தேவி இல்லையா?" என்று கர்ஜித்தான்.

"இவர்கள் அவளுடைய வேலைக்காரிகள்" என்றான் விரஜன்.

"ஏ, உனக்கு, தேவி சௌதுராணியைத் தெரியுமா?"

"நன்றாகத் தெரியும்."

"சரி, தேவி இங்கே இல்லை என்றால் இந்த ஓடத்தில் எங்காவது ஒளிந்துகொண்டுதான் இருக்கவேண்டும். சற்று முன் இங்கே வேலைக்காரிபோல நின்றவள்தான் தேவி என்று நினைக்கிறேன். நான் ஓடத்தை இப்பொழுது சோதனை போடுகிறேன். நீ கூடவந்து அடையாளம் காட்டு."

"நீ வேண்டுமானால் சோதனை போட்டுக்கொள். நான் எதற்காகக் கூடவந்து அடையாளம் சொல்லுவது?" என்று விரஜன் முறைப்பாக பதில் சொன்னான்.

துரைக்கு ஆச்சரியமாகப் போய்விட்டது. "என்ன வோய், ரொம்ப பெரிய மனுஷனோ? நீ கூட்டாளி இல்லை?" என்றான்.

"இல்லை" என்று சொல்லிக்கொண்டு விரஜன் துரையை ஓர் அடி அடித்தான்.

"ஐயையோ, என்னடா செய்துவிட்டாய் பாபி! வந்து விட்டதே மோசம்!" என்று ஹரவல்லபர் கூத்தாடிக் கதற ஆரம்பித்தார்.

"யஜமான்! புயல் கிளம்பிவிட்டது" என்று வெளியே யிருந்து ஜமேதார் வந்து சொன்னான்.

ஜோவென்று சத்தம் செய்துகொண்டு காற்றடிப்பது கேட்டது.

அதே நிமிஷம்—விரஜன் துரையை அடித்த நிமிஷம்— மறுபடியும் சங்கு சத்தம் கேட்டது.

முன்பே சொல்லியிருக்கிறோம். ஓடத்தைக் கயிறுகள் போட்டு இழுத்து முளைகளில் கட்டியிருந்தார்கள் என்று. அங்கே இருவர் தயாராக இருந்தார்கள். சங்கு சத்தம் கேட்டதுதான் தாமதம்-கயிறுகளை அவிழ்த்துவிட்டார்கள். கரையில் ஓடத்தைச் சுற்றி நின்ற சிப்பாய்கள் உடனே துப்பாக்கி எடுத்துக் குறி வைத்தார்கள். ஆனால் அவர்கள் யாதொன்றும் செய்வதற்குமுன், அவ்வளவு துரிதமாக, ஓடம் அவர்கள் குறியிலிருந்து தப்பிவிட்டது. கண்மூடிக் கண் திறப்பதற்குள் நொடி நேரத்தில் அந்த ஐந்நூறு சிப்பாய்கள் சண்டை செய்யவே வகையின்றி தோற்றுப்போய் நின்றார் கள்!

ஓடத்திற்கு நாலுபக்கங்களிலும் காவலாளர்கள் இருந் தார்கள் என்று முன்பே சொன்னோம். நடுவில் நிசியும் திவா வும் வந்து ரகசியமாக படகோட்டிகளிடம் ஏதோ சொன்ன தாகவும் சொன்னோம். அதன்படிதான் முளைகளின் பக்கத் தில் ஆள்கள் தயாராக இருந்தார்கள். சங்கு சத்தம் கேட் டதும் அவர்கள் எல்லாக் கயிறுகளையும் அவிழ்த்துவிட்டார் கள். குபீலென்று அவர்கள் எல்லோரும் அதில் பாய்ந்து ஏறிக்கொண்டார்கள்.

புயற்காற்றில் ஓடம் ஒருதரம் கிர்ரென்று சுற்றிற்று;— அவ்வளவுதான், விர்ரென்று அம்புபோலக் கிளம்பி விட்டது. துப்பாக்கி தூக்கினவர்கள் தூக்கினபடியே நின்றார்கள். ஓடம் மாயமாய் மறைந்துவிட்டது. துரை,

விரஜனைத் திரும்பி அடிப்பதற்கு முயன்றுகொண்டிருக்கையில் இதெல்லாம் நடந்தது; ஓங்கிய கையுடன் துரை, படகு போன வேகத்தில் கீழே தள்ளப்பட்டு திவாவின் காலடியில் விழுந்தான். திடீரென்று ஓடம் கிளம்பியதால் எல்லோரும் ஒருவர்மேல் ஒருவர் விழுந்தார்கள். ஹரவல்லபர் நிசியின் கழுத்தின்மேல் சாய்ந்தார். அங்கிருந்து உருண்டு கீழே விழுந்தார்.

"சரி, ஓடம் முழுகிப்போகப்போகிறது. எல்லோரும் சாகத்தான் போகிறோம், இனிமேல் துர்க்கை ஜபம் செய்து என்ன பயன்?" என்று எண்ணினார்.

ஆனால் ஓடம் கவிழவில்லை. காற்றையும் ஜலத்தையும் பிளந்துகொண்டு மின்னல் வேகத்தில் முன்னே பாய்ந்து சென்றது. கீழே விழுந்தவர்கள் மெள்ளச் சமாளித்துக் கொண்டு எழுந்து நின்றார்கள். துரை மறுபடியும் விரஜனை அடிக்க முஷ்டியை ஓங்கினான்.

அப்பொழுது சிறு படகுகளில் ஜலத்திலிருந்த கம்பெனி ஆட்களின்மேல் பாய்ந்தது ஓடம். பலர் ஜலத்தில் குதித்து முழுகி உயிர் தப்பினார்கள். சிலர் தூரத்திலேயே ஓடத்தைக்கண்டு ஓடிவிட்டார்கள். யாரும் சாகவில்லை. படகுகள்மட்டும் முழுகிப்போய் விட்டன. சிப்பாய் சைனியம் சின்னபின்னமாகிவிட்டது. ஒரு நிமிஷத்தில் தேவி அவர்களை வென்றாள். ஹரவல்லபரும் துரையும் கைதிகளானார்கள். நிமிஷத்தில் தேவிக்கு ஜயம். தேவி ஆகாயத்தைப் பார்த்து, "என்னைக் காப்பாற்ற பகவான்தான் உபாயம் செய்தார்!" என்றாள்.

## எட்டாம் அத்தியாயம்

# ஹரவல்லபர் அல்பத்தனம்

ஓடம் ஜலராசியைப் பிளந்துகொண்டு வெகுவேகமாக சீறிக்கொண்டு போயிற்று. பயங்கரமான சப்தம். அலைகள் ஓடத்தின் முகப்பில் எழுந்து எழுந்து அடித்த சத்தம் கோரமாக இருந்தது. மழையின் சத்தமே பயங்கரமாயிருந்தது. ஆனால் ஓடத்தின் அமைப்பு அசாதாரணமானது. மாலுமிகள் திறமையும் பயிற்சியும் பிரசித்தமானவை. அந்தப் புயலின்முன் ஓடம் ஒரு தடையுமின்றி சென்றுகொண்டிருந்தது. அது கிளம்பினபொழுது பூசணிக்காய்கள் மாதிரி உருண்டு விழுந்த எல்லோரும் அவரவர்கள் இடத்தில் எழுந்து நின்றார்கள். ஹரவல்லப ராய் அவர்கள் பூணூலை விரலில் மாட்டிக்கொண்டு துர்க்கையின் பெயரை ஜபிக்க ஆரம்பித்தார்-இனிமேல் ஓடம் கவிழ்ந்து விடாமல் இருக்க.

நடுவில் துரை விரஜனை அடிக்க முயன்றான். விரஜன் அவன் கைகளை கெட்டியாகப் பிடித்துக்கொண்டு விட்டான்.

" அடேடே! என்னடா அக்கிரமம்? அவரை இப்படிச் செய்யலாமா ?" என்று அலறினார் ஹரவல்லபர்.

ரங்கராஜன் அறைவாயிலில் காவலாக உட்கார்ந்திருந்தான்.

திவா தேவியிடம் சென்றாள். நிசி மட்டும் அங்கேயே இருந்தாள். அவளுக்கு அங்கே கொஞ்சம் வேலையிருந்தது.

துரைக்குக் கவலையாகப் போய் விட்டது. "இந்தக் கொள்ளைக்காரர் கையிலிருந்து எப்படித் தப்புவது? யாரைப் பிடிக்க வந்தோமோ அவள் கையிலேயே அகப்பட்டுக் கொண்டுவிட்டோமே! பெண்களிடம் தோல்வி யடைந்து விட்டுப்போய் நம் ஜாதியினர் முகத்தில் எப்படி விழிப்பது? போகவே கூடாது" என்றெல்லாம் யோசனைசெய்து கொண்டிருந்தான்.

ஹரவல்லபருக்குப் பாவம் ஒரு இடத்திலும் இருப்புக் கொள்ளவில்லை. நிசியின் அருகில் வந்து உட்கார்ந்தார்.

"ஏன், கொஞ்சநேரம் தூங்குகிறதுதானே!" என்றாள் நிசி.

"தூக்கமா! இப்பொழுது எப்படித் தூக்கம் வரும் அம்மா!"

"இன்று தூங்கவில்லை யென்றால் இனிமேல் ஏது?" என்றாள் நிசி.

"அதென்ன?" என்று திகிலுடன் கேட்டார் ஹரவல்லபர்.

"பிறகு தூங்குவதற்கு உங்களுக்கு நாள் எங்கே கிடைக்கப் போகிறது?"

"ஏன்?"

"நீங்கள் தேவி சௌதுராணியைப் பிடித்துக்கொடுக்க வந்திருக்கிறீர்கள்."

"அது—அது—எப்படித் தெரியும்?"

"பிடிபடவேண்டிய தேவி, எங்கே இருக்கிறாள் தெரியுமா?"

"நான்—இப்பொழுது—என்ன?"

"இப்பொழுது ஒன்றும் இல்லை. பிடிபட்டுவிட்டாள்."

"ஓ—நான்—எனக்கு ஒன்றும்" என்று உளற ஆரம்பித்தார் ராய்.

"தேவி உங்களை ஒன்றும் செய்யமாட்டாள்: பயப்பட்டுச் சாகாதேயும். உங்களுக்கு ரொம்ப ஒத்தாசைதான் செய்திருக்கிறாள். உமக்கு ஐம்பதினாயிரம் மோகரா கடன் கொடுத்துக் காப்பாற்றினாள். அதற்குப் பிரதி உபகாரமாக நீர் அவளைப் பிடித்துக்கொடுக்க வந்தீர். உம் யோக்கியதை எப்படிப்பட்டது, சொல்ல முடியுமா?"

ராய் வாயை மூடிக்கொண்டு இருந்தார்.

"இப்பொழுதே தூங்கும் என்று எதற்காகச் சொல்லுகிறேன் என்றால் மறுபடியும் நீர் இரவின் முகத்தில் விழிக்க மாட்டீர். ஓடம் எங்கே போய்க்கொண்டிருக்கிறது தெரியுமா உமக்கு?"

ஹரவல்லபருக்கு வாய் பேசவரவில்லை.

"டாகினி ச்மசானம் என்று ஒரு பெரிய சுடுகாடு இருக்கிறது. நாங்கள் கொல்லவேண்டியவர்களை யெல்லாம் அங்கே கொண்டுபோய்த் தான் கொல்லுகிறது. ஓடம் அங்கேதான் போய்க் கொண்டிருக்கிறது. அங்கே போனதும் துரையைக் கட்டிப்போட்டு விடுவோம். உம்மைப்பற்றி என்ன உத்தரவாகி யிருக்கிறது தெரியுமா?"

ஹரவல்லபர் அழ ஆரம்பித்தார்.

கை கூப்பிக்கொண்டு "என்னைக் காப்பாற்றுங்கள்" என்றார்.

"காப்பாற்றுவதா? உம்மைக் கழுவில் ஏற்றும்படி உத்தரவு."

ஹரவல்லபர் உரக்க அழ ஆரம்பித்துவிட்டார். புயலின் சத்தம் அதிகமாக இருந்தது. ஆகையால் வெளியே போயிருந்த விரஜனின் காதில் அது படவில்லை. துரை காதில் பட்டது.

"ஓய் சும்மா இருங்காணும். என் ஊளை யிடுகிறாய்? என்றைக்கும் சாவுதான்" என்றான் அவன்.

அதெல்லாம் ஒன்றும் ராயின் காதில் விழவில்லே. நிசியிடம் கைகூப்பிய வண்ணம், "அம்மா, எப்படியாவது என்னைக் காப்பாற்ற முடியாதா?" என்று கெஞ்சினர்.

"உம்மைப் போன்ற நராதமர்களுக்கு உபகாரம் செய்தால் பாபமல்லவா வந்துசேரும்? எங்கள் ராணி தயாமூர்த்தி. ஆனல் உம்மைப்போன்றவர்கள் அவரிடம் தயைக்கு பிச்சை கேட்கலாமா?"

"நான் லக்ஷ ரூபாய் தருகிறேன்."

"வாயால் சொல்ல வெட்கம் இல்லே? ஐம்பதினயிரத்துக்கு இந்த மாதிரி துரோகம் செய்தீர்? லக்ஷம் கொடுக்கப் போகிறீரோ?"

"உண்மையாகச் சொல்லுகிறபடி செய்கிறேன்."

"உம்மைப்போல ஆட்கள் உலகத்தில் உடனே சொன்னதைச் செய்துவிடுகிறர்கள்."

"உனக்கு கோடி கோடி நமஸ்காரம். உன் கைகளைப் பிடித்து மன்றடிக் கேட்டுக்கொள்ளுகிறேன்" என்று கெஞ்சி ஹரவல்லபர் நிசியின் கைகளைப் பிடிக்கப்போனர்.

நிசி சாமார்த்தியமாக விலகிக்கொண்டு, "மெள்ள, மெள்ள, இந்தக் கைகள் ஸ்ரீ கிருஷ்ணன் பிடித்தவை. நீர் சொல்லுவது செய்வது ஒன்றையும் நான் நம்பமாட்டேன்; நீர் திருடர், நன்றிகெட்டவர், அல்பர், நான் எப்படி உம் வார்த்தைகளை நம்புவது?" என்றள்.

"எப்படி சத்தியம் செய்யச் சொல்லுகிறயோ அப்படி செய்துகொடுக்கிறேன்."

"உமக்கு சத்தியம் வேறு இருக்கிறது! என்ன சத்தியம் செய்கிறீர்?"

"கங்கை ஜலம், துளசி—ஏதாவது கொடு—அதைத் தொட்டு சத்தியம் செய்கிறேன்."

"விரஜேசுவரன் தலையில் கைவைத்து சத்தியம் பண்ணிக் கொடுப்பீரா?"

"அது மாட்டேன். உங்கள் இஷ்டம்போல் செய்யுங்கள்" என்றார் ஹரவல்லபர்.

ஆனால் இந்த வேஷம் கொஞ்ச காலந்தான் இருந்தது. மறுபடியும்; "என்ன சத்தியம் பண்ணச் சொல்லுகிறாயோ அதைச் செய்கிறேன். காப்பாற்று தாயே!" என்றார்.

"சரி, சத்தியம் செய்யவேண்டாம். நீர் எங்கள் கையில் தானே அகப்பட்டுக் கொண்டிருக்கிறீர்! இதோ பாருங்கள், நான் குலீன வீட்டுப் பெண். எனக்கு ஒரு வரன் கிடைத்து விட்டது.(இதெல்லாம் பொய் என்று வாசகருக்குத் தெரியுமே) என் தங்கை ஒருத்தி இருக்கிறாள். அவளுக்கு வரன் கிடைக்கவில்லை. இன்னும் கலியாணம் ஆகாமல் இருக்கிறாள்."

"வயதென்ன ஆகிறது?"

"இருபத்தைந்து முப்பதாகிறது."

"குலீன வகுப்புப் பெண்கள் அந்த மாதிரி பலர் இருக்கிறார்களா?"

"இருக்கிறார்கள்; கலியாணமாகாமல் கெட்டும் போகிறார்கள். அந்த கதியும் ஏற்படுகிறது. நீங்கள் என் தகப்பனாருக்குச் சம அந்தஸ்துள்ள குடும்பஸ்தர். நீங்கள் என் தங்கையைக் கலியாணம் செய்துகொண்டால் எங்கள் தகப்பனார் குலம் கெடாமல் இருக்கும். நானும் அதைச் சாக்காகச் சொல்லி தேவியிடம் உமக்கு மன்னிப்பு வாங்கித் தரமுடியும்."

"ஐயோ, எனக்கு வயதாகிவிட்டது. என் மகன் இருக்கிறான். அவன் கலியாணம் செய்துகொள்ளக்கூடாதா?"

"அவர் ஒப்புக்கொள்ள வேண்டுமே!"

"நான் ஒப்புக்கொள்ளும்படி செய்கிறேன்."

"அப்படியானால் நாளைக்குக் காலையிலேயே உத்தரவு கொடுத்துவிடலாம். உங்கள் வீட்டுக்குப் பல்லக்கு அனுப்பு

கிறேன். நீங்கள் முதலில் வீட்டுக்குப்போய் வேண்டிய ஏற்பாடுகள் செய்யுங்கள். நான் வரனுக்கும் பெண்ணுக்கும் கலியாணம் இங்கேயே செய்து இருவரையும் அனுப்பு கிறேன்."

ஹரவல்லபர் மூச்சுவிட்டார். அப்பாட! கழுவேறுவதற்கும் நாட்டுப்பெண் கிடைப்பதற்கும் எவ்வளவு தூரம்?

"பின் நீ போய் தேவியிடம் யாவற்றையும் சொல்."

"போகிறேன்" என்று சொல்லி நிசி இரண்டாவது அறைக்குள் நுழைந்தாள்.

அவள் போனவுடன் துரை ஹரவல்லபரைப் பார்த்து "ஓய் பெண்பிள்ளேயோடு என்ன பேசிக்கொண்டிருந்தீர்?" என்று கேட்டான்.

"ஒன்றும் விசேஷமில்லே."

"அழுதீரே ஏன்?"

"யார்? அழவில்லேயே!"

"வங்காளிகளெல்லாம் இப்படித்தான் புளுகுவார்கள் போலிருக்கிறது."

நிசி உள்ளே போனதும் தேவி, "என் மாமனுருடன் இத்தனே நேரம் என்ன பேசிக்கொண் டிருந்தாய்?" என்று கேட்டாள்.

## ஒன்பதாம் அத்தியாயம்

## "பணைவனுக்கருள்வாய்!"

புயல் நின்றது; ஓடமும் நின்றது! தேவி ஜன்னல் வழியாகப் பார்த்தாள். விடிந்துவிட்டது.

"இன்று விடிந்த வேளை நல்லவேளை!" என்றாள் நிசி.

"நீ விடிவு, நான் காலை."

"என்று எனக்கு விடியுமோ அன்றுதான் நான் நல்ல நாள் என்று சொல்லுவேன். இந்த அந்தகாரத்திற்கு விடிவு ஏது? இன்று தேவி சௌதுராணிக்கு நல்ல தினம்—என் இன்றுதான் அவளுக்கு முடிவும்."

"என்னடி சொல்லுகிறாய்?" என்று தேவி வேடிக்கை யாகக் கேட்டாள்.

"நல்ல சேதிதான் எல்லாம். தேவி சௌதுராணி முடிவு பெறுகிறாள். பிரபுல்லா புக்ககம் போகிறாள்."

"ஓடத்தைக் கட்டச் சொல்."

நிசி உத்தரவு கொடுக்கப் போனாள். மாலுமிகள் அதைக் கரைப்பக்கமாக ஓட்டிக் கட்டினார்கள்.

"ரங்கராஜா இங்கே வா! எங்கே இருக்கிறோம்? ரங்க புரம் எவ்வளவு தூரம் இருக்கிறது? பூதநாதபுரம் எவ்வளவு தூரம் இருக்கிறது?" என்று தேவி கேட்டாள்.

"ஓர் இரவில் நாலுநாள் பயணம் செய்துவிட்டோம். ரங்கபுரம் இங்கே இருந்து பலதினப் பிரயாணம். பூதநாதத் திற்கு ரோட்டு வழியாக ஒரு நாளிலே போகலாம்."

"பல்லக்குத் தூக்க ஆட்கள் கிடைப்பார்களா?"

"நான் பிரயத்தினப்பட்டால் கிடைக்கும்."

"சரி. அப்படியானால் மாமனாருக்கு ஸ்நானபானம் செய்வி" என்று தேவி நிசியிடம் சொன்னாள்.

"ஏது தடபுடலாக இருக்கிறது உபசாரம்?" என்று கேட்டாள் திவா.

"மாமனாரின் பிள்ளை இரவு பூராவும் வெளியே இருந்திருக்கிறார் தெரியவில்லையா?" என்று குறும்பாகச் சொல்லிக் கொண்டு வெளியே போனாள் தேவி.

ஹரவல்லபர் காதில் விழும்படியாக ரங்கராஜனிடம் "துரையை விட்டுவிடவேண்டும். பிராம்மணரை தூக்கில் போடவேண்டாம். அவரைக் காவல் கைதியாக வைத்து ஸ்நானபானம் செய்வி" என்றாள்.

"என்னம்மா, என்பேரில் என்ன உத்தரவாயிற்று?" என்று ஹரவல்லபர் கவலையுடன் நிசியைக் கேட்டார்.

நிசி கண்ணைச் சிமிட்டிக்கொண்டு, "தேவி என் பிரார்த்தனையை ஒப்புக்கொண்டு விட்டாள். நீங்கள் ஸ்நானம் செய்து விட்டு வாருங்கள்" என்றாள்.

"துரையை விட்டுவிடச்சொல். அவரை ரங்கபுரத்திற்கு திரும்பிப்போகச் சொல். ரொம்ப தூரமிருக்கிறதால் நூறு மோகரா அவருக்கு வழிச்செலவிற்குக் கொடு" என்று தேவி நிசியிடம் சொன்னாள்.

நூறு தங்க நாணயங்களைக் கொண்டுவந்து நிசி ரங்கராஜனிடம் கொடுத்தாள். காதோடு காதாய் உத்தரவும் கொடுத்தாள். அதில் தேவி சொன்னதைக் காட்டிலும் கொஞ்சம் அதிகமாக இருந்தது விஷயம்.

ரங்கராஜன் இரண்டு வீரர்களைக்கொண்டு துரையைப் பிடித்து எழுப்பச் சொன்னான்.

"எங்கே போக வேண்டும்?" என்று துரை கேட்டான்.

"துரையை எங்கே கொண்டு போகிறீர்கள்?" என்று கேட்டார் ஹரவல்லபர்.

"இந்தக் காட்டிற்கு."

"எதற்கு?"

"அங்கே கொண்டுபோய் விட்டுவிடத்தான்."

ரங்கராஜன் துரையைக் கரையில் கொண்டுபோய் விட்டு விட்டு, "நாங்கள் யாரையும் விடுதலை செய்கிறதில்லை. பிழைத்துப்போ, பிள்ளை குட்டிகளைப் பார்க்க! இனிமேல் எங்களிடம் வந்து வாலைக் காட்டாதே, தெரிகிறதா?" என்றான்.

துரைக்கு ஆச்சரியமாகப் போய்விட்டது. "இதுவும் ஒரு காலமா! வங்காளி வெள்ளைக்காரனை, விடுதலை செய்கிறதா!" என்று பிரமித்தான்.

"ஆமாம், ரங்கபுரம் வெகுதூரம் இருக்கிறதே, எப்படிப் போவீர்?"

"எப்படியாவதுதான்."

"வாடகைப் படகு பிடித்தோ, கிராமத்திற்குப்போய் குதிரை பிடித்தோ அல்லது பல்லக்கு பிடித்தோ போய்ச் சேரும். எங்கள் ராணி உமக்கு நூறு மோகர் வழிச் செலவிற்குக் கொடுத்திருக்கிறாள்."

ரங்கராஜன் மோகராக்களை எண்ணிக் கொடுக்கலானான்.

துரை ஐந்தைமட்டும் எடுத்துக்கொண்டு, "இது போதும், இதை நான் திருப்பி அனுப்பிவிடுகிறேன்" என்றான்.

"சரி, நாங்கள் உம்மிடம் ஏதாவது வேலையாக வந்தால் அப்பொழுது திருப்பிக் கொடுங்கள், உங்கள் சிப்பாய் யாராவது எங்களைக் கண்டுபிடிக்க முடிந்தால் அவனிடம் கொடுங்கள். உங்களில் யாராவது சாகவேண்டுமென்று விரும்பினாலும் அவர்கள் மூலம் கொடுத்தனுப்புங்கள்" என்று ரங்கராஜன் சிரித்துக்கொண்டு சொன்னான்.

"ஏன்? திருப்பித் தரவேண்டாமா?" என்று துரை ஆச்சரியத்துடன் கேட்டான்.

"இந்த மாதிரி நிலைமைகளில் ராணி தானங்கள்தான் செய்வாள். கொடுத்ததைத் திரும்பி வாங்குவது கிடையாது" என்று ரங்கராஜன் சொன்னான்.

துரை நம்பவில்லை. ஒன்றும் சொல்லாமல் போய்விட்டான்.

பிறகு ரங்கராஜன் பல்லக்குக்காரர்களைக் கூப்பிட்டு உத்தரவு கொடுத்தான்.

## பத்தாம் அத்தியாயம்

## மறு விவாகமா?

இந்த மாதிரி நிலைமை சுலபமாகிவிட்ட பிறகு கொஞ்சம் நிம்மதியடைந்தவனாய் விரஜன் மெள்ள தேவியின் அருகில் சென்றான்.

"பார்த்தீர்களா? எல்லாம் சரியாய்ப் போய்விட்டது! நீங்கள் சொன்னதற்குமேல் ஒன்றும் நடைபெறவில்லை. என்னை உயிருடன் இருக்கும்படி உத்தரவு செய்தீர்கள். ஆகையால் உயிர் தப்பிக்கொண்டேன். தேவி இறந்துவிட்டாள், தேவி சௌதுராணி இனிமேல் இல்லை. ஆனால் பிரபுல்லா இங்கே இருக்கிறாள். பிரபுல்லாவை ஏற்றுக் கொள்கிறீர்களா?" என்று தேவி மெல்லிய குரலில் சொன்னாள்.

விரஜன் பரவசமானான். பிரபுல்லாவை இழுத்துத் தன் மேல் சாய்த்துக்கொண்டான்.

"பிரபுல்லா நீ என் வீட்டிற்கு வா, என் வீட்டின் வெளிச்சமாக இரு, நீ வராவிட்டால் நான் போகமாட்டேன்" என்று வருத்தமாகக் கூறினான்.

"நான் வந்தால் என் மாமனார் என்ன சொல்லுவாரோ?" என்று பிரபுல்லா கேட்டாள்.

"அது என் பொறுப்பு. நான் பார்த்துக்கொள்ளுகிறேன்; அவரை முதலில் வீட்டிற்கு அனுப்பிவிடு. நாம் பின்னால் போவோம்.

"பல்லக்குக்கு ஆள் போயிருக்கிறதே!" என்றாள் தேவி.

பல்லக்கு வந்தது. ஹரவல்லபர் சந்தியாவந்தனம் முத லியவைகளைச் சுருக்கமாக முடித்துக்கொண்டார். நிசி தயா ராக பால், பழவகைகள் முதலியவற்றை வைத்துக்கொண்டு காத்திருந்தாள்.

"வாருங்கள். இப்பொழுது நீங்கள் சம்மந்தி ஆகப் போகிறீர்கள். பாலும் பழமும் எடுத்துக்கொள்ளவேண்டும்" என்றாள் நிசி.

"விரஜன் எங்கே? ராத்திரி வெளியே போனவனைக் காணோமே!"

"அவர்தான் என் தங்கை புருஷன் ஆகப்போகிறாரே! அவரைப்பற்றி நீங்கள் கவலைப்படாதீர்கள். அவர் இங்கே தான் இருக்கிறார். நீங்கள் கொஞ்சம் ஆகாரம் செய்து கொள்ளுங்கள். நான் அவரைக் கூப்பிடுகிறேன்; விஷயத்தை யும் அவருக்குச் சொல்லலாம்."

ஹரவல்லபர் ஆகாரத்திற்கு உட்கார்ந்தார். நிசி விரஜ னைக் கூப்பிட்டுக்கொண்டு வந்தாள்.

"அப்பா குழந்தாய்! நீ எப்படியடா இங்கே வந்தாய்? எனக்கு ஒன்றுமே தெரியவில்லையே! அது போகட்டும். இப் பொழுது நான் ஒன்று ஒப்புக்கொண்டுவிட்டேன். அதன்படி நடந்தாகவேண்டும். இந்தம்மாள் இருக்கிறாளே — நல்ல உயர்ந்த குலீன குடும்பம் — அவள் தகப்பனார் நமக்கு சம அந்தஸ்து உள்ளவர் — அவளுக்கு கலியாணமாகாத தங்கை ஒருத்தி இருக்கிறாளாம். வரன் கிடைக்கவில்லையாம், பாவம்! குலம் கெட்டுப்போய் விடாதா! அவர்களைக் காப்பாற்றுவது நமது கடமை. நீ மறுபடியும் கலியாணம் செய்துகொள்ள வேண்டும். உன் வயிற்றில் ஒரு குழந்தை பிறக்கவேண்டும். நான் சம்மதித்துவிட்டேன். அந்தப் பெண்ணை நீ கலியா ணம் செய்துகொள்" என்று மூச்சுவிடாமல் பேசினார் ஹர வல்லபர்.

"உத்தரவு" என்ருன் விரஜன் வணக்கமாக.

நிசிக்குச் சிரிப்புத் தாங்கவில்லை. எப்படியோ அடக்கிக் கொண்டாள்.

"பல்லக்கு வந்துவிட்டது. நான் முன்னுல் போய், கிருகப்பிரவேசத்திற்குத் தயாராகவிருக்கிறேன், நீ கலியாணம் செய்துகொண்டு வா" என்ருர் ஹரவல்லபர்.

"உத்தரவுப்படி!" என்று விரஜன் மறுபடியும் சொன்ஞன்.

ஹரவல்லபர் ஆகாரத்தை முடித்துக்கொண்டு உத்தரவு பெற்றுக்கொண்டார். பல்லக்கு ஏறினதும் அவர், 'அப்பாட, பிழைத்தோம்' என்று பெருமூச்சுவிட்டார். துர்க்கா நாமத்தை ஜபிக்க ஆரம்பித்தார்.

"பிசாசுகள் கையில் குழந்தை அகப்பட்டுக்கொண்டுவிட்டான். ஆனுல் கெட்டிக்காரப் பயல். எப்படியாவது தப்பித்துக்கொண்டுவந்து விடுவான்" என்று தனக்குள் சொல்லிக்கொண்டார்.

ஹரவல்லபர் போனதும் விரஜன் நிசியைப் பார்த்து, "இதென்ன சமாசாரம்? உங்களுக்கு ஒரு தங்கை இருக்கிருளா?" என்று கேட்டான்.

"தெரியாதா? இருக்கிருளே! அவள் பெயர்தான் பிரபுல்லா!"

"ஓகோ! தெரிந்தது, தெரிந்தது. இந்த வழியில் சம்பந்தம் ஏற்படுத்தி ராஜி செய்து வைக்கிறீர்களோ?"

"பெண்களுக்கு அநேக வழிகள் உண்டு."

"ஆனுல் என் தகப்பனுரை நான் ஏமாற்றமாட்டேன். ஊருக்குப் போய் எல்லாவற்றையும் அவருக்குச் சொல்லித்தான் ஆகவேண்டும். தெரிகிறதா?"

"சொன்னுல் உங்கள் தகப்பனுர் தேவி சௌதுராணியை வீட்டிற்குள் விடுவாரா?" என்று நிசி கேட்டாள்.

"தேவி சௌதுராணி யார்?—தேவி சௌதுராணி இறந்துவிட்டாள். இனிமேல் அவள் பேச்சை என் முன்ஞலோ, வேறு எங்கோ எடுக்காதே! தெரியமா?" என்றாள் தேவி உடனே குறுக்கிட்டு.

"பிரபுல்லாவை அவர் — அவள் புருஷன் — ஏற்றுக் கொள்ளுவாரா?" என்று நிசி கேட்டாள்.

"அதான் சொன்னேனே, அது என் பொறுப்பு" என்றான் விரஜன்.

பிரபுல்லா சந்தோஷம் அடைந்தாள்.

# பதினேராம் அத்தியாயம்

## தோழிகள் பிரிவு

பிறகு பூதநாதத்திற்குப் புறப்பட ஏற்பாடுகள் ஆரம்பமாயின. ரங்கராஜனுக்கு அங்கேயே உத்தரவு கொடுத்துத் திருப்பி அனுப்ப வேண்டியதென்று தீர்மானமாயிற்று.

ரங்கராஜன் கண்ணீர் விட்டுக் கலங்கினுன்.

"அம்மா நீங்கள் என்னைக் கைவிட்டுவிட்டால் எனக்கு வாழ்க்கையில் வேறு ருசியில்லை" என்றுன்.

ஆனல் ராணி அவனைச் சமாதானப்படுத்தினுள். தேவிக் கோட்டையில் தேவிக்குச் சொந்தமான சில சொத்துக்கள் இருந்தன. அவை யாவற்றையும் தேவி ரங்கராஜனுக்கு அளித்து, "ரங்கராஜ்! நீ அங்கேபோய் இரு. ஈசுவரன் துணையிருக்கிறது; அவன் பிரசாதத்தை உண்டு காலங்கழி. இனிமேல் கையில் தடி எடுக்காதே. பரோபகாரம் செய்; ஆனல் பிறரை இம்சிக்காதே! கொள்ளைமூலம் பரோபகாரம் செய்வது கூடாது. துஷ்டர்களை அரசன் அடக்காவிட்டால் ஈசுவரன் அடக்குவார், சந்தேகமில்லை. நீயும் நானும் யார் அதற்கு? நல்லோரைக் காப்பாற்ற வேண்டுமானல் செய்; ஆனல் துஷ்டர்களைச் சிக்ஷிக்கும் பொறுப்பை ஈசுவரனுக்கு விட்டுவிடு. இப்படி நான் சொன்னதாக பவானி டாகுர்ஜியிடமும் சொல். அவருக்கு என் கோடி கோடி நமஸ்காரங்களைத் தெரிவி" என்று பிரபுல்லா வெகு உருக்கமாக அவனுக்குக் கடைசி உபதேசம் செய்தாள்.

அவன் அழுதுகொண்டே உத்தரவு பெற்றுக்கொண்டான். திவாவும் நிசியும் பூதநாத கட்டம் வரையில் வந்தார்கள். அதே ஓடத்தில் திரும்பிப்போய் தேவிக்கோட்டையில் பிரசாதம் உண்டு வாழவேண்டியது என்று அவர்களுக்கு ஏற்பாடு. ஓடத்திலேயே தேவிக்கு யதேஷ்டமாக சொத்து இருந்தது—அதைப் பூராவும் தேவி, திவாவுக்கும் நிசிக்கும் கொடுத்துவிட்டாள்.

"உங்களுக்கு வேண்டியதை எடுத்துக்கொள்ளுங்கள். பாக்கியை ஏழைகளுக்கு வினியோகம் செய்துவிடுங்கள். எனக்கு அதில் கொஞ்சங்கூட வேண்டாம். நான் இதில் ஒன்றுகூட எடுத்துக்கொண்டு போகமாட்டேன்" என்றாள் பிரபுல்லா.

"அம்மா! ஒரு நகைகூட மேலே இல்லாமலா நீ புக்ககம் போவது?" என்று நிசி கேட்டாள்.

தேவி விரஜனைக் காண்பித்து, "பெண்களுக்கு இந்த ஆபரணம் எல்லாவற்றிற்கும் மேலானது. வேறு ஆபரணம் எதற்கு?" என்றாள்.

"நீ இன்று, முதல்முதலாக, புக்ககம் போகிறாய். நான் உனக்குக் கொஞ்சம் சீர்செய்து அனுப்புகிறேன்" என்று சொல்லி, நிசி தனது விலையுயர்ந்த ஆபரணங்கள் சிலவற்றை எடுத்து தேவிக்குப் போட்டாள். நிசி ஒரு ராணியுடன் கூட இருந்தபொழுது அவள் நிசிக்கு நிறைய ஆபரணங்கள் கொடுத்தாள் என்பது வாசகர்களுக்கு நினைவிருக்கலாம்.

எல்லாம் செய்து முடிந்தது. பிரபுல்லா அழுதாள். அழாமல் இருக்க முடியுமா? ஆனால் அந்தச் சந்தர்ப்பத்தில் பிரபுல்லாவின் உள்ளம் சந்தோஷத்தால் பூரித்தும் இருந்தது. இந்த நிலைமை சகஜந்தானே? பெண்கள் மூவரும் ஒருவரையொருவர் உயிர்போல நேசித்தார்கள். பிரபுல்லா அவர்களை விட்டுப் பிரிவதால் துக்கமடைந்தாள். புருஷன் வீட்டிற்குப்

போகும் எண்ணம் அவள் உள்ளத்தை ஒருபக்கம் சந்தோஷப் படுத்திற்று.

பூதநாதகட்டம் வந்துசேர்ந்தது. தோழிகள் உத்தரவு பெற்றுக்கொண்டார்கள்; கண்ணீர் பெருக்கிக்கொண்டே அதே ஓடத்தில் தேவிக்கோட்டைக்குத் திரும்பினார்கள்.

தேவி வரகந்தாஜ் சைனியத்திற்கும் விடைகொடுத்து அனுப்பினாள். ஓடங்களையெல்லாம் விற்றாள். அவை எதற்கு அதற்கு மேல்?

## பன்னிரண்டாம் அத்தியாயம்

# குடும்ப ஓடம்

பூதநாதத்தில் போய் பிரபுல்லா இறங்குவதற்குள் ஊரெல்லாம் ஒரே ரகளையாகிவிட்டது. விரஜன் மற்றொரு கலியாணம் செய்துகொண்டு வந்திருக்கிறான் என்று எங்கும் பிரஸ்தாபம். கிழவர்கள், சிறுவர்கள் எல்லோரும் பெண்ணைப் பார்க்கப் புறப்பட்டுவிட்டார்கள்.

பெண்ணும் மாப்பிள்ளையும் மணைமேல் உட்கார்ந்தார்கள். மாமியார் வந்து பெண்ணை 'வரணம்' செய்தாள். பெண்ணின் முகம் முக்காடால் மூடப்பட்டிருந்தது. யாரும் முகத்தைப் பார்க்க முடியவில்லை. மாமியார் மட்டும் வரிக்கிற சமயத்தில் முக்காட்டை நீக்கி ஒருதரம் பெண்ணின் முகத்தைப் பார்த்தாள். ஒருதரம் உலுக்கி விழுந்தாள்; ஆனால் அவள் வேறு ஒன்றும் சொல்லவில்லை.

"சௌக்கியமா குழந்தாய்?" என்றாள் மெதுவாக. அவள் கண்களில் ஜலம் வந்தது.

வந்திருந்த எல்லோரையும் பார்த்து அந்தம்மாள், "நாட்டுப்பெண் வெகு தூரத்திலிருந்து வந்திருக்கிறாள். ரொம்ப பசியும் தாகமுமாக இருக்கும். நான் உடனே ஏதாவது ஆகாரம் கொடுக்கவேண்டும். குழந்தை இங்கேதான் இருக்கப்போகிறாள். நீங்கள் தினமும் பார்க்கப் போகிறீர்கள். இப்பொழுது கொஞ்சம் மன்னிக்கிறீர்களா? வீட்டுக்குப் போய்வாருங்கள்" என்று மரியாதையாகச் சொன்னாள்.

இதனால் மனஸ்தாபங்கொண்ட ஊர் ஜனங்கள் வீட்டுக் காரியை ஏதேதோ திட்டிக்கொண்டே போய்ச் சேர்ந்தார்கள். பெண்ணைப்பற்றிய நிந்தனைதான் அதிகமாக இருந்தது. ஏனென்றால் அவர்கள் அவள் முகத்தைப் பார்க்கமுடியவில்லை.

"அதென்னடீது? அதென்னவோ ரொம்பநாள் கலியாணமாகாமல் கிடந்ததாம் பெண். இவர்கள் போய் அதைக் கட்டிக்கொண்டு வந்திருக்கிறார்கள். என்ன எழவோம்மா! என்னென்னவோ சொல்லுகிறார்கள். யார் கண்டார்கள் கூத்தை!" இந்த மாதிரி கதைகள் ஊர் பூராவும் பரவின.

தாயார் மகனைத் தனியாகக் கூப்பிட்டாள். விரஜன் தாயாரிடம் வந்து, "என்ன அம்மா?" என்றான்.

"இவள் எங்கே கிடைத்தாள் அப்பா!" என்று அவள் கேட்டாள்.

"இவள் புதுப்பெண் அல்ல அம்மா!"

"களவுபோன செல்வத்தை கண்ணே எப்படியடா திருப்பிக்கொண்டு வந்தாய்?" என்று மறுபடியும் அவள் கேட்ட பொழுது அவள் கண்களில் நீர் பெருகிற்று.

"அம்மா, ஈசுவரன் கிருபை செய்து மறுபடியும் அவளை நமக்கு அளித்தார். நீங்கள் இப்பொழுது அப்பாவிடம் சொல்லாதேயுங்கள். பிறகு நானே எல்லாவற்றையும் அவரிடம் சொல்லுகிறேன்."

"நீ ஒன்றும் சொல்லக்கூடாது. நானே எல்லாம் சொல்லுகிறேன். இதை நீ வேறு யாரிடமும் சொல்லாதே."

விரஜன் ஒப்புக்கொண்டான்.

கிருகப்பிரவேசம் யாதொரு விசேஷமுமின்றி நடந்தது. பொறுக்காகச் சில பந்துக்கள் வந்திருந்தார்கள்.

அதற்குப்பிறகு விரஜனின் தாயார் உண்மைவரலாற்றை ஹாரவல்லபருக்குத் தெரிவித்தாள். "இவள் புது நாட்டுப் பெண் அல்ல; நம் மூத்த நாட்டுப்பெண் —"

தாக்கும் புலி பாணத்தால் அடிபட்டவுடன் துள்ளி எழுவதுபோல் ஹரவல்லபர், "ஆ...அதே மூத்த நாட்டுப் பெண்ணு?......யார் சொன்னார்கள்?" என்று கத்தினர்.

"எனக்குத் தெரியும். விரஜனும் சொன்னான்."

"அவள் தான் முன்பே இறந்துவிட்டாளே?"

"செத்தவர்கள் எங்காவது திரும்பி வந்திருக்கிறார்களா?

"இத்தனைநாள் அவள் எங்கே யாருடன் இருந்தாள்?"

"அதை நான் விரஜனிடம் கேட்கவும் கூடாது. விரஜன் எப்பொழுது அவளை வீட்டிற்கு அழைத்துக்கொண்டு வந்திருக்கிறானே, தெரியாமல் அவன் கொண்டு வரமாட்டான்."

"நான் கேட்கிறேன்."

"நீங்கள் ஒருவார்த்தைகூடக் கேட்கக் கூடாது. நீங்கள் ஒருதரந்தான் ஒரு வார்த்தை சொன்னீர்கள். நான் என் கண்மணியை இழந்தேன், எனக்கு ஒரு குழந்தை. நீங்கள் ஏதாவது கேட்டுச் செய்தால் நான் பிராணனை விட்டுவிடுவேன்."

"சரி, எல்லோரிடமும் புதுப் பெண் என்றே சொல்."

"அப்படித்தான் இருக்கட்டுமே!"

விரஜனிடம் தாயார் நடந்ததைச் சொல்லி, "நான் உன் தகப்பனாரைச் சரிப்படுத்திவிட்டேன். நீ அவரிடம் அனுவசியமாக ஒன்றும் சொல்லாதே" என்று சொல்லிவிட்டாள்.

விரஜன் அசமகிழ்ந்து செய்தியைப் பிரபுல்லாவிடம் தெரிவித்தான்.

வீட்டுக்காரியம்மாள் தன் பொறுப்பை வெகு அழகாகச் செய்தாள் அல்லவா? எந்த வீட்டில் வீட்டிற்குப் பெரியவள் இந்தமாதிரி தன் பொறுப்பைச் செலுத்துகிறாளோ அந்த வீட்டில் தொல்லைகள் கிடையாது. மாலுமி கெட்டிக்காரனா யிருந்தால் ஓடத்தைப்பற்றி கவலை எதற்கு?

## பதின்மூன்றும் அத்தியாயம்

# ஸ்திரீ தர்மம்

பிரபுல்லா ஸாகராவைப் பார்க்கவேண்டுமென்று துடித்துக்கொண்டிருந்தாள். இதை அறிந்து விரஜன் தாயாரிடம் சொன்னான். அவள் ஸாகராவைக் கூட்டிக்கொண்டு வர ஆள் அனுப்பினாள். கூப்பிடவந்த ஆள், விரஜன் ஒரு வங்காளப் பெண்ணைக் கலியாணம் செய்துகொண்டு வந்திருப்பதாக அங்கே சொன்னான். அவளுக்கு ரொம்பக் கோபம் வந்தது. "மறுபடியும் கலியாணமா? நான் மனைவியில்லையா?" என்று துக்கப்பட்டாள்.

மாமியார் வீட்டிற்கு வந்ததும் முதலில் ஸாகரா நயனதாராவிடம் சென்றாள். இரண்டு பேருக்கும் ஆகவே ஆகாது. ஆனால் இன்று இருவரும் ஒன்றாகிவிட்டார்கள். இருவருக்கும் ஒரே ஆபத்து. நயனதாராவோ சீறிக்கொண்டேதான் இருந்தாள் பிரபுல்லா வந்ததுமுதல். ஒரு தரம்மட்டும் அவள் விரஜனைத் தனியாகக் கண்டுவிட்டாள். விரஜன் ஓடியே போய்விட்டான். பிறகு கண்ணில் படவே இல்லை.

"வா, வா! நீதான் பாக்கியாக இருந்தது. இன்னும் வேறு இல்லையா?" என்றாள் நயனதாரா.

"என்னடி இது? என்ன அப்படிச் சொல்லுகிறாய்? எவ்வளவு பேரைத்தான் கலியாணம் செய்து கொள்ளுகிறது? ஜாதிப் பிரஷ்டம் செய்துவிட்மாட்டார்களோ?"

"அதற்குப் பயந்தால் இவ்வளவு பெரிய பெண்ணை என் கலியாணம் செய்துகொண்டு வருகிறார்கள்?"

"ரொம்ப பெரியவளா? நம் வயது இருக்குமா?"

"உங்களம்மா வயது."

"தலை நரைத்துவிட்டதா?"

"அதென்ன எழவோ! எப்பொழுது பார்த்தாலும் முக்காடு போட்டுக்கொண்டு இருக்கிறாள் அம்மா. ஒன்றும் தெரியவில்லை."

"பல் விழுந்துவிட்டதா?"

"யார் கண்டார்கள்? பார்க்க முடிந்தால்தானே?"

"அப்படியானால் அந்தத் தங்க விக்கிரகத்தை நான் பார்த்துவிட்டு வருகிறேன்" என்று சொல்லிக் கிளம்பினாள்.

பிரபுல்லா இருந்த இடத்திற்குப் போய், "என் அம்மா, நீதானே எங்கள் புது நாட்டுப்பெண்?" என்று கேட்டாள்.

"என்ன ஸாகரா?" என்று சொல்லிக்கொண்டு முக்காடை எடுத்தாள் பிரபுல்லா.

"தேவி ராணி!" என்று ஆச்சரியத்துடன் கத்தினாள் ஸாகரா.

"வாயை மூடு. தேவி இறந்துபோய்விட்டாள்."

"பிரபுல்லா!"

"பிரபுல்லாவும் இறந்துவிட்டாள்."

"பின்?"

"நான் புதுப்பெண்."

"இதெல்லாம் எப்படி நடந்தது? எனக்கு எல்லாவற்றையும் சொல்."

"இது சொல்லுவதற்கு சரியான இடமில்லை. எனக்கு ஒரு அறை இருக்கிறது. அங்கே போவோம் வா. எல்லாம் சொல்லுகிறேன்."

இருவரும் கதவைச் சாற்றிக்கொண்டு தனியாக இருந்து கொண்டு பேசினார்கள். பிரபுல்லா ஸாகராவுக்கு எல்லாவற்றையும் சொன்னாள்.

"இந்த மாதிரிக் குகை உனக்கு எப்படிப் பிடித்தது? வெள்ளிச் சிம்மாஸனத்தில் உட்கார்ந்துவிட்டு, வைர கிரீடம் தரித்துவிட்டு, இங்கா வந்து இருப்பது? யோக சாஸ்திரங்களைக் கற்றறிந்த பிறகு அத்தையம்மாளின் கதைகளையா கேட்க வந்திருக்கிறாய்? இரண்டாயிரம் வீரர்களைக் கீழே வைத்து நடத்திவிட்டு இங்கே வந்து—"

"இது மேல் என்றுதான் வந்துவிட்டேன். இந்த தர்மம் தான் பெண்களின் தர்மம். ராஜத்துவம் பெண்களின் தர்மம் அல்ல. சம்சார தர்மம் மிகவும் கடினமானது. இதைப் போல எந்த யோகமும் அவ்வளவு சிரமம் அல்ல. பார்; தினம் எவ்வளவு அறிவிலிகளுடனும் அல்பர்களுடனும், சுயநலக்காரர்களுடனும் பழகவேண்டி யிருக்கிறது? இவர்கள் யாருக்கும் கஷ்டம் ஏற்படக்கூடாது—எல்லோருக்கும் சுகமாக இருக்கவேண்டும்—அந்த முயற்சி செய்யவேண்டும். அது தான் முக்கியம். இந்த வேலையைக் காட்டிலும் சர்வ சங்க பரித்தியாகம் சிரமமா என்ன? இதைக் காட்டிலும் வேறேது புண்ணியம்? அதனால்தான் நான் இங்கே வந்தேன்."

"நான் உன்னுடன் இருந்து உன் சிஷ்யை ஆகிறேன்" என்றாள் ஸாகரா பிரபுல்லாவைத் தழுவிக்கொண்டு.

## பதினான்காம் அத்தியாயம்

## புராதன சக்தி

சில மாதங்களுக்குள் பிரபுல்லா தான் சொன்னபடியே செய்ததைக் கண்டாள் ஸாகரா. வீட்டில் எல்லோரும் சுகமாக இருந்தார்கள். மாமியார் பிரபுல்லாவிடம் சம்சாரத்தின் பொறுப்பு பூராவையும் விட்டுவிட்டு ஸாகராவின் குழந்தையை இடுப்பில் எடுத்துக்கொண்டு திரிந்து கொண்டிருந்தாள்.

நாள் போகப் போக மாமனார் நாட்டுப் பெண்ணின் குணங்களை அறிந்தார். கடைசியில் பிரபுல்லா செய்யாத காரியம் அவருக்குத் திருப்தியாக இராது. இருவரும் அவளைக் கேட்காமல் ஒரு காரியமும் செய்வதில்லை. அவளுடைய யோசனையில் அவ்வளவு மதிப்பு ஏற்பட்டுவிட்டது அவர்களுக்கு. நயனதாரா கூட அவளிடம் அடங்கி நடந்தாள். அவள் அனுமதியின்றி அவள் ஒரு காரியமும் செய்வதில்லை. நயனதாரா தன் குழந்தைகளை பிரபுல்லாவிடம் ஒப்புவித்துவிட்டாள். ஸாகரா, பிறந்தகத்திற்கு அதிகமாகப் போவதே கிடையாது. பிரபுல்லாவுடன் கூட இருப்பது போன்ற சுகத்தை அவள் வேறெங்கும் காணவில்லை.

வேறு யாராவது இவ்வளவு செய்திருந்தால் ஆச்சரியப்படவேண்டும். பிரபுல்லா செய்ததில் ஆச்சரியமே இல்லை. ஏனென்றால், பிரபுல்லா வீட்டிலும் நிஷ்காம தர்மம் அப்பியாசம் செய்துவந்தாள். அவள் வீட்டிலிருந்தாலும் உண்மை

யாக சன்னியாசினி போல இருந்தாள். அவளுக்கு ஒரு ஆசையும் கிடையாது. காரியம் செய்வதிலேயே ஈடுபட்டிருந் தாள். பிரபுல்லா பற்றுதலன்றியும் சிரத்தையுடனும் கர்மா செய்தாள். எனவே, அவள் உண்மையான சன்னியாசினி. அதனால் பிரபுல்லா தொட்டதெல்லாம் தங்கமாயிற்று.

பிரபுல்லா சில சமயங்களில் விரஜனுடன் வாதாடு வாள்.

"உங்களுக்கு நான் ஒருத்தி மட்டும் மனைவி அல்ல. நீங்கள் எனக்கு எப்படியோ அப்படித்தான் ஸாகராவுக்கும் நயனதாராவுக்கும். நான் தனியாக உங்களிடம் போக சௌக்கியம் பெறுவது சரியல்ல. பெண்களுக்கு புருஷன் தேவதை. உங்களை ஆராதிக்க அவர்களுக்கு உரிமையில்லையா யென்ன?" என்பாள்.

விரஜன் அதை மட்டும் காதில் போட்டுக்கொள்ளுவ தில்லை.

அவன் ஹிருதயம் பிரபுல்லா மயமா யிருந்தது. அவன் என்ன செய்வான்?

அவளுடைய விஷய ஞானம், புத்தி விசாலம், நல்ல யோசனை, சக்தி எல்லாம் சம்சாரத்திற்கு இன்றியமையாதன வாக இருந்தன. ஜமீன்தாரி விஷயத்தில் ஏதாவது தகராறு ஏற்பட்டால் உடனே ஹரவல்லபர் அகமுடையாளிடம் போய் "நம்ம பெரிய குழந்தை என்ன சொல்லுகிறாள் இதைப் பற்றிக் கேள்!" என்பார். அவள் யோசனையின்படி எல்லாம் நடந்ததால் வீட்டில் ஐசுவரியம் பொங்கிற்று. தனமும் சுக மும் பொங்கி ஹரவல்லபர் வயதாகி பரலோக மடைந்தார்.

விரஜன் யஜமானனானன். பிரபுல்லா, "நீங்கள் கடன் வாங்கின ஐம்பதினாயிரத்தை இப்பொழுது கொடுங்கள்" என்றாள்.

"ஏன், உனக்கு அது எதற்கு?"

"நான் ஒன்றும் செய்யப் போவதில்லை. ஆனால் பணம் என்னுடையதல்ல. பரமாத்மாவினுடையது. ஸ்ரீ கிருஷ்ண னுடையது. அவருக்கு சமர்ப்பித்து விடவேண்டும்."

"எந்த மாதிரி?"

"ஒரு சத்திரம் கட்டவேண்டும்."

விரஜன் அப்படியே செய்தான். அதன் நடுவில் அன்ன பூர்ணா விக்கிரகத்தை ஸ்தாபனம் செய்து சத்திரத்திற்கு "தேவி நிவாஸம்" என்று பெயர் வைத்தான்.

ஆங்கிலேயர் நாட்டைக் கைப்பற்றிக்கொண்டார்கள். நாட்டில் நீதியையும் ஸ்தாபித்தார்கள். பவானி டாகுரின் எண் ணம் நிறைவேறிற்று. துஷ்டர்களை ராஜாவே அடக்க ஆரம் பித்தான். பவானி டாகுர் கொள்ளைத்தொழிலை விட்டார். ஆங்கிலேயரிடம் சென்று பிடிபட்டார். அவருக்கு தீவாந் திர சிட்சை விதிக்கப்பட்டது. அவர் நிம்மதியான மனத் துடன் சென்றார்.

"அம்மா, பிரபுல்லா! இப்பொழுது இந்த நாட்டில் நீ மறு படியும் அவதரிக்கவேண்டும்! நாங்கள் உன்னை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறோம். மறுபடியும் இந்த இந்திய சமூகத்தின் தலைமையில் நீ நின்றுகொண்டு, 'நான் புதியவள் அல்ல, நான் புராதன சக்தி. நான் ஒரு வாக்கியத்தின் பொருள். எவ்வளவு தரம் வருகிறேன்! நீங்கள் மறந்துவிடுகிறீர்கள். ஆகையால் நான் மறுபடியும் வந்திருக்கிறேன்' என்று சொல்லி எங்கள் உயிரை எழுப்பு, தாயே!"

परित्राणाय साधूनां विनाशाय च दुष्कृताम् ।
धर्मसंस्थापनार्थाय संभवामि युगे युगे ॥

முற்றும்.

## சந்தனக்காவடி முதலிய கதைகள்

### தி. ஜ. ர. எழுதியவை

:: இந்நூலைப்பற்றிய சிறப்புரைகள் ::

பாரதமணி:—நம் நாட்டு வாழ்க்கையின் அழகான அம்சங்களை ஆராய்ந்து இனிய நடையில் சித்திரங்கள் சிருஷ்டி செய்யும் சக்தி பெற்றவர் தி. ஜ. ர. என்பதற்கு இப்புத்தகத்தில் பரிபூரண அத்தாட்சி இருக்கிறது.

தாருல் இஸ்லாம்.— உயிருள்ள இச் சிறு கதைகள் மூலம் இதனாசிரியர் மனித வாழ்வையே சித்திரத்துள்ளதுடன், வாழ்வின் உயர்வைக் கதைகளின்மூலம் சமூகத்தினருக்குப் புலப்படுத்துகிறார்.

சித்ரவாணி.— கரடு முரடற்ற இலகுவான நடை; தெளிவு நிறைந்த விகாசம்; சிந்தனையைத் தூண்டும் கருத்துகள். இவை தாம் அவர் கதைகளுக்குள்ள விசேஷ யோக்யதைகள்.

கலைமகள்.— ஒவ்வொன்றும் நெஞ்சை அள்ளும்படியாக அமைகின்றது. சுவை ததும்பும் அபூர்வ இலக்கிய சிருஷ்டிகள்.

குமரன்.—நம் நாட்டு வாழ்க்கையைப் பிரதிபலிக்கும் இக் கதைகள், இனிய தெள்ளிய நடையில் எழுதப்பட்டிருக்கின்றன.

ஊழியன்.—தமிழர்கள் படிக்கவேண்டிய கதைகள்.

சுதேசமித்திரன்.— கதைகள் யாவும் ஸ்வாரஸ்யமாய்ப் பின்னப்பட்டிருக்கின்றன.

மணிக்கொடி.—தி. ஜ. ர. வின் கதைகள் ஒவ்வொன்றும் ஓர் அழகிய உண்மை.

ஹிந்துஸ்தான்.—சிறப்பான தமிழ்க் கதைகள்.

ஹனுமான்.—இக் கதைகள் தமிழில் சிரஞ்சீவித் தன்மை பெறக்கூடியவை.

தினமணி.— எட்டுக் கதைகளும் வாசித்து அனுபவிக்க வேண்டியவையே.

ஜயபாரதி.—இவைகள் சுத்த சுதேசிக் கதைகள்.

சினிமா உலகம்.— ஒவ்வொரு கதையும் ஒவ்வொரு தனிச்சுவையை அள்ளித் தருகின்றது.

---

தமிழ் நாட்டுச் சிறு கதைகள் — தொகுதி 3

ஸ்ரீ த. நா. குமாரசுவாமி, பி.ஏ., இயற்றியவை.

சுவை ததும்பும் பதினோரு கதைகள் கொண்டது

(1) கன்யா குமாரி
(2) ராமராயன் கோயில்
(3) மணிச்சுடர்
(4) வேதாச்ரமம்
(5) ஸ்ரீசைலம்
(6) வைணிகர்
(7) க்ரூர உலகம்
(8) சட்டப் பரீக்ஷை
(9) தீபாவளி தந்தி
(10) தெய்வ சங்கல்பம்
(11) கண் இழந்த காதல்

ஒவ்வொரு கதைக்கும் சித்திரப் படம் உண்டு.

ஏற்கெனவே, ஸ்ரீ குமாரசுவாமி, பி. ஏ., அவர்கள் விஷ விருக்ஷம், ஆனந்த மடம், மாதங்கினி, ஸௌதாமினி முதலிய நூல்களை, வங்காளியிலிருந்தே இனிய தமிழில் மொழிபெயர்த்து, தமிழன்பர்களின் நன்மதிப்பைப் பெற்றவர். மேற்கண்ட கதைகள் ஒவ்வொன்றும் மிகவும் அருமையானவை. படிக்கப் படிக்க மிக்க ருசி ஊட்டுபவை. உங்கள் பிரதிக்கு, தாமதியாது உடனே எழுதிக்கொள்ளவும்.

சாதாரண பைண்ட் அணு 12 :: கலிகோ பயிண்ட் ரூ. 1

---

அல்லயன்ஸ் கம்பெனி, மயிலாப்பூர், சென்னை.

தமிழ் நாட்டுச் சிறு கதைகள் — தொகுதி 2

சென்னை அரசாங்க முதல் மந்திரி

ராஜாஜி எழுதிய

# குட்டிக் கதைகள்

இந்நூலில் அடங்கியவை :—

(1) தேவானை
(2) அன்னையும் பிதாவும்
(3) திக்கற்ற பார்வதி
(4) ஜகதீச சாஸ்திரிகள் கனவு
(5) அறியாக் குழந்தை
(6) முகுந்தன்
(7) தீபாவளியில் தேவ தரிசனம்
(8) எலக்ஷன் கதை
(9) சோதிடம் பொய்யாகுமா?
(10) வேணுகானம்
(11) பட்டாசுக் கட்டு